

# ஈரோடு தமிழ் இலக்கியப் பேரவை மலர்



1964

விலை ரூ. 1—50

# ஈரோடு தமிழ் இலக்கியப் பேரவை

## செயற்குழுவினர்

தலைவர் : **வி. பழனியப்ப செட்டியார்,**
காமதேனு டெக்ஸ்டைல்ஸ், ஈரோடு.

துணைத் தலைவர் : **குமாரி எம். முத்தையா,** பி. ஏ., பி. டி.,
தலைமை ஆசிரியை, கலைமகள் கல்வி நிலையம் மகளிர் உயர்நிலைப்பள்ளி,

,, **கே. ஏ. எஸ். காதர் சாயபு,**
தலைவர், உணவு தானிய வர்த்தகர் சங்கம், ஈரோடு.

செயலாளர் : **கே. வி. சுப்பிரமணியம்.**

துணைச்செயலாளர் : **எம். வெங்கடாசலம்.**

,, **எம். முத்து.**

பொருட்காப்பாளர் : **கே. நடராச செட்டியார்,**
கார்த்திகேயன் & கோ, இரும்பு வியாபாரம், ஈரோடு.

உறுப்பினர் : **ஆர். நாராயணசாமி,**
செயலாளர், திருநகர் கூட்டுறவு ஸ்டோர், ஈரோடு.
தலைவர், ஆயுள் இன்சூரன்ஸ் ஏஜண்டுகள் சங்கம், ஈரோடு

,, **கேசவலால் காளிதாஸ் சேட்,**
துணைத்தலைவர், தமிழ்நாடு வர்த்தகர் கழகம்.

,, **ப. கோவிந்தராசு.**

,, **சி. அம்பாயிரம்,**
ஈரோடு நகரமன்ற உறுப்பினர் &
சென்னை மாநில சாய அச்சு சலவைத் தொழிற்சாலையாளர் சங்க செயலாளர்

,, **கே. சின்னசாமிக் கவுண்டர்,** பி. ஏ., பி. எல்.,

,, **எஸ். ஆர். சென்னியப்ப செட்டியார்,**
ஸ்ரீ கந்தன் சுதேசி ஸ்டோர்ஸ், ஈரோடு.

,, **எம். ஜான் சுந்தரராஜ்,** பி. ஏ., பி. டி.,
தலைமை ஆசிரியர், தெ. இ. தி. ச. உயர்நிலைப்பள்ளி, ஈரோடு.

,, **ஆர். எம். அப்துல் காதர்,** பி. ஏ.,
செயலாளர், உணவு தானிய வர்த்தகர் சங்கம், ஈரோடு.

# பதிப்புரை

தண்டமிழ் நலம் பேணும் தகைசான்ற நோக்கோடு இவ்விலக்கியப் பேரவை நான்காண்டுகட்கு முன்னர் நிறுவப்பெற்றது. அந்நாள் தொட்டு இந்நாள்வரை நாள்தோறும் வகுப்புகளும், திங்களிருமுறை இலக்கியக் கூட்டங் களும், ஆண்டுக்கொருமுறை இலக்கிய விழாக்களும் செவ்வையாய் நடாத்தப் பெற்று வருகின்றன.

இந்நிலையில் இவ்வாண்டு ஆண்டு நிறைவு விழாவையொட்டி இம்மலர் வெளியிடப் பெறுகின்றது. தமிழுலகின் தலையாய அறிஞர் பலரின் எழுத்தோவி யங்கள் இம்மலரை அணி செய்கின்றன. கேட்பன கேட்டுக் கிளர்ந்தெழும் உணர்வினர்க்குக் கற்பன கற்கக் கருத்து விருந்தளிக்கும் பெட்டகம் இம்மலர். இதனைத் தமிழுலகம் ஏற்றுப் போற்றி எம்மை இத்தமிழ்ப் பணியில் ஊக்குவிக்கு மென நம்புகிறோம்.

எம் வேண்டுகோட்கிணங்கி மனமுவந்து கருத்தோவியங்கள் அளித் துதவிய அறிஞர்கட்கும், விளம்பரங்கள் கொடுத்துதவிய வணிகப் பெரு மக்கட்கும் உள்ளார்ந்த நன்றியை உரிமையாக்குகின்றோம்.

உயர்வு சான்ற இம்மலர் உருவாவதற்கு உறுதுணையாயிருந்துதவிய உழுவலன்பர்கள் வித்துவான் திரு. ந. செகதீசன் (தமிழன்பன்), வித்துவான் திரு. செ. இராசு, வித்துவான் திரு. சி. கமாலுதீன் ஆகியோருக்கும் எங்கள் உளமார்ந்த நன்றியை உரிமையாக்கிக் கொள்கிறோம்.

கருத்திற்கு அணியான கட்டுரை, கவிதைகளைக் கைக்கும் கண்ணுக்கும் அணியான முறையில் அச்சிட்டளித்த கோவை கைத்தறி அச்சகத்தார்க்கு உள்ளார்ந்த நன்றி.

நான்காம் ஆண்டு விழாவின் முதல் நாளன்று இம்மலரை வெளியிட்டுச் சிறப்பித்த சென்னை மாநிலக் கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கத் தலைவர் திருவாளர் எம். பி. நாச்சிமுத்து முதலியார் பி. ஏ., பி. எல்., அவர்கட்கு எங்கள் உளங் கனிந்த நன்றி.

தமிழ்ச்சுவை மாந்தும் அன்பர்கள் இம்மலரை வாங்கிப் பயன்பெறுமாறு வேண்டிக்கொள்கிறோம்.

ஈரோடு,
*23—10—1964.*

இன்னணம்,
**இலக்கியப் பேரவையினர்.**

**ராய. சொக்கலிங்கன்**

காரைக்குடி-3
இராமனுதபுரம் மாவட்டம்

ஈரோடு தமிழ் இலக்கியப் பேரவை, சில ஆண்டுகளாகச்சிறந்த தொண்டுகள் செய்து வருகின்றது. இலக்கிய வளர்ச்சி கருதி, அடிக்கடி கூட்டங்கள் நடாத்தியும், ஆண்டு விழாக்களை மிக்க சிறப்போடு நடாத்தியும் இவ்வவை இசை பெற்றிருக்கிறது. இவ்வாண்டு இவ்வவை மலர் ஒன்று வெளியிடும் புதிய முயற்சியைப் பாராட்டுகின்றேன். ஈரோடு தமிழ் இலக்கியப் பேரவை, சிறந்த பல தொண்டு செய்து, பழந்தமிழ் இலக்கியங்களைப் பேணி வளர்த்துப் பல்லாண்டு வாழ்ந்து உயரக் கூத்தப்பெருமான் அருள்வானுக.



அன்புள்ள,
*ராய. சொ.*

**நெ. து. சுந்தரவடிவேலு**
மாநிலப் பொதுக்கல்வி இயக்குநர்

சென்னை - 6,
22—8—1964.



அன்புடையீர்,

இலக்கியப் பணிபுரியும் தமிழ் இலக்கியப் பேரவையின் நான்காம் ஆண்டு நிறைவு விழா கொண்டாடுவது அறிய மகிழ்ச்சி! அதுகாலை வெளிவரும் ஆண்டு மலர், நாட்டுக்கும் சமுதாயத்துக்கும் நன்மைபல பயக்கும் பலபல எழுத்தோவியங்கள் தாங்கி, வெளிவருவதும் சாலப் பொருந்தும்.

மேலும் மேலும் தொண்டாற்றும் பேரவைக்கு, என் இதயம் நிறைவெய்திய வாழ்த்துக்கள்.

தங்கள் அன்புள்ள,
*நெ. து. சுந்தரவடிவேலு*

**Dr. C. P. Ramaswami Aiyar**
VICE CHANCELLOR

ANNAMALAI UNIVERSITY
ANNAMALAINAGAR P. O.
(SOUTH INDIA)
August 26, 1964.

I am glad to learn that the 4th Anniversary of the Thamizh Elakkia Peravai will be celebrated during October 1964. I wish the celebrations all success.

*C. P. Ramaswami Aiyar*

**N. S. S. MANRADIAR**
(PATTAGAR OF PALAYAKOTTAI)
MINISTER FOR FOOD

FORT ST. GEORGE
MADRAS
1—9—1964.

ஒரு சமுதாயத்தின் கலாச்சாரப் பெருமையைக் காட்டும் கண்ணாடியே இலக்கியம். உயர்ந்த லட்சியங்கள், வாழ்க்கைப் போராட்டங்கள் ஆகியன இலக்கியத்தில் படம் பிடித்துக் காட்டப்படுகின்றன. எனவே அத்தகைய இலக்கியங்களைப் படித்துணர்வதன் மூலம், இன்றைய சமுதாயத்தின் நிலை மேலும் உயரும்.

ஈரோட்டில் உள்ள இலக்கிய அன்பர்கள் கடந்த நான்காண்டுகளாக தமிழ் இலக்கியப் பேரவை மூலம் இலக்கியப் பணி ஆற்றி வருவதைப் பெரிதும் பாராட்டுகிறேன். நான்காம் ஆண்டு விழா வெற்றிகரமாக நடைபெற என் நல்வாழ்த்துக்கள்.

அன்புடன்,
*N. S. S. Manradiar*



**C. SUBRAMANIAM**
MINISTER FOR
FOOD & AGRICULTURE,
GOVT. OF INDIA.

புதுடில்லி

29 ஆகஸ்டு, 1964.



தமிழ் இலக்கியப் பேரவை, ஈரோடு அக்டோபர் மாதம் தனது 4-வது ஆண்டு விழாவை கொண்டாடுவதாக அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். இப்பேரவை தமிழ் இலக்கியங்கள் திட்டெங்கும் பல்கிப் பரவ சேவை செய்ய எனது வாழ்த்துக்கள்.

சி. சுப்பிரமணியம்

**O. V. ALAGESAN**
MINISTER OF STATE
MINISTRY OF PETROLEUM & CHEMICALS
GOVERNMENT OF INDIA

NEW DELHI-1.

3rd September 1964.



Sri O. V. Alagesan is glad to learn that the Thamizh Elakkia Peravai, Erode, is celebrating its fourth anniversary from the 23rd to 25th October, 1964. The Minister has much pleasure in sending his good wishes for the success of the celebrations.



மலர் வெளியீட்டு விழா — பாராட்டு விழாத் தலைவர்
திரு. நா. மகாலிங்கம் B. SC., M. I. E., M. L. A.



இச்சிறப்பு மலரை வெளியிடும்
திரு. எம். பி. நாச்சிமுத்து பி. ஏ., பி. எல். அவர்கள்
( தலைவர் : தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் )



# தெய்வத் தமிழ்

கவிஞர் முடியரசன்



ஆறணிந்த சடைமுடியான் கூடல் தன்னில்
ஆர்வமொடு சுந்தரப்பேர் வழுதி யானான்;
கூறமர்ந்த பங்கினளும் மதுரை மன்னன்
தலக்கொடியாய்த் தடாதகையாய்த் தோன்றி வந்தாள்;
வீறமர்ந்த வேலவனும் உக்கி ரப்பேர்
மேவியந்த வந்துதித்தான்; இவர்கள் ஈண்டுச்
சேரவந்து பிறப்பெடுக்கும் நோக்க மென்ன?
செந்தமிழின் சுவைமாந்தி மகிழ வன்றே?

தேனிகர்க்கும் தமிழ்மொழியில் நெஞ்சி னிக்கத்
தேவாரம் பாடியநல் மூவ ருள்ளும்
வானிடிக்கும் பொழில்சூழும் ஆரூர் வாழும்
வடிவழகன் சுந்தரன்ஓர் நள்ளி ருட்டில்
ஆனுயர்த்த கொடியானைத் தூத னுப்பி
ஆட்டாத ஆட்டமெல்லாம் ஆட்டி வைத்தான்
சேல்நிகர்த்த விழிபங்கன் தமிழை வேட்டுச்
செய்யாத செயலெல்லாம் செய்து வந்தான்

நல்லறிஞர் உறைவிடமாம் தொண்டை நாட்டில்
நாடறிந்த காஞ்சிதனில் வாழ்ந்து வந்த
நல்லவனைக் கணிகண்ணன் என்பான் தன்னை
நாடுகடந் தேகுகென அரசன் கூறச்,

செல்லுமவன் பின்தொடர்ந்தார் புலமை மிக்க
திருமழிசை யாழ்வாரும்; கார்மே கத்தை
வெல்லுகின்ற நிறத்தானும் அவர்பின் சென்றான்;
வேட்டெழுந்த தமிழார்வம் அதனால் அன்றோ?

தூண்டாமல் தோன்றுசுடர்க் காதல் கொண்டு
சூடிமலர் கொடுத்தாளைப் பாவால் நம்மை
ஆண்டாளை ஆண்டானை நினைந்த ரற்றி
அருட்கடலில் ஆழ்வார்தம் ஆயி ரங்கள்
பூண்டானை அவர்திருவாய் மொழியைக் கேட்டுப்
புவியிடத்து மாலாகி நின்றான் றன்னை
வேண்டான்எம் தமிழ்மொழியை என்று ரைத்தால்
வெறுமதியர் என்பதலால் வேறென் சொல்வோம்!

கடவுளர்கள் உகந்தமொழி என்புக் கூட்டைக்
காரிகையாய் எழுப்புமொழி மறைக்காட் டூரில்
அடைகதவம் திறந்தமொழி முதலை யுண்ட
ஆண்மகவை மீட்டமொழி தெய்வப் பான்மை
படருமொழி பத்திமொழி தொடுக்கும் தெய்வப்
பழம்பாடல் நிறைந்தமொழி உள்ள மெல்லாம்
மடைதிறந்த வெள்ளமென அருளைப் பாய்ச்சி
மகிழ்விக்கும் அன்புமொழி தமிழே அன்றோ?

என்றுரைத்த சொன்மாரி செவியுள் ஓடி
என்மனத்தை நெக்குருக்க இளகி ஆண்டு
நின்றிருக்கும் நான்மகிழ்ந்தேன்; எதிரில் தோன்றும்
நெடுங்கோவி லுட்புகுந்தேன்; அருளால் நெஞ்சம்
ஒன்றிநிற்கும் பன்னிருவர் நால்வர் மற்றோர்
உள்ளமெலாம் பாடலெலாம் உன்னி உன்னிச்
சென்றிருந்தேன் திடுக்கிட்டேன் சிந்தை நொந்தேன்
செந்தமிழைக் காணவில்லை திரும்பி விட்டேன்.



உ

திருச்சிற்றம்பலம்

# சைவ சித்தாந்தம்

அ. ஞானசம்பந்தன்

" ஓரும் வேதாந்தமென்றுச்சியிற்பழுத்த, ஆராவின்ப வருங்கனிபிழிந்து, சாரங்கொண்ட சைவசித்தாந்தத் தேனமுது" என்று நல்லறிஞர்களாற் போற்றி செய்யப்பெற்ற பெருஞ் சிறப்புடையது சைவ சித்தாந்தமாகும். சைவ சித்தாந்தம் என்ற சொற்குப் பொருள், சைவ சமயத்தில் சித்திக்கப்பட்ட முடிவுகள் என்பதாம்.

உலகத்திலே, சமயங்களும், அந்த அந்தச் சமய சாத்திரங்களும் அந்தச் சாத்திரங்களிலே சொல்லப்படும் பொருள்களும், ஒன்றோடொன்று ஒவ்வாது பல திறத்தனவாய் இருக்கும். இவைகள் எல்லாவற்றுள்ளும், மேலாகிய சமயம் யாது? அந்தச் சமய சாத்திரங்கள் யாவை? அந்தச் சாத்திரங்களிற் சொல்லப்படும் பொருள்கள் யாவை? எனில்: இச்சமயப் பொருள்கள் எல்லாம், இது ஆகும் அது அன்று என்னும் பிணக்கு இன்றி, தன்னிடத்தே காண நிற்பது எந்தச் சமயமோ அந்தச் சமயமே சமயம்; அந்தச் சமய சாத்திரங்களே சாத்திரங்கள்; அந்தச் சாத்திரங்களிற் சொல்லப்படும் பொருள்களே பொருள்கள். இப்படி உலகிலுள்ள எல்லாச் சமயப் பொருள்களையுந் தன்னிடத்து அடக்கிக் கொண்டு, அச்சமயங்களையுந் தனக்குச் சோபானமாகக்கொண்டு, அவற்றிற்கெல்லாந்தான் நாயகமுந் தாயகமுமாய் நின்று நிலவும் சற்சமயம் சைவசித்தாந்தமேயாம். ஆதலால், அந்தச் சமயமே சமயம். அந்தச் சமய சாத்திரங்களாகிய வேத சிவாகமங்களே சாத்திரம். அந்தச் சாத்திரங்களிற் சொல்லப்படும் பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களுமே மெய்ப்பொருள்கள்.

*சிவஞான சித்தியார்*

ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்க
　　ளொன்றோடொன் றொவ்வாம லுளபலவு மிவற்றுள்
யாதுசம யம்பொருணூல் யாதிங் கென்னி
　　னிதுவாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினு னிவையெல்லா மோரிடத்தே காண
　　நின்றதியா தொருசமய மதுசமயம் பொருணூ
லாதலினு னிவையெல்லா மருமறையா கமத்தே
　　யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்.

உயிர் தன்னுண்மையாகிய கேவல அவத்தையில் அநாதியே பந்திக்கப்பட்ட ஆணவமலத்தோடு அம்மலமாத்திரையாய் வியாபித்து உடம்பின்றியும், கலை முதலிய தத்துவங்களோடு கூடி அறிதலின்றியும், புத்தியின் குணமாகிய தருமம்,

ஞானம், வைராக்கியம், ஐஸ்வரியம், அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைஸ்வர்யம் ஆகிய எட்டுமின்றியும், மன முதலிய கருவிகளின்றியும், இச்சையின்றியும், அறிவின்றியும், ஒரு தொழிலுமின்றியும், தனக்கென ஒரு சுதந்திரமின்றியும், போகத்திற் கொள்கையின்றியும், சரீர தோற்றக் கேடுகளின்றியும் நிற்கும். அதன்பின்,

சகல அவத்தையில் உடம்பினைப் பெற்றும், கலாதி தத்துவங்களோடு கூடியும், புத்தியின் குணமாகிய தருமம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வரியம், அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைஸ்வர்யம் ஆகிய எட்டனையும் பொருந்தியும், மன முதலிய கருவிகளைக் கூடியும், இச்சையுற்றும், வாக்குகளால் நிகழும் அறிவுற்றும், செயல்களைப் பொருந்தியும், சத்தாதி விடயத்தில் விருப்பஞ் செய்தும், போகத்தை யநுபவித்தும், ஏகதேசியாகியும், கர்மானுசாரமாக நால்வகைத் தோற்றமும் எழுவகைப் பிறப்பும் எண்பத்து நான்கு நூறுயிர யோனி பேதமும் உடையராய்ப் பிறந்திறந்துழன்று வருந்திச் சீவித்து நிற்கும். இவ்வாறு பிறந்திறந்துழலுங் காலத்திலே புண்ணிய வசத்தினாலே பெறுதற்கரிய மாநுடப் பிறவியைப் பெற்று முன்னர்ப் புறச் சமயங்களிலே நின்று அவ்வச்சமய நூல்களில் விதித்தபடி ஒழுகுவார்கள். அவ்வாறு புறச்சமயங்களிலே நின்று செய்த புண்ணியங்களினாலே, பின் வைதிக மார்க்கத்திலே புகுந்து, வேதத்திலும் அதன் வழிநூலாகிய மிருதி முதலியவற்றிலும் விதித்த பசு புண்ணியங்களைச் செய்து, சுவர்க்கத்திற்சென்று போகந்துய்த்து மீண்டு பூமியிலே பிறப்பர்கள். இவர்கள் முன் செய்த வைதிக புண்ணிய மிகுதியினாலே சைவாகமத்தால் உணர்த்தப்படுவதும், உயிர்கள் பிறப்பிறப்புத்துன்பம் நீங்கி நித்தநிரதிசய ஆனந்தமாகிய பரமுத்தியடைந்து உய்தற்குரிய நெறியாக, அநாதிமலமுத்தபதியாகிய பரமசிவன் உயிர்கண்மாட்டு முகிழ்த்த பெருங் கருணையினாலே வகுத்து வைத்ததுமாகிய ஒப்பற்ற சைவ சமயத்திற் பிரவேசித்து, ஆசிரியன் காட்டுஞ் சைவாகம நெறியினின்று, பிறவிக்கஞ்சி வீடுபேற்றைக் காதலித்துச் சமயதீக்கையுற்றுச் சரியை நெறியைத் தலைப்பட்டு, அது முற்றிய பின்னர் விசேட தீக்கையுற்றுக் கிரியை நெறியைத் தலைப்பட்டு, அது முற்றிய பின்னர் யோக நூல் கேட்டு யோக நெறியைத் தலைப்பட்டு, இம்மூன்றும் முறையான் முற்றிய பின்னர், நிருவாணதீக்கை பெற்று ஞானநெறியைத் தலைப்பட்டு வீடுபேறடைவர்.

**திருமந்திரம்**

சைவ சமயத் தனிநா யகன்நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய
வையத்து ளார்க்கு வகுத்துவைத் தானே.

**சிவஞானசித்தியார்**

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.

இன்னும், இவற்றின் விளக்கங்களெல்லாம் சிவபிரானதருள் பெற்ற அருளாளர்களாகிய பரமஞானிகளால் தமிழ் மொழியிலருளிச் செய்யப்பட்ட தேவாரம் முதலிய

திருமுறைகள் பன்னிரண்டினும் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபாஇருப..்து, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினவெண்பா, போற்றிப்ப..்றொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்னும் சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கினும் உணரத் தக்கனவாகும்.

நம்முடைய மனமானது நன்மை விதைத்தால் நன்மையும், தீமை விதைத்தால் தீமையும் விளையும் நிலமாயிருக்கின்றது. பெரியோர்கள் தங்கள் மனமாகிய நிலத்தை மிகவும் பாடுபட்டுத் திருத்தி, அதிலுள்ள வஞ்சகமாகிய கட்டையை வேரோடு களைந்தகற்றி, அன்பு என்னும் பாத்தியைக் கோலி, மெய் என்னும் எருவையிட்டு, பத்தி என்னும் ஒப்பற்ற விதையை நட்டு, ஆர்வம் என்னும் நீரைப்பாய்ச்சி, சாந்தம் என்னும் வேலியிட்டு, ஐம்புலன்களாகிய பட்டிமாடுகள் பிரவேசியாதபடி தடுத்துப் பாதுகாப்பார்கள். அப்போது அப்பத்தியாகிய விதையிலிருந்து ஞானம் என்னும் முளை தோன்றி, கருணை என்னும் தளிர் உண்டாகும். பிறகு, காமம் குரோதம் முதலிய களைகளைத் தோன்றுந்தோறுங் களைந்தெறிய, அக்கருணை என்னும் தளிர் நன்கு செழித்து வளர்ந்து, கருதினுங் காணினுங் கேட்கினுங் களிதரும் ஆராவின்ப வருங்கனி தரும். இக்கனியைப் பெரியோர்கள் உண்டு களித்து இறுமாந்திருப்பார்கள். சிறியோர் இவ்வித முயற்சியின்றியும், நாளை நாளையென்று நாள் கழித்தும், தங்கள் மனமாகிய நிலத்தை முற்றிலும் பாழாக்கி, காமக்காடு முடவிட்டு, ஐம்புல வேடர் வசப்படுத்தி, இச்சையென்னும் விதையை விதைப்பார்கள். அதனால் அதில் எங்கும் நான் எனது என்னும் அகங்கார மமகாரங்களாகிய விஷம் பொருந்திய மரங்கள் அடர்ந்து முளைத்து வளர்ந்து, பொய்யாகிய கிளைகளைவிட்டு, பாவமாகிய இலைகளைப் பரப்பி, கொடுமையென்னும் பூக்களைப் பூத்து, துன்பமாகிய காய்களைக் காய்த்து, மரணமாகிய பழத்தைத் தர, அதனையுண்டு நரகில் வீழ்ந்து, தங்களுக்கும் பிறர்க்கும் பயன்படாமல் அழிவார்கள். பெறுதற்கரிய மானுடப் பிறவியைப் பெற்ற நாம் வீண் முயற்சியில் முனைந்து நமக்கு நாமே வஞ்சகர்களாய்க் கழியாமல், நன் முயற்சியில் நின்று மேற்கூறப்பட்ட திருமுறைகள், சித்தாந்த சாத்திரங்களைச் சித்த சமாதானத்துடனிருந்து ஓதியும், கேட்டும் அவற்றின் உண்மைப் பொருள்களை ஐயந்திரிபற உணர்ந்து தெளிந்தும் அவற்றின் வழி நின்றும் எடுத்த இப்பிறவியிற்றானே பரமுத்தியாகிய சிவானந்தப் பெருவாழ்வெய்தி உய்வோமாக.

*திருமந்திரம்*

சித்தாந்தத் தேசிவன் முத்திசித் தித்தலாற்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலால்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே.

*சிவஞானசித்தியார்*

சித்தாந்தத் தேசிவன்றன் திருக்கடைக்கண் சேர்த்திச்
செனநமொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்ப னென்று
மொழிந்திடவு முலகரெலா மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் விழ்ந்திடுவ ரிதுவென்ன பிராந்தி.

திருச்சிற்றம்பலம்.

# வரலாற்றின் மூன்று பேரியக்கங்கள்

பன்மொழிப் புலவர், வித்வான்
**கா. அப்பாத்துரையார் எம். ஏ., எல். டி. விசாரத் (இந்தி)**

வரலாறு என்பது மன்னர் இளங்கோக்களின் வாழ்வுச் செய்திகளன்று' அது நிகழ்ச்சிகளின் கோவையோ, பெரியார் வாழ்க்கை வரலாறுகளின் தொடர் சங்கிலியோகூட அன்று. உண்மையில் அது நாட்டிலும், நாடு கடந்த உலகிலும் காலமென்னும் பேராற்றின் போக்கில் அலையலையாக முன்னேறிச் செல்லும் மனித இன நாகரிக வளர்ச்சியின் இயங்கு சித்திரமேயாகும்.

வரலாறு என்பது மனித இன வாழ்வு. அதில் மனித இன நாகரிகம் உடல். நாகரிக வளர்ச்சியே உயிர். உடலில் உயிர் நாடிகளின் வழியாகவே உயிர் இயங்குகிறது. வரலாற்றில் மனித இன நாகரிகத்திலும் இத்தகைய உயிர்நாடிகள் உண்டு. அவையே நாகரிக இயக்கங்கள்.

இந்த இயக்கங்களில் கருத்துச் செலுத்தாத வரலாறு பெயர்கள், தேதிகள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றின் உருவில்லாத, உப்புச் சப்பில்லாத குப்பை கூளக் குவியல் மட்டுமே. நம் பள்ளி கல்லூரிகளின் பழய கல்வி முறையில் கற்பிக்கப்பட்ட வரலாறு இத்தகைய கந்தல் கூளமே. அது மாணவர்களுக்கு ஒரு தலையிடி—அதுவும் பயன்தராத, அவர்கள் வாழ்க்கையுடன் எத்தகைய தொடர்புமில்லாத ஒரு தலையிடியாகவே அமைந்துள்ளது.

எந்த நாடுகளின் வரலாறும், மேலையுலக நாடுகளின் வரலாறு கூட, உண்மையில் ஒரே நாகரிக வரலாறுதான்—ஒரு சில பல இயக்கங்களின் வரலாறுதான். அவ்வியக்க வரலாறுகளாகவே அவை கற்பிக்கப்படல் வேண்டும். அவ்வாறு கற்பிக்கச் சில ஆண்டுகளாகத்தான் முயற்சிகள் நடந்து வருகின்றன. ஆயினும் உயிரியக்கங்களாக இன்னும் அவை கற்பிக்கப் படவில்லை. குப்பை கூளங்களாக வரலாற்றைப் படித்த பழய ஆசிரியர்கள் தலைமுறையும் மரபும் மாறச் சில நாட்கள் ஆகலாம்.

கீழையுலக வரலாறு—சிறப்பாக இந்தியாவின், தமிழகத்தின் வரலாற்று வகையில் இந்த உண்மை இன்னும் ஊன்றி வலியுறுத்தத் தக்கதாகும். ஏனெனில் மேலையுலக வரலாறு என்பது மனித இன வரலாற்றின் ஓர் அத்தியாயம் மட்டுமே. கீழையுலக வரலாறு—இந்திய, தமிழக வரலாறுதான் முழுநிறை மனித இன

வரலாறு ஆகும். மேலும் மேலையுலகில் இயக்கங்கள் என்பவை சிற்றியக்கங்கள், சிற்றலைகள் மட்டுமே! அவை ஒரு சில பத்தாண்டுகள், ஒரு சில சமயம், ஒன்றிரண்டு நூற்றாண்டுகள் வாழ்வே உடையன. கீழையுலக வரலாறு முழு நிறை மனித இன வரலாறு – அதன் இயக்கங்கள் பேரியக்கங்கள், பெரும் பேரியக்கங்கள் — பேரலைகள், பெரும் பேரலைகள் — அலையே கடலாக எழுந்து பொங்கும் அலைப் பெருங்கடல்கள் அவை ! அவ்வியக்கங்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தமிழகத்திலும் இந்தியாவிலும் பரவி, உலகில் இன்னும் நீண்ட தொலை, நீண்ட கால அலைப் பொங்கல்கள் எழுப்புவன ஆகும்.

இந்தியாவின் வரலாறு என்பது உண்மையில் ஒன்றுடன் ஒன்று தொடர்புடைய மூன்று பேரியக்கங்களின் தொடர் கோவையேயாகும். முதல் இயக்கம் பகுத்தறிவுப் பேரியக்கம் ஆகும். இது வேத காலத்துக்கு முற்பட்டு, கி. மு. 2000-த்திலிருந்தே தொடங்கி, புத்தர் காலத்தில் அதாவது கி. மு. 6-ஆம் நூற்றாண்டில் உச்சநிலையடைந்து கி. மு. 3-ஆம் நூற்றாண்டில் ஓய்வுபெற்ற இயக்கம் ஆகும். மூவாயிர ஆண்டு நடைபெற்ற இப்பேரியக்கங்கள் வடபால் உபநிடதங்களையும், புத்த சமண சமயங்களையும், வேறு பல அறிவு நெறிகளையும் தோற்றுவித்தன. தமிழில் திருக்குறளையும், முச்சங்கங்களையும், சங்கப் பாடல்களையும் தந்த பேரியக்கம் இதுவே. பின்னும் ஆயிர ஆண்டுகள் கழித்துச் சங்கரர் (கி. பி. 9-ஆம் நூற்றாண்டு), இராமானுசர் (கி. பி. 12-ஆம் நூற்றாண்டு), மாதவர் (கி. பி. 14-ஆம் நூற்றாண்டு), சைதன்னியர் (கி. பி. 16-ஆம் நூற்றாண்டு) ஆகியோரால் இந்தப் பேரியக்கம் இன்னும் ஆயிர ஆண்டு மறுமலர்ச்சியாக நீடித்தது. நம் அணிமைக் காலத்திலேயே விவேகானந்த அடிகள் இம்மறுமலர்ச்சியின் மகுடமாகி, இப்பேரியக்க விளைவை மேலையுலகுவரை கொண்டு செலுத்தியுள்ளார்.

இப்பகுத்தறிவியக்கம் இந்தியாவின் இயக்கம் மட்டுமன்று. இதன் கிளைக் கால்கள் ஆசியாவெங்கும் மேலை, கீழை உலகெங்கணும் ஓடி உலக சமயங்கள் எல்லாவற்றிலும் தன் தடம் பொறித்துள்ளது. இந்திய தேசீயத்துக்கும் நாகரிகப் பண்பாடுகளுக்கும் உலக நாகரிகத்துக்கும் இதுவே வளர்ச்சியின் பின்னணித் திரையாய் இயன்று வந்துள்ளது.

இந்தியாவில் இரண்டாவது பேரியக்கம் பக்தி இயக்கம் ஆகும். இது உண்மையில் முந்திய இயக்கத்தின் ஒரு உயிர்க்காலேயாகும். ஏனெனில் பகுத்தறிவியக்கம் தொடக்கத்தில் திருவள்ளுவர், பிருகஸ்பதி, சுக்கிராசாரி போன்ற மனிதப் பண்பு சான்ற தலைவர்களால், மனிதப் பண்பு கெழுமிய இயக்கமாகவே தோற்றுவிக்கப்பட்டதானாலும், வரவர அப்பண்பு குன்றிய வறட்டுத் தருக்கமுறை இயக்கமாகவே வளரத் தலைப்பட்டுவிட்டது. பக்தி இயக்கம் இதற்குப் புத்துயிர் கொடுக்க எழுந்தது. இதன் முதல் தலைவர்கள் கி. பி. 3-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த முதலாழ்வார்களும், முதல் நாயன்மார்களுமேயாவர். தமிழகத்தில் இவ்வியக்கம் கி. பி. 6 – 9 நூற்றாண்டுகளில் உச்சநிலையடைந்தது. பட்டினத்தார், தாயுமானவர், வள்ளலார் ஆகியோரால் இவ்வியக்கம் நம் காலம் வரை இரண்டாயிரம் ஆண்டு வளர்ந்தே வந்துள்ளது. அத்துடன் 12-ஆம் நூற்றாண்டிலிருந்து இது கேரள, ஆந்திர, கர்நாடக நாடுகளிலும், மராத்தி, குசராத்தி, வங்க நாடுகளிலும், இந்தியாவெங்கும் இன்று வரை அலை பாய்ந்து வருகிறது. இராமானந்தர், இராம்தாஸ், கபீர்தாஸ், மீராபாய், துகாராம், துளசிதாஸ் ஆகியோர் இந்தியா முழுவதும் கி. பி. 18-ஆம் நூற்றாண்டுவரை நிலவிய

இப்பேரியக்கப் பெருந்தலைவர்கள் ஆவர். இந்தியாவிலுள்ள எல்லாத் தாய்மொழிகளுக்கும் இலக்கியக் கலை மலர்ச்சி தந்து தற்கால இந்திய தேசியத்திற்கு வித்திட்டு உரம் பாவிய இயக்கம் இதுவேயாகும்.

மூன்ருவது இயக்கத்தை நாம் தேசிய இயக்கம் என்றே கூறலாம். இந்திய தேசத்தின் விடுதலையியக்கமும் விடுதலை பெற்ற இந்தியாவின் தேசிய வாழ்வும் உண்மையில் இப்பெருந் தேசிய இயக்கத்தின் ஒரு சிறு கூறேயாகும். மூவாயிர ஆண்டுகளுக்கு மேலாக வளமடைந்து வளர்ச்சியடைந்துள்ள இப்பேரியக்கத்தில் காங்கிரஸ் வரலாறும், இயக்கமும், ஒரு நூறு ஆண்டுக் கால வளர்ச்சி மட்டுமே என்பதை நோக்கினுல், இப்பேரியக்கத்தின் வரலாறு உணராமல் காங்கிரஸ் வரலாற்றையோ, தேசியத்தையோ உணர்வது எவ்வளவு அரிது என்பது விளங்கும். நம் தேசியத்தின் வேரும், நம் வருங்காலத் தேசிய வாழ்வின் உரவளமும் காணுவதற்கு நாம் உண்மையில் மூவாயிர ஆண்டுக் கால வரலாறு கண்டாக வேண்டும்.

மொழி, இனம், நாடு, உலகம் ஆகிய நான்குமே ஒரே பெயரால் வழங்கும் அரும் புதுமையை நாம் தமிழகத்தில் மட்டும்தான் மூவாயிர ஆண்டுகட்கு முன்னிருந்தே காண்கிறேம். தமிழ் (மொழிப் பெயர்), தமிழர் (இனப் பெயர்), தமிழகம் அல்லது தமிழ்நாடு (நாட்டு இனப் பெயர் அதாவது தேசீயப் பெயர்), தமிழுலகு (நாகரிகப் பெயர்) என்ற நான்குமே தொல்காப்பிய சங்ககால வழக்குகள். தமிழ் என்ருல் இனிமை என்று ஒரு பொருள் கூறி, இந்நான்கினுக்கும் பண்புருவில் ஓர் உயிர் கொடுத்த செய்தியினைக் கூடக் கி. பி. 7-ஆம் நூற்ருண்டிலிருந்தே காண்கிறேம்.

இந்தியா முழுவதும் பரவி இந்தியத் தேசியமாகவும், உலக முழுதும் பரவி உலக நாகரிகமாகவும் விளங்கி, இன்னும் வருங்கால உலகநாகரிகத்தின் வித்தாகவும் அமையும் தமிழ்த் தேசியத்தைப் பற்றி விவரித்தெழுத இக்கட்டுரை இடந்தராது. ஆனுல் இதன் கூறுகள் தமிழகத்தில் மூவாயிர ஆண்டுகட்கு முன்னிருந்தே வளர்ந்து வருவது காண்கிறேம்.

இந்திய விடுதலை இயக்கத்துக்குத் தாயகம் காங்கிரஸும் அதன் இயக்கமும் ஆம் என்பதை யாவரும் அறிவர். இதற்குத் தாய் 1857-ஆம் ஆண்டைய 'முதல்' சுதந்திரப் போராட்டம் என்பதைப் பல தேசிய அறிஞர்கள் விளக்கியுள்ளனர். ஆனுல் முதல் போராட்டத்துக்கும் முந்திய ஆதிப் போராட்டங்கள் வேலூர்ப் போரும் (1805), பாஞ்சாலங்குறிச்சிப் போரும் (1798), ஹைதர் திப்பு போராட்டங்களும், புலித்தேவன் போராட்டமுமே என்பதைப் பல தமிழறிஞர் விளக்கியுள்ளார். தவிர, காங்கிரஸின் அரசியல் சாராத் தேசியத்துக்குப் பிரமசமாஜமும், ஆரிய சமாஜமும் 19-ஆம் நூற்ருண்டுத் தொடக்கத்திலேயே தாய் மூலமாகும்.

இவ்வெல்லா விடுதலைப் போராட்டங்களுக்கும் முன் மூலமான தேசியம் சிவாஜியின் மராட்டிய தேசியம். அதன் தாய் மூலம் விசயநகரப் பேரரசின் தோற்ற வளர்ச்சி, தளர்ச்சி இயக்கங்களாகும். இந்தியாவின் இன்றைய இந்து மதம், இந்திய நாகரிகம், பழக்க வழக்கங்கள் ஆகியவை யாவும் கிட்டத்தட்ட இன்றைய முழுமை வடிவம் அடைந்த காலம் விசயநகரப் பேரரசுக் காலமே என்பதைப் பல வரலாற்றுப் பேராசிரியர்கள் சுட்டிக்காட்டி விளக்கியுள்ளார்கள்.

இந்திய தேசியத்தின் முதாதையாகிய இவ்விசயநகரப் பேரரசுக் காலத்தில் இன்றைய காங்கிரஸ் இயக்கத்தின் பல கூறுகளை நாம் இந்தியாவில் காண்கிறோம். 13-ஆம் நூற்ருண்டில் இது தமிழகத்திலும், 14-ஆம் நூற்ருண்டில் தெலுங்காணத்திலும், 15-ம் நூற்ருண்டில் மராட்டிரத்திலும் பெரிய மக்கள் இயக்கமாகவும் பெரிய அரசியல் தலைவர்கள், சமயத் தலைவர்கள், கலைத்துறைத் தலைவர்கள் ஆகியோரைக் கண்ட 'தற்கால' இயக்கமாகவும் இயங்கி வந்தன.

விசயநகரத் தேசிய வாழ்வுக்குச் சோழப் பேரரசு காலத் தேசிய வாழ்வு மூலமாகும். கல்கி போன்ற புனைகதையாசிரியர்கள் இக்காலத் தமிழ்த் தேசியத்தையும் இதற்கு மூலமான பல்லவர் காலத் தேசியத்தையும் நமக்கு நன்கு படம் பிடித்துக் காட்டுகிறார்கள்.

சேர, சோழ, பாண்டியர் என்ற முத்தமிழ் வேந்தரின் வாழ்விலிருந்து மூவாயிர ஆண்டு வளர்ந்துள்ள வளர்ச்சியே இந்தியாவில் மட்டுமின்றி, உலக முழுவதிலுமே தேசியம், குடியாட்சி, சமதருமம், பொதுவுடைமை என்ற பெயர்களால் வழங்கும் பல பேரியக்கங்களின் மூல முதலாகும்.

இந்திய வரலாற்றின் மூலத்தை மட்டுமின்றி உலக வரலாற்றின் மூலத்தையே நாம் இந்த முப்பேரியக்கங்களின் வரலாற்றில் காண்கிறோம்.

# பரிபாடலும் பகவத்கீதையும்

பேராசிரியர் கா. பொ. இரத்தினம்
(தலைவர், உலகத் தமிழ் மன்றம், கொழும்பு)

ஏறக்குறையை ஈராயிரம் ஆண்டுகளுக்குமுன் தமிழகத்திலே தோன்றிய கடைச்சங்க இலக்கியங்களிற் பரிபாடலும் ஒன்ருகும். "பரிபாடல்" என்பது ஒரு வகையான இசைப்பாடலாகும். இத்தகைய பாடல்களாற் பாடப்பட்ட நூலாதலின் இந்நூல் பரிபாடல் என்று பெயர் பெற்றது. இந்நூல் எழுபது பாடல்களைக் கொண்டது. எனினும் இப்பொழுது இருபத்திரண்டு பாடல்களே கிடைக்கின்றன. இவற்றுளே ஆறு பாடல்கள் திருமாலுக்குரியன; எட்டுப் பாடல்கள் முருகனுக் குரியன; ஏனைய எட்டும் வையை ஆற்றுக்குரியன.

திருமாலையும் முருகனையும் பற்றிக் கடவுள் வாழ்த்தாகப் பாடப்பட்ட பாடல்கள் படிக்கப் படிக்க உள்ளத்தை உருக்கத்தக்க சொன்னயம், பொருணயங்களுடன் அருள் நலமுங் கனிந்து விளங்குகின்றன. வேதங்கள், உப-நிடதங்கள், தேவாரங்கள், ஆழ்வார்களின் பாடல்கள் முதலியவற்றின் கருத்துக்கள் இவற்றில் வியத்தகு முறையிற் படிந்து மிளிர்கின்றன. தேவாரங்களுக்கு திவ்வியப்பிரபந்தங்களுக்கும் முன்னர்த் தோன்றிய தீந்தமிழ்த் தெய்வப் பாடல்கள் இவை என்பதை உணரும் பொழுது இவற்றின் இனிமையும், பழைமையும், முதன்மையும் நம்மைக் கவர்கின்றன.

திருமாலின் தெய்வ நலத்தைப் பற்றிக்கூறும் பரிபாடற் பாடல்களிலுள்ள கருத்துக்கள் கண்ணன் திருவாக்கிலுள்ள (பகவத்கீதையிலுள்ள) பல கருத்துக் களுடன் பின்னிப் பிணைந்து காட்சியளிக்கும் அருமைப்பாடு அறிந்தின்புறத்தக்கது.

தமிழ்ப் பெருங்குடி மக்கள் பழங்காலந் தொடக்கம் திருமாலை வணங்கி வந்துளர். "மாயோன் மேய காடுறை உலகமும்" என்று தொல்காப்பியம் திருமாலை முல்லைநிலக் கடவுளாக உரைக்கிறது. இக்கடவுளினைப் பற்றிப் பழங்காலத் தமிழ் மக்கள் கொண்டிருந்த கருத்துக்களையும் பரிபாடல் அழகு ததும்பத் தீட்டிக் காட்டுகிறது.

கண்ணன் திருவாக்கு (பகவத்கீதை) பாரத காலத்திலே தோன்றியது. போர்க்களத்திலே கண்ணனால் அருச்சுனனுக்கு அருளிச் செய்யப்பட்டது. வேதங்கள் உபநிடதங்கள் முதலியவற்றின் கருத்துக்கள் கண்ணன் திருவாக்கில் இழையோடு கின்றன. இந்நூல் தோன்றிய பாரத காலத்திலே பாண்டி நாடு முதலிய தமிழ் நாடுகள் மிகுந்த நாகரிகமும் சிறப்பும் உடையனவாய் விளங்கின என்பதற்குப் பாரதத் திலேயே பல சான்றுகள் உள சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் எனுஞ்

சேர அரசன் பாரதப் போரில் ஈடுபட்ட கவுரவர் சேனைக்கும், பாண்டவர் சேனைக்கும் போர் முடியும்வரை உணவு வழங்கினான் என்று புறநானூறு புகல்கிறது.

"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம்பதின்மரும் பொருது களத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்"

எனும் புறநானூற்றடிகள் இச் செய்தியைக் குறிக்கின்றன. சிலப்பதிகார வாழ்த்துக் காதைச் செய்யுளும் இதனைக் குறிப்பிடுகின்றது.

எனவே, கண்ணன் உரைக்கும் கருத்துக்கள் முதலில் தோன்றினவா, பரிபாடல் வாழையடி வாழையாக உரைக்கும் கருத்துக்கள் முதலிலே தோன்றினவா என்பது ஆராய்ச்சிக்குரியது. கடைச்சங்க காலத்திலே தோன்றிய இப்பரிபாடலுக்கு முன்னர்த் தலைச்சங்க காலத்தில் பல பரிபாடல்கள் இருந்தன என்பது இறையனார் அகப்பொருளுரை முதலியவற்றாற் புலனாகின்றது. அப்பரிபாடல்களின் வழிவந்த இப்பரிபாடலும் அவற்றிலுள்ள பழைய கருத்துக்களையுங் கொண்டிருத்தல் இயல் புடைத்தே. இப்பரிபாடலிற் காணப்படும் சொல்லாட்சி தத்துவக் கருத்துக்களைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் அக்காலத்திலே தமிழில் விளக்கியுளர் என்பதை நன்கு காட்டுகிறது.

இவ்விரு நூல்களிலுமுள்ள கருத்துக்களின் கால அடைவு எத்தகையதா யிருப்பினும் இவற்றிலுள்ள கருத்துக்கள் சிலவற்றின் ஒற்றுமைப் பாங்கும், அவற்றை இயம்பியுள்ள திறனும் இவ்விரு நூல்களையும் படிப்போர் உள்ளத்தைப் பிணைத்து இன்புறுத்தத் தக்கன.

உதாரணத்துக்காகப் பரிபாடற் பாட்டின் ஒரு பகுதியையும் அதனோடொப் புடைய கண்ணன் திருவாக்குக்களையும் ஈண்டு நோக்குவோம்:

"தீயினுள் தெறல்நீ பூவினுள் நாற்றம்நீ
கல்லினுள் மணியும்நீ சொல்லினுள் வாய்மைநீ
அறத்தினுள் அன்புநீ மறத்தினுள் மைந்துநீ
வேதத்துமறைநீ பூதத்து முதலும்நீ
வெஞ்சுடர் ஒளியும்நீ திங்களுள் அளியும்நீ
அனைத்தும்நீ அனைத்தினுட் பொருளும்நீ, ஆதலின்
உறைவும் உறைவதும் இலையே; உண்மையும்
மறவியில் சிறப்பின் மாய மாரனையை;
முதன்முறை இடைமுறை கடைமுறை தொழிலின்
பிறவாப் பிறப்பில பிறப்பித்தோ ரிலையே
பறவாப் பூவைப் பூவி னோயே
அருள் குடையாக அறம் கோலாக
இருநிழல் படாமை மூவேழுல கமும்
ஒருநிழ லாக்கிய ஏமத்தை மாதோ"

எனும் பாடற் பகுதியிலே திருமாலின் தெய்வத்தன்மையைப் பரிபாடல் எடுத்தியம்புகிறது. நெருப்பில் வெம்மையும், மலரில் மணமும், கல்லில் மணியும்,

சொல்லில் வாய்மையும், அறத்தில் அன்பும், வீரத்தில் வன்மையும், வேதத்தில் நுண்பொருளும், ஐம்பூதத்தில் வானும், சூரியனில் ஒளியும், சந்திரனில் தன்மையும் திருமாலே எனவும், எங்கும் வியாபித்திருக்கும் பொருள்களும் அவற்றின் வியாப்பியமும் திருமாலே எனவும், திருமால் தங்குதலும் தங்குமிடமுமற்றவர் எனவும், முத்தொழிலினுட்பட்டு அவர் பிறவாத பிறப்பில்லை எனவும் அவரைப் பிறப்பித்தோரில்லை எனவும் காயாம்பூவின் நிறத்தையுடைய அவரே மூவேழுலகத்தையும் தாங்கிக் காப்பவர் எனவும் கூறுகிறது.

இதனுடன் கண்ணன் திருவாய் மலர்ந்த பின்வரும் கூற்றுக்களை ஒப்பிடுக :

"மண்ணில் நறுமணமாகவும் தீயில் சுடராகவும் இருக்கிறேன்; எல்லா உயிர்களின் உயிர்ப்பாகவும் இருக்கிறேன்......" (அத். 7—சு. 9)

"சத்துவ ராசத தமோ குணங்களில் உண்டான பொருள்கள் எல்லாம் என்னிடத்துத் தோன்றியவை. நான் அவைகளைச் சாரவில்லை. அவைகள் என்னைச் சார்ந்துள......" (அத். 7—சு .12)

"நான் முழு உலகத்துக்கும் வித்து......" (அத். 7—சு. 6)

"எல்லா உயிர்களின் உள்ளே உறையும் ஆத்துமா நானே. உயிர்களின் தொடக்கமும் இடையும் இறுதியும் நானே......" (அத். 10—சு. 20)

"நான் பிறப்பற்றவன், அழிவற்றவன், உயிர்களுக்கெல்லாம் ஈசன். எனினும் என்பிரகிருதியை வசப்படுத்தி ஆத்தும மாயையினால் நான் அவதரிக்கிறேன்......" (அத். 4—சு. 6)

# கொங்குநாட்டில் பாடல் சாசனங்கள்

வித்துவான். செ. இராசு
தென்னிந்தியத் திருச்சபை
சமுதாய உயர்நிலைப்பள்ளி, ஈரோடு.

***சாசனச் செய்யுள் மஞ்சரி :—***

வெவ்வேறு காலத்திலே வெவ்வேறு இடங்களில் இருந்த புலவர்கள் அவ்வப்போது பாடிய தனிச்செய்யுட்களைப் பிற்காலத்தவர் தொகுத்துத் ‘ தனிப்பாடற்றிரட்டு’ என்னும் பெயருடன் வெளியிட்டிருப்பதைப் படித்து நாம் பல செய்திகளைத் தெரிந்து கொள்கிறோம். அதுபோலவே தமிழகத்தின் பல பகுதிகளில் பற்பல காலங்களில் சாசனங்களிலே எழுதப்பட்ட செய்யுட்களைத் தொகுத்து வெளியிட்டால் அது தமிழ் இலக்கிய வரலாற்றினை ஆராய்வதற்கும், அக்காலத்து அரசியல் சமூக இயல் வரலாறுகளைத் தெரிந்து கொள்வதற்கும் பெரிதும் துணையாக இருக்குமென்று ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு. மயிலை. சீனி. வேங்கடசாமி அவர்கள் 1959-ல் ***‘ சாசனச் செய்யுள் மஞ்சரி ’*** என்ற பெயருடன், சாசனங்களில் காணப்படும் சுமார் 325 செய்யுட்களைத் தொகுத்து அரிய நூல் ஒன்றை வெளியிட்டார்கள். 1961 மே மாதம் திரு. மயிலை. சீனி. வேங்கடசாமி அவர்கள் இல்லத்தில் அவரைக் கண்டு அளவளாவிய எனக்கு அந் நூலின் பிரதியொன்றை அளித்தார். அதை ஆவலோடு வாங்கிப் பிரித்துப் பார்த்தேன். கொங்கு நாட்டுச் சாசனச் செய்யுள்கள் ஒன்றும் அதில் குறிப்பிடப் பெறவில்லை.

***சண்டேசுவரர் பாடல் :—***

சில மாதங்களுக்கு முன்னர் பேரூர்ப் புராணம் (மூன்றும் பதிப்பு) படிக்க நேர்ந்தது. அதில் மதிப்பிற்குரிய கோவைகிழார் திரு. சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள் பேரூர் வரலாற்றை விரிவாக எழுதியுள்ளார். கொங்குப் பாண்டியன் வீரபாண்டியனைப் பற்றியும், அவன் சாசனங்களைப் பற்றியும் குறிப்பிடும் போது “ இவனது பேரூர்ச் சாசனம் ஒன்றில் ஒரு வெண்பா காணப்படுகிறது. **கொங்கு நாட்டிலே செய்யுள் வடிவானது இது ஒன்றுதான்.** ஆனாலும் இதே வெண்பா மூவலூரில் சிறிது மாற்றிச் செதுக்கப்பட்டுள்ளது. அது

தண்டீஸ் வரன்ஓலை சாகரம்சூழ் வையகத்துக்
கண்டீஸ் வரன்கரும மாராய்க— பண்டே
அறம்செய்தான் செய்தான் அறங்காத்தார் பாதம்
திறம்பாமல் சென்னிமேல் வைத்து

என்றது ” என்று எழுதியுள்ளார்.

இச்செய்யுள் தமிழ் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் எழுதப்பட்டுள்ள பொதுப் பாடலாகும். இதே பாடலைச் செங்கற்பட்டு மாவட்டம் பெரும்பேர் தான் தோன்றீசுவரர் கோயிலிலும், தஞ்சை மாவட்டம் உடையார் கோயில் திருக்களா

வுடைய மகாதேவர் கோயிலிலும், தென் ஆர்க்காடு மாவட்டம் திருவாமாத்தூர் அபிராமேசுவரர் கோயிலிலும், வெண்ணெயூர் விசுவநாதர் கோயிலிலும் நாம் காண லாம். ஏன் கோவை மாவட்டத்திலும் பேரூர், மூவலூர் இரண்டிடங்கள் மட்டுமின்றி சர்க்கார் பெரியபாளையம் சுக்ரீவேசுரர் கோயிலிலும் இக்கல்வெட்டுக் காணப்படு கிறது. எனவே, பொதுப் பாடலாகிய இச் சண்டேசுவரர் பாடல் மட்டும் இருப்பது கொங்கு நாட்டுக்குச் சிறப்பை அளிக்காது.

**புதிய பாடல் சாசனங்கள் :—**

இவைகளை நோக்கியவுடன் எங்கள் வரலாற்றுச் சங்கக் குழுவினரோடு சேர்ந்து கொண்டு கொங்கு நாட்டில் வேறு பாடல் சாசனங்கள் இருக்கின்றனவா ? என்று ஆராய்ந்தேன். என் முயற்சி வீண் போகவில்லை. பழமங்கலம், வெள்ளோடு, தாரமங்கலம், ஆனூர், (பழைய கோட்டை) உத்தமசோழபுரம், ஈரோடு போன்ற இடங்களில் அரிய பாடல் சாசனங்கள் இருப்பதை அறிந்தேன்.

**பழமங்கலம் :—**

ஈரோடு தாலூகா பழமங்கலத்தின் கிழக்கே ஒருமைல் தூரத்தில் பாழடைந்த ஊரொன்று இருக்கிறது. அங்குள்ள மண்மேடு புதைபொருள் ஆய்வு செய்வதற் குரிய இடம். நத்தமேடு என்ற அவ்விடத்தில் இட்டேறியின் ஓரத்தில் நடுகல் ஒன்று உள்ளது. அக்கல்லில் அழகிய வெண்பா ஒன்று எழுதப்பட்டுள்ளது.

‘ வாய்த்தபுகழ் மங்கலத்து வந்தெதிர்ந்த மாற்றலரை
சாய்த்தமகன் வென்ற சயம்பெருக— சீர்த்தபுகழ்
நிற்குவணம் கற்பொறிக்கப் பட்டான் கரையகுலச்
சொக்கனேந்த லேவுலகில் தான் ’

**இக்கற்பொறி இரட்சிப்பான் பாதம் என் தலை மேலே.**

என்பதே அங்கு காணப்படுவதாகும்.

**ஆனூர் :—**

ஆனூர் பழைய கோட்டையின் தென் கிழக்கில் 3 மைல் தூரத்தில் உள்ள ஒரு பழம்பெரும் ஊராகும். மதிப்புமிக்க நமது மாநில அமைச்சர் திரு மி கு. ந. நல்லசேனுபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்களுடைய மர பினர்க்குரிய சொந்த ஊர் அதுவேயாகும். அங்குள்ள ஆனூரம்மன் கோயில் அவர் மரபினர்க்குரிய குலதெய்வம். அக்கோயிலைக் கட்டியவர் ஏழாவது பட்டக்காரரான அழகன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கள். அழகன் சர்க்கரை சிறுவயதிலேயே அவர் மரபினர்க்குரிய கொடைத்தன்மை வாய்க்கப் பெற்றிருந்தார். சேற்றூர்க் கவிராயருக்கு அவர் விருப்பப்படி செம்மறிக் கிடாய்களைப் பரிசாகக் கொடுத்துப் பாடல் பெற்றவர். இவருக்கு இளவயதில் “அப்புக்குட்டி” என்ற சிறப்புப் பெயர் வழங்கப் பெற்றது. இவரது இயல்பைப் பற்றி இவருடைய சிறிய தந்தையார் மேலப்பாளையம் தீர்த்தகிரிச் சின்னமலைக் கவுண்டர் பாடல்கள் பல பாடியுள்ளார். இவர் கட்டிய கோயிலின் முன் மண்டபத்தில் அழகிய பாடல் ஒன்று வெட்டப் பட்டுள்ளது.

உயருபுகழ் ஆனூர்வாழ் உத்தமிமண் டபம்கட்ட
உவந்து வந்து
பயிரகுலப் பெரியோர்கள் பணம்மட்டும் தான்கொடுத்தார்
பணியா ளர்க்கு
வயிறுநிறை யச்சோறும் வாய்க்குவெற் றிலைபாக்கும்
வாங்கித் தந்து
தயிரொடுமு வேளையிட்ட தர்மிது அழகன்சர்க்
கரைய தாமே.

பாடியவர் முன் மண்டபம் வேலை செய்த சிற்பி சோமசுந்தரம். (இதை அறிவித்தவர் கொங்கார்பாளையம் திரு. சடையபிள்ளை.)

*தாரமங்கலம் :—*

கி. பி. 17-ஆம் நூற்றாண்டில் கொங்கு நாட்டில் அரசுரிமை பெற்றுப் பல கோட்டைகளைக் கட்டி அரசு செய்தவர்கள் தாரமங்கலம் கெட்டி முதலியார் மரபினர். இவர் மரபில் வந்த இம்முடிக்கெட்டி முதலியார் கட்டிய கோயிலே சிற்ப நலம் வாய்ந்த தாரமங்கலம் கயிலாயநாதர் கோயில். அங்குள்ள மற்றொரு சிறந்த கோயில் ஏழம்பேசுவரர் கோயில். அக்கோயில் முன் சுவர் வலப்பக்கம் ஒரு பாடல் சாசனம் உள்ளது.

செங்கதிர் பன்னிரண் டீசர் பதினொன்று
திக்கும்பத்து
கங்கையும் ஒன்பது வெற்பெட் டெழுகடல்
கார்த்திகையா(று)
ஐங்கணை நான்மறை முச்சுடர் சாதி
யவையிரண்டு
மங்கை வரோதயன் கெட்டி முதலியார்
வார்த்தையொன்றே!

எண்ணலங்காரம் அமையப் பெற்ற அழகிய பாடல் இது. (இதை அறிவித்தவர் தாரமங்கலம் கவிஞர் சண்முக சுந்தசாமி அவர்கள்.)

*வெள்ளோடு :—*

வெள்ளோடு சர்வலிங்கேசுவரர் கோயில் தெற்குச் சுவரில் பாடல் சாசனம் ஒன்றுள்ளது. அழகிய அகப்பொருட்சுவை நிறைந்த பாடல் இது. புலவர் ஒருவர் 'பெண்கள் காமவேளின் அம்புக்குத் தப்புவதற்கு பாதுகாப்பை நாடலாம். ஆனால் இரவில் சந்திரன் வருவானே அதற்கென் செய்வர்' என்று கூறுகின்றார்.

காப்பை இடுநுதலி காமவேள் வாராமல்
காப்பை மிகத்தேடும் தையிலீர்— கோப்பன்
தருமருதன் வெள்ளோடைத் தான்புர னூரில்
வருமிரவு நேரே மதி.

என்பதே அவ் வழகிய பாடலாகும்.

*சிதைந்த பாடல் சாசனங்கள் :—*

சேலம் மாவட்டம் உத்தம சோழபுரம் கரபுர நாதர் கோயிலில் ஒரு பாடல் சாசனம் உள்ளது.

'சங்கே மடல்கோழி யர்பொன்கோட் டைவாழ்
சதிமறையோர்
செங்கே வடியர்க்குப் பொன்சென்னி பொன்னும்
செழுஞ்சிலம்பில்
கொங்கே........."

என்ற பகுதிக்குமேல் சிதைந்துவிட்டது. வெள்ளோட்டில் கோயில் உட்புறம் '**அழைப் பிச்சான் பாட்டு கலம்பகம்**' என்ற தலைப்பின்கீழ் ஒரு பெரிய பாடல் முன்பு எழுதப்பட்டிருந்தது. இப்போது சிதைந்துவிட்டது. ஈரோடு திருத்தொண்டீசுவரர் கோயில் தெற்குச் சுவரில் ஒரு பாடல் சாசனம் இருக்கிறது. சுவரினுள் பெரும்பகுதி மறைந்து கிடக்கிறது. இன்னும் எண்ணற்ற பாடல் சாசனங்கள் கொங்கு நாட்டில் கிடைக்கலாம். அவைகளை ஆய்ந்து வெளிப்படுத்தல் அறிஞர் கடன்.



# வள்ளுவரின் ஒப்புநயம்

நா. பார்த்தசாரதி
துணை ஆசிரியர்: 'கல்கி'

மிகச்சிறிய குறட்பாவிலும் உவமைகளை நயம்பட அமைக்கும் திறனைத் திருவள்ளுவர்பால் காணலாம். அவர் கூறும் உவமைகள் யாவும் திரண்டு தெருண்ட செறிவும் நுணுக்கமும் பொருந்தியவையாக இருக்கும். தாம் கூற வந்த பொருளை நன்கு விளக்குந் திறன் பெற்ற உவமைகளையே கூறுவார், வள்ளுவர். அணி அலங்காரங்களுக்காக அகப்பட்டவற்றையெல்லாம் ஒப்புக்காட்டும் வேடிக்கைக் கவிவாணர் செயலை அறவே வெறுப்பவர் அவர் என்றுகூடச் சொல்லலாம் பொருளை விளக்குகின்ற ஆற்றலும் பயனும் இல்லாத உவமைகளை அவர் ஒரு போதும் கூறுர். கருத்துக்கு விளக்கம் கூறும் இன்றியமையாத நிலை ஏற்படுமானல் ஒரே உவமையை இரண்டு மாறுபட்ட பொதுத் தன்மைகளையுடைய இரண்டு வேறு உவமைகளாக ஆக்கிக்கூறும் அருங்கலைத் திறனும் வள்ளுவனரிடம் உண்டு. அத்தகைய அருங் கலைத்திறன் அவரியற்றிய நூலுள் அமைந்துள்ளமையைக் குறிப்பிட்டு விளக்குவது தான் இக்கட்டுரையின் நோக்கம். உடம்பிற்கும் உயிருக்குமுள்ள தொடர்பை வள்ளுவர் இரண்டிடங்களில் உவமையாகக் கூறியுள்ளார். உடம்பிற்கும் உயிருக்கும் உள்ள தொடர்பின் நிலையாமையை வேறொரு விதமாக உவமை கூறி விளக்குகிறர், வேறொரு குறளில். ஒருவனுக்கும் ஒருத்திக்குமுள்ள காதலை விளக்கு வதற்கு உடம்பிற்கும் உயிருக்குமுள்ள தொடர்பை நிலைத்ததாக உவமை கூறுகிறர் மற்றொரு குறளில். இவ்விரண்டு உவமைகளில் பொதுத்தன்மை வேறுபடுதல் வெளிப் படையாக விளங்கும். ஒன்றில் நிலையாத 'தொடர்பின்மை'யையும் மற்றொன்றில் நிலைத்த தொடர்பையும் பொதுத்தன்மைகளாகப் பொருத்தி இவ்விரு உவமைகளையும் கூறியிருக்கிறர், வள்ளுவர். அதுதான் இங்கு அவரிடம் நாம் காணும் பெரிய நயம்.

"குடம்பை தனித் தொழியப் புட்பறந்தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு" (நிலையாமை—8)

இஃது அறத்துப்பாலில் துறவறவியலில் நிலையாமை என்னும் அதிகாரத்திலுள்ள ஒரு குறள். 'முட்டை தனித்து நீங்கப் பறவை அதனைவிட்டுச் சென்ருற்போல உடம்பு தனித்து நீங்கும்படியாக அதனைத்தான் பிரிய வேண்டிய காலத்துப் பிரிந்து செல்லுவது உயிர். உடம்பும் உயிரும் அக்காலத்து அன்ன வகையால் தொடர் பின்மையை உறுவன என்பது இக்குறளாற் போந்த கருத்து. இதனுள் 'நட்பின்மை'யை நட்பு என்று சுட்டியுள்ளார் வள்ளுவர். தமிழ் இலக்கண நூலார் இதனை 'எதிர்மறை இலக்கணை' என்பர். இக்குறளைச் சுட்டி. 'அபிதா மூலத்தொனி' என்றும் 'விருத்த விலக்கணை' என்றும் பிரயோக விவேக நூலார் விளக்கியுள்ளமை இங்கே ஒப்பு நோக்கி மகிழத்தக்கது. முட்டையிலிருந்து நீங்குவதற்கு முன் பறவைக்கும் முட்டைக்கும், உடம்பிலிருந்து நீங்குவதற்கு முன் உயிர்க்கும் உடம் பிற்கும் ஒரு குறிப்பிட்ட கால அளவு நட்பு உண்மையைக் கூறுவதற்கு அவ்வாறு இலக்கணைப் பொருளும், தொனி நயமும்பட அமைத்த நுணுக்கம் பாராட்டத் தக்கது.

இக்குறளால் உடம்பிற்கும் உயிர்க்குமுள்ள தொடர்பு நிலையற்றது என்பதை நன்கு வற்புறுத்தும் இதே வள்ளுவர், உடம்பிற்கும் உயிர்க்கும் நிலைத்த தொடர்புள்ளது போல் வேறோரிடத்தில் வேறொரு உவமையைச் சொல்லியிருப்பாராயின் அஃது ஆராய வேண்டிய ஒன்றல்லவா? மூவிரு குற்றமும் முற்றக் கடிந்து பற்றற்ற துறவிக்கு உடலுயிர் இயைபின் நிலையாமையை உணர்த்த வேண்டிய இடத்தில் அமைந்தது இந்த முதல் உவமை. 'ஈருடலும் ஒருயிருமாக இணைந்த காதலர்' என்றவாறு ஒருமை காதலரிருவருக்குமுள்ள தொடர்பை விளங்கக்கூறி விவரிக்க வேண்டிய இடத்தில் உடம்பும் உயிரும் ஒன்றோடொன்று இணைந்து பிணைந்துள்ள இயைபை உணர்த்தி அதுபோன்ற இயைபைக் காதலுக்கும் கற்பிப்பது அந்த இரண்டாவது உவமை.

"உடம்போ டுயிரிடை யென்ன மற்றன்ன
மடந்தையோ டெம்மிடை நட்பு" (காதற் சிறப்பு 2)

இது காமத்துப் பாலில் களவியலில் 'காதற் சிறப்புரைத்தல்' என்னும் அதிகாரத்திலுள்ள ஒரு குறள். 'உடம்பும் உயிரும் தம்முள் இரண்டறக் கலந்து ஒருவராய் இயைந்தாற் போன்றது மடந்தைக்கும் எமக்கும் இடையே உள்ள நட்பு! அது பிரிக்க முடியாது இணைந்த ஒருமைப்பாடு உடையது' என்பது இக்குறளாற் போந்த கருத்து. உடம்பிற்கும் உயிர்க்கும் உள்ள இயைபு மாத்திரமே இங்கே உவமை. 'யாக்கைக்கு உயிர் இயைந்தன்ன நட்பு', 'இருதலைப்புள்ளின் ஒருயிரம்மே' என்று அகநானூறு இக்கருத்தை விவரிக்கும். அவள் வேறு, தான் வேறு என்று வேறுபடாது இயைந்துள்ள காதலுணர்ச்சியின் ஒருமையை நட்பென்று கூறினான் தலைவன். இங்கே உவமை, "உடம்போடு உயிர்க்குமுள்ள இயைபு" பொருள் மடந்தைக்கும் அவனுக்குமுள்ள உணர்ச்சி ஒருமை, இவ்விரண்டு குறள்களிலும் வந்துள்ள இரண்டு உவமைகளையும் இவ்வாறு பகுத்து உண்மை நயத்தைக் காணவில்லையாயின் வள்ளுவர் செய்தது தவறு என்றே நினைக்கத் தோன்றும். முதற் குறளிற் பயின்றுள்ள 'நட்பு' என்ற சொல்லுக்குத் தொடர்பு-உறவு என்றே பொருள் கொண்டால் போதும். இரண்டாங்குறளில் கண்ட 'நட்பு' என்ற சொல்லுக்கு 'உணர்ச்சி ஒருமை' காதல் என்பனபோலப் போந்த பொருள் கொள்ளுவதே உவமையைச் சிறப்பிக்கும். இரண்டு உவமைகளும் வள்ளுவர் கலைத்திறனை விளக்கும் வண்ணம் அமைந்துள்ளன. இக்குறள்களின் விளக்கவுரையில் ஆசிரியர் பரிமேலழகர் சுருக்கமான முறையில் இவைகள் ஒன்றோடொன்று மாறுபடாத நயத்தைக் கூறியிருக்கிறார். ஒன்று துறவுலகம். மற்றொன்று காதலருலகம். இரண்டிலும் அமைந்த உவமையியல்பு மாறுபடாத முறையில் அதற்கு மேற்பட்ட பொருட் சிறப்பையும் காணும்படி செய்திருக்கிறார் வள்ளுவர். ஒருவனுக்கு நிலையாமையை அறிவுறுத்த வேண்டும். மற்றொருவனுக்கு நிலைத்த காதலை அறிவுறுத்த வேண்டும். ஒரே கல்லில் இரண்டு மாங்காய்களை வீழ்த்திக் கல்லையும் திரும்பத் தான் பெற்று விடுவது போல ஒரே கருத்தை இரண்டுவமைகளாக்கிக் குற்றமும் அணுகாமல் காத்துக் கொள்கிறார் வள்ளுவர். நிலையாத உடம்பினைக் கருவியாகக் கொண்ட துறவிக்கு அவ்வுணர்வு மறவாது, தான் முயல வேண்டியது கடனாகின்ற தன்மையை அவ்வாறு உணர்த்தினார். ஈருடல் ஒருயிராகக் கலந்த ஒருமையுணர்ச்சியை இவ்வாறு உணர்த்தினார். கல் ஒன்றுதான். வீழ்ந்த மாங்காய்கள் இரண்டு. 'இரண்டு உவமைகளை வள்ளுவர் இவ்வாறு புணர்த்திக் கூறியது தகுமா?' என்ற மலைப்புக்கு விடை இவ்வளவு விரிந்துபோயிற்று. வெறும் விடையாக மட்டும் அமைந்துவிடவில்லை. ஐயத்தைப் போக்கி அரிய நயத்தையும் காணும்படி செய்து விட்டது அந்த மலைப்பு.

# கம்பராமாயணத்தில் பாட வேறுபாடு

வித்துவான் செ. வேங்கடராமச் செட்டியார்

(விரிவுரையாளர், தமிழ் ஆராய்ச்சித்துறை, அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.)

கம்பராமாயணம் தமிழ் மொழியில் பெரிய இலக்கியச் செல்வமாக – ஈடும் எடுப்பும் இல்லாத பெருங் காப்பியமாக விளங்குவது. முதல் நூலாகிய வான்மீகத்தினும் சிறப்புமிக்கது எனப் பன்மொழியறிந்த பெரும் புலவர்களால் பாராட்டப் படுவது. பிறமொழிவாணரும் விரும்பித் தம் மொழியில் பெயர்த்துக் கொள்ளும் கற்பனைத் திறம் மிக்கது. தமிழ் நாட்டின் பண்பாடுகளைக் காட்டும் கண்ணுடியாகக் காட்சியளிப்பது. பழந்தமிழ் நூல்களில் சிறந்து காணப்படும் கருத்துக்களையும் சொற்களையும் தன்பாற்கொண்டது. தமிழில் தலைசிறந்த நூலாகிய திருக்குறள் கருத்துகளாகிய நன்மணிகளைத் தக்க இடங்களில் கொண்டு விளங்கும் விலைவரம் பறியாப் பேரணிகலனுகத் திகழ்வது. வான்மீகத்தின் வழிநூலே யாயினும் தமிழில் முதல் நூலே என மதித்தற்குரிய தகுதிமிக்க அமைப்புகளையுடையது. கதைப் போக்கிற்கேற்றவாறு வியக்கத்தக்க பலவகை சந்தவிருத்தங்களைக் கொண்ட சால் புடையது. தேனுய் இன்னமுதாய்த் தித்திக்கும் சிறப்பினது. மண்ணுலக ஆட்சியினும் விண்ணுலக நுகர்ச்சியினும் சுவை மிக்கது எனக் கற்றேர் போற்றும் ஏற்ற முடையது. ஒன்பான் சுவையும் தன்பால் கொண்ட தகுதி மிக்கது. கல்லாதார் உள்ளத்தையும் கனிவிக்கும் ஒழுகிய ஓசையும் விழுமிய கதைப் போக்கும் உடையது.

### பாட பேதங்கள் ஏன் தோன்றின ?

இவ்வளவு சிறப்புகளையெல்லாம் பெற்று விளங்கும் கம்பராமாயணம் என்னும் கவினுர் இலக்கியம் தமிழ் மக்கள் பலரால் போற்றிப் படிக்கப் பெறுவது இயல்பே. கல்வியில் குறைந்தவர்களும் கம்பராமாயணத்தை விரும்பிப் படிக்கத் தலைப் பட்டார்கள். தத்தமக்கென்று ஒவ்வொரு ஏட்டுப் பிரதியும் எழுதிக்கொள்ள ஆசைப் பட்டார்கள். கூலி கொடுத்தும் எழுதிக்கொண்டார்கள். பொருள் உணர்ச்சியின்றி எழுதும் பழக்கம் மட்டும் உள்ளவர்களாலும் ஏடுகள் எழுதப்பெற்றன. பல நூற்ருண்டுகளாக இவ்வாறு பலராலும் எழுதிப் படிக்கப் பெற்றமையால், எழுத்தாளர்களின் பொருளுணர்ச்சியின்மையானும், மறதியாலும் பலவிடங்களில் பாட பேதங்கள் தோன்றலாயின. பொருளுணர்ச்சியுள்ளவர்களும் பொருந்திய பொருள் காணவியலாத இடங்களில் தம் கருத்திற்கேற்ற வேறு பாடங்களைத் துணிந்து சேர்க்கலானுர்கள். செய்யுளுக்கிடையில் சில சொற்களை மாற்றியது மட்டுமன்றித் தாம் விரும்பிய கருத்துக்களையும் கதைகளையும் தாமே பாடியும் சேர்த்துவிட்டார்கள். இதனுல் கம்பராமாயணத்தின் பழைய வடிவமே மாறிவிட்டது என்னலாம். பல

எட்டுச் சுவடிகளில் காணப்படும் பாட வேறுபாடுகளைக் காணும்போது இவற்றுள் எது கம்பர் எழுதிய பாடம்? என்பதை நுண்ணறிவுடையோரும் காண்டல் அரிதாகின்றது. திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி போன்ற தமிழ் இலக்கியங்கள் கற்றோரால் மட்டுமே போற்றிப் படிக்கப் பெற்றன; ஆதலால் அவற்றில் மிகுதியான பாட பேதங்களுக்கு இடனில்லாமல் போயது. மேலும் அவற்றிற்குப் பழைய உரை நூல்கள் அமைந்திருந் தமையால், அவற்றில் பாட பேதங்கள் என்னும் புழுதி படியாவண்ணம் காக்கும் உறையாகவும் அவ்வுரை நூல்கள் தடுத்துவிட்டன. கம்பராமாயணம் கல்வியறிவிற் குறைந்தவர்களாலும் விரும்பிப் படிக்கும் நிலை ஏற்பட்டதாலும், பழைய உரைநூல் ஏதும் இல்லாமையாலும், ஏடு எழுதுவோர் தம் விருப்பத்திற்கேற்ப, அறிவிற்கேற்ப, மறதிக்கேற்பப் பாட பேதங்கள் பல ஏடுகளில் ஏறலாயின.

இத்தகைய ஏடுகளில் சிறந்த ஏடுகளைக் கண்டு நுண்ணிதின் ஆராய்ந்து பல அறிஞர்கள் கம்பராமாயணத்தை அச்சிட்டு உள்ளார்கள். அவற்றுள் பின்னைப் பதிப்புகளிலும் முற்காலத்துப் பதிப்புகள் பெரும்பாலும் பிழையற்றனவாய் மரபுக் கேற்றனவாய் விளங்குகின்றன என்பதை அவ்விரு பதிப்புகளையும் ஒப்பு நோக்கி ஆராய்வோர் நன்குணர்வர். எடுத்துக்காட்டாக அயோத்தியா காண்டத்தில் மந்திரப் படலத்தில் உள்ள ஒரு செய்யுளைப் பார்க்கலாம்.

### குற்றமுள்ள பாட பேதத்திற்கு எடுத்துக் காட்டு

இராமனுக்கு முடிசூட்ட எண்ணிய தயரதன், தன் குருவாகிய வசிட்ட ருடைய உடன்பாட்டையும் சுமந்திரன் முதலிய அமைச்சர்களின் உடன்பாட்டையும் பெற்று முடிசூட்டு விழாவிற்கு ஏற்பாடு செய்யுமாறு பணித்துவிட்டான். முறைப்படி பல தேயத்து அரசர்களையெல்லாம் வரவழைத்து அவர்கள் கருத்தையும் அறிய வேண்டித் தன் முடிபைக் கூறுகின்றான். பரசுராமனால் அழிய இருந்த அரச மரபையே பாதுகாத்த பெருவீரன் இராமன் என்பதை நினைவுகூர்ந்த மன்னர்கள் ‘இருபத்தேழு தலைமுறையாக நம் அரசர் மரபை அழித்து வந்த பரசுராமனை மிதிலையிலிருந்து திரும்பிய அன்று, இராமன் வென்றிலனேல், கோசல நாட்டை ஆளும் உரிமை பரசுராமனையன்றோ சேர்ந்திருக்கும்? அந்நிலை நேராதபடி பரசுராமனை வென்ற மாவீர னாகிய இராமனுக்கு இவ்வரசு உரியதாவதே அறமாகும்’ என்று காரணத்தோடு பாராட்டுகின்றார்கள்.

அதைக் கேட்ட தயரதன் தன் மகிழ்ச்சியை மறைத்துக் கொண்டு மேலும் அவர் உட்கருத்தறிய ஒன்று கூறுகின்றான். ‘யான் என் மகன்மேல் வைத்த பேரன் பால் சொன்னதைக் கேட்டு நீங்கள் சொல்லிய இவ்வார்த்தை உங்கள் மகிழ்ச்சி மேலீட்டால் ஆராயாது கூறியதோ? அன்றி, என் உள்ளத்தை நோக்கி அதற்கேற்பக் கூறியதோ? அல்லது இராமன் முடிசூடுதல் தகுதியென்று உண்மையுணர்ந்து கூறியதோ? உள்ளதைச் சொல்லுங்கள்’ என்று வினவுகின்றான். ‘உவகையாலோ, உள்ளம் நோக்கியோ நாங்கள் கூறவில்லை; இவ்வுலகத்தோர் இராமன்பால் காட்டும் பேரன்பினை அறிந்தே இங்ஙனம் கூறினோம்’ என்பதை அம்மன்னர்கள் நிறுவியாக வேண்டும். கூறுகின்றார்கள்: ‘செவ்விய நின்திரு மகற்குத் தேயத்தோர் அவ்வவர்க் கவ்வவர் ஆற்ற ஆற்றுறும், எவ்வம்இல் அன்பினை இனிது கேள் என’ என்று தொடங்குகின்றார்கள். இராமனுக்கு இத்தேயத்தில் உள்ளோர் அவ்வவர் தகுதிக்

கேற்ப மிகுதியாகச் செய்யும் குற்றமற்ற அன்பினை இனிது கேட்பாயாக' என்பது பொருள். இவ்வாறு தொடங்கின அரசர்கள் அடுத்த செய்யுளில் நாட்டு மக்கள் இராமன்பால் காட்டும் அன்பு இத்தகையது என எடுத்துக் காட்டுதல்தானே முறை? ஆனால் இம்முறை கம்பராமாயணம் முழுமைக்கும் உரை கண்ட பெருமைக்குரிய வை. மு. கோபாலகிருஷ்ண மாசாரியார் உரை நூலில் காணப்படவில்லை.

தானமுந் தருமமுந் தகவுந் தன்மைசேர்
ஞானமு நல்லவர்ப் பேணு நன்மையும்
மானவ! எவையும் நின் மகற்குவைகுமால்
ஈனமில் செல்வம் வந்து இயைக என்னவே

என்று அவர் பாடங்கொண்டு, "மநுவமிசத்துக்குத் தலைவனே! கொடையும், அறமும், ஒழுக்கமும், மேன்மை பொருந்திய மெய்யுணர்தலும், பெரியோர்களை விரும்பி வழிபடுகின்ற நலமும் முதலிய எல்லாக் குணங்களும் குறைவற்ற அரசச் செல்வம் வந்து பொருந்தக் கடவது என்று சொல்வதுபோல உன் பிள்ளைக்கு நிலையாய்ப் பொருந்தியுள்ளன" என்று பொருளும் எழுதியுள்ளார்.

### குற்றம் எங்கே?

இப்பாடத்தையும் உரையையும் நோக்குவோமாயின் மேலைச் செய்யுளில் தொடங்கியபடி தேயத்தோர் இராமன்பால் காட்டும் அன்பினை விவரிப்பதாக இல்லை என்பதும், இராமனுடைய நற்குணங்களே பாராட்டப் பெறுகின்றன என்பதும் நன்கு புலனாகும். மேலைச் செய்யுளில் 'நின்மகற்குத் தேயத்தோர்......ஆற்றுறும் எவ்வமில் அன்பினை இனிது கேள்' என்று தொடங்கிய மன்னர்கள், தேயத்தோர் இராமன்பால் காட்டும் அன்பு இத்தகையது என்பதை எடுத்துக் காட்டி விளக்காமல், இராமன் நற்குணங்களைப் பாராட்டினார்கள் என்பது பொருத்தமுடையதுதானா? முன்னொன்று தொடங்கிப் பின்னொன்றும் பேசும் பித்தர்களாக அம்மன்னர்களைக் கம்பர் நமக்குக் காட்டியிருக்கின்றார் என்று இம்முரண்பாட்டைக் கவிச் சக்கரவர்த்தியான கம்பர் தலையில் ஏற்றலாமா? பாட பேதங்களின் பன்மையைப் பார்க்கும்போது இக்குற்றத்தைக் கம்பருக்கு ஏற்ற யாரும் துணிய மாட்டார்கள் என்பது தேற்றம். வை. மு. கோ. அவர்கள் தேர்ந்தெடுத்த பாடத்தில்தான் குற்றமோ? காண்போம்.

### சரியான பாடம்

வை. மு. கோ. அவர்கள் உரையெழுதுதற்கு முன் 1928-ஆம் ஆண்டில் பூமகள் விலாச அச்சுக்கூடத்தில் இரங்கசாமி முதலியாரால் பதிக்கப்பெற்ற அச்சுப் புத்தகத்தில் என்ன பாடம் காணப்படுகின்றது காணலாம்.

தானமுந் தருமமுந் தகவுந் தன்மைசேர்
ஞானமு நல்லவர்ப் பேணு நன்மையும்
மானவ! வையம் நின்மகற்கு வைகலும்
ஈனமில் செல்வம் வந்தியைக வென்னவே

என்றே அப்பதிப்பில் உள்ளது. இப்பாடலில் பின் இரண்டடிகள் மட்டுமே வை. மு. கோ. கொண்ட பாடத்தோடு வேறுபட்டிருக்கின்றன. இப்பாடமே மேலைச்

செய்யுளோடு தொடர்புடையதாக அமைந்துள்ளமை ஆழ்ந்து நோக்குவார்க்கும் புலனுகாமல் போகாது.

மனுவின் வழி வந்த மன்னர் பெருமானே! இவ்வையத்தில் உள்ளோர் நாள் தோறும் செய்யும் தானமும், தருமமும், தவமும், மேன்மை பொருந்திய ஞானமும் நல்லவர்களாகிய துறவிகளைப் போற்றுகின்ற நற்செயல்களும் நின்மகனுகிய இராம னுக்குக் குறைவற்ற செல்வம் வந்து பொருந்துவதாக என்று கருதியேயாம் என்பது பொருள்.

இவ்வுலகத்தில் உள்ளோர் தானம் முதலியவற்றைச் செய்வது தம் நன்மையைக் கருதியன்று; இராமனுக்குக் குறைவற்ற செல்வம் வந்து இயைவதாக என அவன் நலங்கருதியேயாம் என்பதால், மேலைச் செய்யுளில் கூறிய தேயத் தோரின் எவ்வமில் அன்பு இங்குத் தெளிவாதல் காணலாம். இப்பொருளுக்கு முதலடியில் உள்ள தகவு என்பதைக் காட்டிலும் தவமும் என்ற பாடமே பொருத்த முடைமையின் அதற்கேற்பவே உரைவரையப்பட்டது. வையம் இடவாகு பெயராய் உலக மக்களையுணர்த்தியது. வையம் வைகலும் செய்யும் தானமும் தருமமும் தவமும் தன்மைசேர் ஞானமும் நல்லவர்ப் பேணும் நன்மையும் நின்மகற்கு ஈனமில் செல்வம் வந்து இயைக என்னவே எனக்கொண்டு கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். வைகலும் செய்யும் தானமும் எனச் சொல்லெச்சமாக ஒரு சொல் வருவிக்க வேண்டும். ஈனமில் செல்வம் என்றது அரச செல்வத்தை. இதனுல் உலக மக்கள் அனைவரும் இராமன் அரசாள வேண்டும் என்பதில் ஆர்வமுடையவர்களே என்பது புலப்படுத்திய வாறு ஞானம் என்றது ஞான நெறியில் ஒழுகுதலை.

உலக மக்கள் இராமனிடத்தில் இத்தகைய அன்பு பூண்டு ஒழுகின்றனர் என மன்னர்கள் தயரதனுக்குக் கூறியதாக அமைத்த கம்பர், கைகேயி சூழ்வினைப் படலத்தில் மக்களே இராமனிடம் தங்களன்பைப் புலப்படுத்திய நிகழ்ச்சியையும் கூறியுள்ளார். அதைக் காணின் கம்பர் பாடம் இன்னது என்பது தெளிவாகும். கைகேயி அழைத்ததாகச் சுமந்த்ரன் சொன்னது கேட்டுப் புறப்பட்டு வருகின்ற இராமனைக் கண்ட மக்கள் பலபல பேசுகின்றுர்கள். அவற்றுள்,

உய்ந்ததிவ் வுலக மென்பார்; ஊழி காண்கிற்பாய் என்பார்;
மைந்தநீ கோடி, எங்கள் வாழ்க்கைநாள் யாவும் என்பார்;
ஐந்தவித் தரிதிற் செய்த தவமுனக் காக வென்பார்;
பைந்துழாய்த் தெரிய லாய்க்கே நல்வினை பயக்க என்பார்.

என்ற பேச்சுகளே நம் சிந்தனைக்குரிய வாகின்றன. இராமன் முடிசூடப் போகின்றுன் என்ற மகிழ்ச்சியால் மக்கள் பேசுகின்றுர்கள். மன்னர்கள் தயரதனுக்குக் கூறிய போது மக்கள் இராமன்பால் கொண்ட அன்பால் செய்யும் செயல்களாகக் கூறிய வற்றை இரண்டாகப் பகுத்துக் கொண்டு இங்கு இராமனை நோக்கி மக்களே கூறிய தாகக் கம்பர் அமைத்த அமைப்பு மிக்க சிறப்புடையதாகும். மன்னர்கள் தயரத னுக்கு மக்களுடைய அன்புறு செயலாகக் கூறியவை மக்கள்பாலும் இருப்பதாகக் கம்பர் காட்டாதொழியின், அம்மன்னவர்கள் சொன்ன சொற்கள் வாய்மையுடைய வாகக் கொள்ள இயலாதன்றே? மக்களை இல்லறத்தோர் துறவறத்தோர் என இரு வகையினராகப் பிரித்துக் கொள்ளலாம். தானமும், தருமமும் நல்லவர்ப் பேணும்

நன்மையும் இல்லறத்தோர்க்கு உரியன என்பதும், தவமும் ஞானமும் துறவிகட்குரியன என்பதும் தெளிவு. தானமாவது அறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடும் கொடுத்தல். தருமமாவது ஈகை ; அஃதாவது வறியராய் ஏற்றார்க்கு மாற்றாது கொடுத்தல். நல்லவரைப் பேணலாவது உண்டியும் உறையுளும் மருந்தும் முதலியன உதவித் துறவிகளைச் செந்நெறி செலுத்துதல். துறவிகள் இராமன்பால் கொண்ட அன்பால் 'ஐந்து அவித்து அரிதிற் செய்த தவம் உனக்கு ஆக' என்று சொல்கின்றார்கள். ஐம்பொறிகளை அடக்கி அரும்பாடுபட்டுச் செய்த தவத்தின் பயனும் ஞான நெறியில் ஒழுகியதால் வரும் பயனும் இராமனுக்கு உரியவாகுக என்பதே கருத்து. இல்லறத்தோர், 'பைந்துழாய்த் தெரியலாய்க்கே நல்வினை பயக்க' என்று கூறுகின்றனர். இவ்வாறு கூறியதால், 'தானம், தருமம் நல்லவர்ப் பேணும் நன்மை ஆகிய யாங்கள் செய்த நல்வினைகள் யாவும் துளப மாலைக்குரிய உனக்கே பயனளிப்பதாக' என்று கூறியவாறாயிற்று. இல்லறத்தோர் தம் புண்ணியப் பயனையும் துறவறத்தோர் தம் தவப் பயனையும் இராமனுக்கே தத்தம் செய்தனர் என்றவாறு.

இவ்வாறு மக்கள் கருத்தை மன்னவர்கள் புலப்படுத்தியதற்கும் மக்கள் தாமே தம் கருத்தை இராமனுக்குப் புலப்படுத்தியதற்கும் இயைபு மிகவுண்டு என்பது தெளியலாம். ஒருபடலத்தில் கூறிய கருத்தை மூன்றாவது படலத்தில் சென்று இவ்வாறு மறவாது விவரிக்கும் கம்பர் தம் புலமை நினைந்தொறும் வியத்தற்குரியதாகும். ஒருவர் செய்யும் தானம் முதலியவற்றின் பயனைப் பிறர்க்கு உரித்தாக்குவதும் உண்டோ எனின்? உண்டு. இதனை, "காதற்குரங்கு கடைநாளெய்தவும்' தானஞ் செய்யுழி யதற்கொரு கூறு, தீதறு கென்றே செய்தனள்" (சிலப். அடைக்கலக். 175—177) என்று இளங்கோவடிகள் கூறியுள்ளதால் அறியலாம். அவ்வாறு ஒருவரை நோக்கிச் செய்த தானப் பயன் அவர் விரும்பியவாறே அவ்வுயிர்க்குப் பயன் அளிக்கும் என்பதை, "விண்ணோர் வடிவம் பெற்றன ளுதலின், பெற்ற செல்வப் பெரும்பயன் எல்லாம். தற்காத்தளித்தோர் தானச் சிறப்பென" (சிலப் — அடைக். 183 – 185) என்று, சாயலன் மனைவி தானந்தன்னால் குரங்கு யதவனுயிற்று என்பதை விளக்கியிருப்பதால் அறியலாம்.

எனவே, இரங்கசாமி முதலியார் பதிப்பில் உள்ள பாடமே மேலைச் செய்யுளுக்கு இயைபுடையதாய் அமைந்து, பின் வரும் மக்கள் கூறும் கருத்திற்கும் விளக்கமாய் விளங்கியிருத்தல் காணலாம். இவ்வாறு கம்பர் பொருத்தமாகக் கூறியிருந்தும் 1928 ஆம் ஆண்டு பதிப்பும் இப்பாடத்தையே காட்டவும் சில்லாண்டு கழித்து உரையெழுதிய வை. மு. கோ. அவர்கள் இப்பாடத்தைக் கொள்ளாமல் வேறு பாடம் கொண்டு உரை எழுதியுள்ளார். மேலைச் செய்யுளோடு இயைபு இன்மையும் நோக்காது வேறு பாடம் கொண்டு அவர் உரை எழுதக் காரணம் என்னை? எனின், உரை எழுதுதற்கு எளிதாகவுள்ள வேறு பாடம் தாம் கண்ட ஏட்டுச் சுவடிகளில் கிடைத்தமையே அதற்குக் காரணம் ஆகலாம். எவ்வாறாயினும் அவர் புதிதாகக் கண்டு கொண்ட பாடம் சரியான பாடம் அன்று என்பதை மேற்காட்டிய விளக்கத்தால் உணரலாம்.

கம்பராமாயணம் முழுமைக்கும் உரைகண்ட வை. மு. கோ. அவர்கள் இந்தப் பாடத்தைத் துணிந்து சேர்த்து உரையெழுதி விட்டமையால் அவர்க்கும் பின் வந்த பதிப்பாளர்கள் அவர் பாடத்தையே தழுவி அச்சிடலானார்கள். 1943-ஆம் ஆண்டில் வெளி வந்துள்ள ஆழ்வார்திருநகரிப் பதிப்பிலும், (முதலடியில் தகவு

என்பதற்குப் பதிலாகத் "தவமும்" என்று மாற்றியுள்ளது) பின்னிரண்டடிகள் வை. மு. கோ. கொண்ட பாடமே உள்ளது. 1951-ஆம் ஆண்டில் வெளிவந்த டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையப் பதிப்பிலும், மூன்ருமடியில் 'மானமும் ஐய' என்ற மாற்றந்தவிர மற்றையவெல்லாம் வை. மு. கோ. பாடமாகவேயுள்ளது. 1958-ஆம் ஆண்டு வெளிவந்த எஸ். ராஜம் வெளியீட்டிலும் வை. மு. கோ. பாடமேயுள்ளது. இத்துணைப் பதிப்பாசிரியர்களும் இப்பாடம் மேலைச் செய்யுளோடு இயைபின்மையைச் சிறிதுஞ் சிந்தியாது வை. மு. கோ. அவர்களைப் பின்பற்றியே பதித்தமைக்குக் காரணம் என்னை? என்று நோக்குவோமாயின், இராமாயணம் முழுமைக்கும் உரை எழுதிய பெருமையுடையவர் கொண்ட பாடம் சிறந்த பாடமாகவே இருக்கும் என்ற நம்பிக்கையே என்னலாம்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு." (குறள் — 473)

"அரியகற்று ஆசுஅற்ருர் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு" (குறள் — 503)

என்ற தெய்வப் புலவர் வாக்கினை நோக்க வேண்டும். எத்தகையோர்க்கும் மறதியும் அறியாமையும் இயல்பு என்பதை உளங்கொண்டு காய்தலும் உவத்தலும் இல்லாமல் நூல்களை ஆராய்தலே நல்லது. கம்பராமாயணத்தில் காணப்படும் பாடவேறுபாடுகள் என்னும் பெருங் குவியலில் கம்பர் பாடம் எது என்று ஆய்ந்து காண்பது அரிதினும் அரிதேயாகும். ஆயினும், முயற்சிக்குப் பயன் உண்டு என்பதை உளங்கொண்டு அயராது முயல வேண்டும்.

இதுகாறும் கூறியவற்ருல், கம்பராமாயணத்தின் பெருமையும், அதில் பாட வேறுபாடுகள் பல்கியதற்குக் காரணமும், பாட வேறுபாடுகள் பல்கியதால் பதிப்பாசிரியர்க்கு வரும் கலக்கமும், அக்கலக்கத்தால் கொண்ட பாடம் கம்பர் கருத்திற்கு ஏற்புடையதாகாது பிழைபடுகின்றமையும், பிழையாய பாடம் நீக்கி நல்ல பாடத்தை ஆராய்ந்து கண்டு பதிப்பதே அறிவுடையோர் கடப்பாடு என்பதும் புலனும்.



# வேண்டுவது அஞ்சாமை

பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.,
தமிழ்த் துறைத் தலைவர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

"அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு"

என்று திருவள்ளுவர் பல நூற்றாண்டுகளுக்கு முன்னமே கூறிச் சென்றுள்ளார். நாடாளும் மன்னருக்கு இருக்க வேண்டிய நல்லியல்புகளாகிய சிலவற்றுள்ளே அஞ்சாமை 'யும் ஒன்றாக அடங்குகின்றது. இந்தக் குறளை வள்ளுவர் 'முடியரசர்' களுக்குக் கூறிய ஒன்றாகவே கொள்ளினும், இன்று குடியரசுகள் உலகெங்கணும் ஓங்கும் நிலையிலும் இக்குறள் தேவைப்படுகிறதென்பதை யாவரும் அறிவர். நாட்டை ஆளுகின்ற நல்ல மன்னராயினும் மந்திரியாயினும் அல்லது சாதாரண மக்களாயினும் அவர்கட்கு 'அஞ்சாமை' அடிப்படை வாழ்வாக அமைந்தாலன்றி உலகம் என்றும் முன்னேறாது. அஞ்சி அஞ்சி மக்களினம் மாண்டு கழிவதைக் கண்டு வருந்திப் பாடிய புலவர் – அறவோர் – செந்தண்மை பூண்டொழுகும் அந்தணாளர் எண்ணற்றவர். இந்த நூற்றாண்டில் வாழ்ந்த பாரதி அவர் நிலை கண்டு நெஞ்சு பொறுக்குவதில்லையே! என நைந்து பாடுகின்றார்.

"நெஞ்சு பொறுக்குவதில்லையே—இந்த
நிலைகெட்ட மனிதரை நினைத்துவிட்டால்
அஞ்சி அஞ்சிச் சாவார்—அவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே"

என்று அவர் கூறி மேலே அவர்களைப் பயமுறுத்தும் பொருள்களின் பொய்த் தோற்றங்களை நன்கு விளக்குகின்றார். ஆம்! இப்படி அஞ்சாததற்கெல்லாம் அஞ்சி அஞ்சி நிற்கின்ற காரணமே மனித சமுதாயத்தை எங்கோ படுகுழிக்கு இழுத்துச் செல்லுகிறது என்பதை நல்லோர் உணர்வார்.

'அஞ்சாமை அரசர்க்குரிய இயல்புதானே; நமக்கு அது ஏன்?' என்று சிலர் மனதுக்குள் எண்ணியும் சிலர் வெளியில் பேசியும் வாழ்வதை நாம் அறிவோம். இருபதாம் நூற்றாண்டின் இடையில் வாழும் குடியாட்சியில் எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அந்த மறதி உண்டாகாதிருப்பதற் காகவே ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை, குடியாட்சி நாடுகளில் தேர்தல் நடத்தி, நாடாளும் நல்லவரும் வல்லவரும் வீடுதோறும் வந்து வேண்டி வரம் கிடக்க வேண்டியநிலை உண்டாக்கப் பெறுகின்றது. எனவே மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனும் அஞ்சாது வாழவே கடமைப்பட்டவனாகின்றான்.

சமயத் தலைவர்கள் இந்த உண்மையை நன்கு விளக்கிக் காட்டுகின்றார்கள். நாடாண்ட மகேந்திரன் 'வருக' என்று ஆணையிட்டபோது, 'நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்' என்று வீறு பேசி, வெற்றிகண்ட வாகீசராகிய நாவுக்கரசர் வாழ்ந்த நாட்டில்தான் நாமும் வாழ்கின்றோம். 'அஞ்சுவதியா தொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை' என்ற அவர் பாடலை வாயிடை முணுமுணுத்துக் கொண்டே அஞ்சாததற்கெல்லாம் அஞ்சி அஞ்சி வாழ்கின்றோம். 'யாமார்க்கும் குடியல்லோம் யாது மஞ்சோம்' என்ற மாணிக்கவாசகரின் அடியை ஓதி ஓதி உடனுக்குடன் அஞ்சி அஞ்சியே நாம் வாழ்கின்றோம். இந்த நிலை எல்லா நாடுகளிலும் காணப்பெறுகின்ற ஒரு நிலையேயாகும்.

இவ்வாறு அஞ்சாத பொருளுக்கெல்லாம் அஞ்சி வாழ்கின்ற வாழ்வே மனித வாழ்வாகாது. இயேசு தம் எதிரிகளுக்கு அஞ்சித் திரும்பியே தன்னாட்டுக்கு வாராதிருந்தால் உலகில் இன்று அந்தச் சமயம் அன்புச் சமயமாக வாழுமா? அஞ்சாமையில்தானே அன்பு பிறந்தது. இப்படியே ஒவ்வொரு சமயத்தையும் அதனதன் சமயத் தலைவர்களையும் எண்ணிப் பார்க்க வேண்டும். அதனால் நான் யாவற்றையும் அஞ்சாத பொருள் என்று கூறவில்லை. அஞ்ச வேண்டுவனவற்றுக்கு அஞ்ச வேண்டுவதே கடமை. திருவள்ளுவரும் இதைத்தான்,

'அஞ்சுவதஞ்சாமை பேதமை; அஞ்சுவ
தஞ்சலறிவார் தொழில்'

என்றார். எனவே, அஞ்சக்கடவதாகிய பழிபாவங்களுக்கும் பிற கொடுமைகளுக்கும் அஞ்ச வேண்டுவதே கடமையாகும். ஆனால் மனிதன் அவற்றிற்கெல்லாம் அஞ்சாது, அளவுக்கு மீறிய பழிதரும் செயல்களையும் பாவச்செயல்களையும் கூசாது செய்கின்றான்; அவற்றால் தான் வென்று விட்டதாகவும் மார்தட்டி எக்காளமிடுகின்றான். ஆனால் அதே வேளையில் அஞ்ச வேண்டாததற் கெல்லாம் அஞ்சி எதை எதையோ கோட்டை விட்டுக் கொண்டே போகின்றான். முதலாவதாக, இந்த அச்சத்தின் காரணமாக மனிதப் பண்பாடே நிலை கெடுகின்றது. தம் தலைவர் முன்னே 'நல்லதை நல்லது' என்று சொல்ல அஞ்சி, அவர் 'கெட்டது' என்றால், 'ஆம்; கெட்டது' என்று கூத்தாடும் காட்சிகள் நாட்டில் பலப்பல. ஆகவே உயர்ந்த ஒழுக்க நெறியே மறக்கப்பட்டு மறைக்கப்படுகின்றது. நாடாளும் அரசாயினும் தவறு செய்தால் சுட்டிக் காட்ட வேண்டிய அஞ்சாமையை விடுத்து, தமது பதவியும் பிற நலன்களுமே கெடும் என்ற காரணத்தால் பிறரையும் பொது நலத்தையும் காட்டிக் கொடுக்கும் அச்சத்தை இன்று உலகில் எங்கும் காண முடிகின்றதன்றோ! தன் தாய் மொழி எந்த நிலையில் கெட்டாலும் கவலையுறாது, மேலுள்ளவர்களுக்கு அஞ்சி, தம் வாழ்வை வளமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஒரே குறிக்கோளில் வாழ்கின்ற 'தமிழர்' களுக்குத் தமிழ் நாட்டில் பஞ்சமில்லையல்லவா! இப்படியே நாடு கெடினும் நலமெலாம் சாயினும், தன் வாழ்வினையே மதித்து, மேலுள்ளவருக்கு அஞ்சி வாழும் வன்கணாளர் வாழ்வு நாட்டில் இருப்பதை நாம் அறிவோம். அதனாலேயே தமிழ்நாடு எல்லை அளவிலும், பண்பாட்டு நெறியிலும், பிற நல்லியல்புகளிலும் மெள்ள மெள்ளத் தாழ்ந்து கொண்டே செல்லுகின்றது. நல்ல வேளையாக இடையிடையே சில அஞ்சா வீரர்கள் தோன்றி, தமிழர்தம் மானத்தைக் காக்க ஆவன செய்வதால், ஓரளவு 'பாழ்பட்டு வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டு'ப் போகாமல் வாழ்ந்து வருகின்றோம்.

தமிழ், தோன்றிய அந்த நாள் தொட்டு இன்று வரை இத்தகைய அஞ்சா நெஞ்சம் கொண்ட அறவோர் துணையாலேயே வாழ்ந்து வருகின்றது. இவ்வுண்மையை வரலாறு நன்கு விளக்குவதை யாவரும் அறிவர். நாவரசர் அன்று அஞ்சாது நிற்காதிருந்திருப்பராயின் பல்லவர் வழி அவர்தம் பிராகிருதமும் சமஸ்கிருதமும் நாட்டையும் மொழியையும் மாற்றியிருக்கும். இன்றைய நம் அண்டை நாட்டு மொழிகளாகிய மலையாளம், கன்னடம், தெலுங்கு போன்று தமிழும் தன் உரிமை கெட்டு வேற்று மொழியின்றேல் வாழ்வில்லை என வழக்கிழந்திருக்கும். இப்படியே பலகால எல்லைகளின்றும் காரணங் காட்டலாம்.

இவ்வாறு நம் முன்னோர் காத்த நல்லதமிழ் மொழியையும் பண்பாட்டையும் இனியும் வரும் எல்லையற்ற தொல்லைகளைப் போக்கிக் காக்க வேண்டிய பெரும் பணி இன்று வாழும் தமிழ்ச் சமுதாயத்துக்கும் வருங்காலச் சமுதாயத்துக்கும் உண்டு. இதை உணர்ந்து எல்லா வேறுபாடுகளையும் மறந்து தமிழால் ஒன்றுபட்டு, தமிழ் வாழ, தமிழினம் வாழ, தமிழ்ப் பண்பாடு வாழ அஞ்ச வேண்டாததற் கெல்லாம் அஞ்சாது எல்லாவற்றையும் வென்று உற்ற புகழை நிலை நாட்ட முற்பட வேண்டும். இயல்பாக எல்லா நலன்களும் நிரம்பப் பெற்ற நம் தமிழ் மொழி அஞ்சா நல்லாண்மையாளரால் வருங்காலத்தில் உலகில் சிறக்கும் என்பது உறுதி. அதற்கு வேண்டுவது உள உரமே! வேண்டுவது அஞ்சாமையே! அதுவே தமிழ்ச் சமுதாயத்தை வாழ வைப்பது! வளர வைப்பது!



# விளக்கும் விளக்கமும்!

★

வித்துவான் ந. செகதீசன்

('தமிழன்பன்')

★

கொண்டவனைப் பறிகொடுத்த விதவை போலக்
குடைவட்டக் கதிரவனைப் பிரிந்த வானம்
உண்ணெகிழ்ந்து முகம்மங்கிக் கிடக்கும் நேரம்...
உருமறைக்கும் இருள்வளரும் வேளை...! பூவின்
சென்டொத்த அழகியர்கள் மணிக்க ரத்தில்
செஞ்சுடராம் ஒளிப்பிழம்பு விளக்கை யேந்தி
உண்டில்லை எனத்தெளியா இடைநு டங்க
ஒசிந்தொசிந்து மனைமுற்றும் பயிலும் மாலை...

சுதிதழுவி எழுமிசைபோல் அறவோர் சொன்ன
சொல்தழுவி அறந்தழுவி ஆளும் அண்ணல்,
மதிதழுவி ஒளிபரப்பும் வானம் போல
மனவிரிவும் அருளொளியும் கொண்டோர்! அன்பு
நதிதழுவிக் குடிகுளிர்ந்து குழைந்து வாழ்த்தும்
நற்பேறு மிகவுடைய நல்லர்! தூயர்!
மதிப்புடைய நல்லசரத் தலியென் பார்தாம்
மகம்மதியர் மனம்வாழும் நான்காம் காலிப்!

அரசாங்கக் கருவூலக் கணக்குப் பார்க்க
அமர்ந்தகமும் புறமுமெலாம் மறந்தி ருந்தார்!
இரவுமெல்ல அவரிடத்தை எட்டிப் பார்த்தே
ஏடேறி எழுத்துண்ணத் தொடங்குங் காலை
தரமுயர்ந்தோர் தாமெழுந்து விளக்கை யேற்றித்
தலைகுனிந்தார் சுவடிக்குள்! கணக்கி னுள்ளே

அரமொத்த சூரறிவைச் செலுத்த லானுர்
ஆராய்ச்சி சுவைப்படையல் எனக்கொள் நெஞ்சர் !

நிறமுகில்கள் அணிந்தநெடுங் குன்றை யொப்ப
நெடுங்குல்லா முடியணிந்த இரண்டு பேர்கள்
உறவாக அரசியலில் ஆளு வோர்க்கே
உதவுகின்ற வலக்கரத்தர் அங்கு வந்தோர்
புறமாக நின்றிருந்தார் ! காலிப் தம்பால்
பொன்னுன விழிதிருப்பும் பொழுதை நோக்கி,
அறங்கிடந்த மனமுடையார் தலைஉ யர்த்தி
அவரிருவர் தமைக்கண்டார் ! விழிக்கு றிப்பால்

சின்னேரம் பொறுமின்கள் என்ற வர்க்குத்
தெரிவித்துக் கணக்கேட்டைப் புரட்ட லானுர் !
அன்னவர்பால் தம்சொந்த அலவ லொன்றின்
பொருட்டாக அடைந்தவர்கள் காத்து நின்ருர் !
மன்னவர்தம் அலுவலினை விரைந்து செய்து
மடித்துவைத்தார் கணக்கேட்டை ! இருட்ட ழித்துப்
பொன்னொளியைப் புரிந்துவந்த விளக்க ணைத்துப்
புறங்கிடந்த பிறிதொன்றைத் தூண்டி வைத்தார் !

வந்திருந்த இருவருக்கும் வியப்பு ! பாவம்
வாய்திறந்து கேட்பதற்கோ தயக்கம் ! அச்சம் !
எந்தவிதம் கேட்பார்கள் ? இருந்த போதும்
"எதனுலே இருந்தசுடர் விளக்க ணைத்தார் !
இந்தவொரு விளக்கினைத்தான் தூண்டி வைத்தார் ?
இதுவரையும் ஒருவிளக்கு ! புதுவி ளக்கேன் ?–"
சிந்தையிலே வியப்புடனே வினவும் சேர்ந்து
சிறகடிக்க அமர்ந்திருந்தோர் அடக்கத் தோடு !

முடிவுற்ற தவரலுவல்... மனமு ளைத்து
முதிருகின்ற ஐயத்தைக் களைய ஆவல்
துடிக்கிறது ! துணைசெய்ய வல்ல தான
துணிவவரைத் திண்டாடச் செய்து விட்டு
நடிக்கிறது ! எப்படியோ மிகமு யன்று
நற்றுணிவை வரவழைத்துக் கொண்ட பின்னர்
வடிவழகர் காலிப்பின் திருமுன் தாழ்ந்து
வணக்கமுடன் வாய்திறந்து கேட்க லானுர் !

"பார்சுமக்கும் பெருந்தோளீர் ! எங்கள் நெஞ்சில்
படருகின்ற ஐயத்தைத் தீர்த்து வைப்பீர் !
சீர்சுமக்கும் தங்களறை தன்னில் நாங்கள்
சிரந்தாழ்த்திப் புகுமளவும் ஒருவி ளக்குத்
தீர்த்திருளை ஒளியருளி இருந்த தன்றே !
திருவுடையீர் யாம்புகுந்த உடனே அந்த

ஓர்விளக்கை ஏன்அணைத்தீர் ! இவ்வி ளக்கை
ஒளியேற்றி ஏன்வைத்தீர் ! புரிய வில்லை !

அருள்கூர்ந்து மனங்குழப்பும் ஐயந் தன்னை
அகற்றிடுவீர் ! அடியேங்கள் கேட்டு விட்டோம் !
பெருமனத்தால் பொறுத்திடுவீர் !" என்று ரைத்துப்
பேசாமல் பெருந்தகையார் காலிப் ஏந்தல்
தருமுறைக்குச் செவிவைத்துப் பணிந்தி ருந்தார் !
தளராத கொடைக்கரத்தர் முறுவல் பூத்துப்
புருவமெழில் நெற்றியின்மேல் வளைவில் லாகப்
பொருள்மிதக்கும் விழிகளினால் கனிந்து பார்த்தார் !

"நன்று ! நன்று ! நண்பர்காள் ! மனந்தி றந்து
நலங்காணும் உரையாடல் நிகழ்த்த லாமே !
இன்றுமனந் திறந்தெம்மை வினவி னீர்கள் !
எனைமகிழ்ச்சிக் கடலினிலே உருட்டி விட்டீர் !
நன்மனத்துக் காமாலை ஐய மொன்றே
நானதனைக் களைகின்றேன் ! நீவிர் இங்கே
என்னிடத்தை எய்துவரை கருவூ லத்தின்
இருப்புநிலைக் கணக்கினைநான் ஆய்ந்தி ருந்தேன் !

கருவூலக் கணக்கிந்த நாட்டைச் சார்ந்த
கணக்கன்றோ ? அதனாலே நாட்டு மக்கள்
தருகின்ற வரியாலும் இயற்கை நல்கும்
தள்ளாத பொருளாலும் வணிகத் தாலும்
உருவாகும் பொதுச்சொத்தில் பணமெ டுத்தே
ஒருவிளக்கில் நெய்யிட்டுக் கணக்குப் பார்த்தேன் !
ஒருவாறாய் அதைமுடித்தேன் ! விளக்க ணைத்தேன் !
உயர்வுடைய தோழர்காள் ! வந்தீர் ! நீங்கள் !

உம்முடனே உரையாடத் தொடங்கும் வேளை
உடனேயிவ் விளக்கினைநான் தூண்டி வைத்தேன் !
செம்முறையில் என்செலவில் எரியும் இந்தச்
சிறுவிளக்கில் நமதுசொந்தச் செயல் குறித்தே
இம்முறையில் பேசிடலாம் ! பிழையே இல்லை !
எதற்கும்நாம் அரசுநிதி தனையெ டுத்து
நம்நலனுக் கிறைப்பதுதான் நேர்மை யில்லை !
நலன்காணல் பொதுச்சொத்தில் திருட்டுக் குற்றம் !

அரசாங்கப் பணத்தினிலே தனது வாழ்க்கை
ஆக்கமுறக் கைவைப்போன் கொடியன் ! தீயன் !
அரசாங்கப் பதவிவைத்துப் பிறரை யெல்லாம்
ஆட்டிவைத்துச் சுரண்டுபவன் கயவன் ! கீழோன் !
உரமுடையீர் புரிகிறதா ? உமது நெஞ்சில்
உருக்கொண்ட ஐயமெலாம் போக்கி னீரா ?"



**திருவள்ளுவர் விழா :** (1—11—63) பேரவைத் தலைவர்
திரு. வி. பழனியப்ப செட்டியார் அவர்களின் வரவேற்புரை.



**பாராட்டு விழா :** (1—11—63) சித்தாந்தச் செம்மல் திரு. அ. ஞானசம்பந்தம்
அவர்களுக்குச் சிவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் பொன்னுடை போர்த்தல்.



பாராட்டு விழா: (1—11—63) பொன்னுடை பெற்ற புகழ்ச் செல்வர்



பாராட்டுரை: இருமொழிச் சொற்கொண்டல்
திரு. எஸ். மீனாட்சிசுந்தர முதலியார் பி. ஏ., எல். டி. அவர்கள்.

பரந்தமதிப் பெருங்குணத்தர் காலிப் இந்தப்
பனிக்குளிர்ச்சி மொழிபொழிந்து நகைத்து நின்றூர் !

சிந்தையிலே புத்துணர்வு பெருக்கெ டுக்கச்
செப்பலுற்ருர் அவ்விருவர் ! " அரசே ! தாங்கள்
தந்தவொரு நல்விளக்கம் கேட்டோம் ! முன்பு
தலைகாட்டி முளைத்திருந்த ஐயம் முற்றும்
வெந்தவிந்து போயிற்று ! தாங்கள் சொன்ன
விரிவுரைக்கே எந்தவிதம் நன்றி சொல்வோம் ?
புந்திக்குப் பொருளாக ஏற்றுக் கொண்டோம்!
போற்றிமிகப் போற்றி " யென வணங்கி ஞர்கள் !

இவ்வுரைக்கு மேலெதுவும் உரையா ராகி
இதயமெலாம் ஒளிபெருக அங்கி ருந்தே
ஒவ்வுறுநற் களிப்புடனே அகல லாஞர் !
" ஒப்பில்லா இவரன்ருே கோல்செ லுத்தும்
செவ்வையுறு முறைக்குயர்ந்த எடுத்துக் காட்டு !
சிந்திப்பின் இவர்கருத்து வருங்கா லத்தில்
எவ்வெவர்க்கும் பயன்பாடம் புகட்டு மென்றே ",
எண்ணியவர் தமதில்லம் ஏக லாஞர் !

# பழம்பொருட்குப் பழம்பொருள்

வித்துவான் சி. கோவிந்தராசனுர்
(பழம்பொருள் கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சை.)

உலகிலுள்ள பொருள்களுக்கெல்லாம் மிகப்பழமையானதும், முதன்மையானதுமான 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்' இறைவனுகும். அவ்விறைவனை, மக்கள் சமயச் சார்பில், தத்தமக்கு வேண்டியவாறு அறவோர் கண்ட வடிவில் ஆக்கி, அழகு செய்து, பணிந்து, போற்றி வாழ்ந்துள்ளார்கள். அப்பழம் பொருளைத் தூய வழியில் பாதுகாப்பான்வேண்டி, கலைத்துறையில் சிற்பச் சுவட்டில் கோயில்களை ஆக்கி, அதனுள் கருவறை எழுப்பி, தெய்வத் திருமேனிகளை இட்டு, நிலைபெறக் காத்து மகிழ்ந்திருக்கின்றுர்கள். இவ்வாறு சிற்பக்கலை வழியே மல்கித் தழைத்த கோயில்கள் கால எல்லையைக் கடந்து வருங்கால் தட்ப வெப்ப இயல்புக்கும், சமயக் காய்ச்சலால் எழும் சூருவளிக்கும், அரசியல் வெள்ளக் குழப்பத்திற்கும் இலக்காகி, நிலைமாறி, பழமைக்குரிய சின்னங்களாகி விடுகின்றன.

இங்ஙனமே, பல பேரரசுகள் சிதைந்து ஒழிந்து மண்மேடாகிவிட்டன. பல சிறந்த சின்னங்கள் நிலையழிந்து சிதறி உருமாறிவிட்டன. எண்ணிலாத மக்கள் பண்ணிசைத்துப் பாடியாடி வழிபட்ட தெய்வத் திருமேனிகளும், அவைகள் எழுந்தருளப் பெற்ற கோயில்களும் பகை நிகழ்ச்சியாலும், சமயப் பூசலாலும், சிற்பந்தாக்கிகளாலும் நிலையழிந்து இடிபாடுகளுடன் நிற்பதாயின. பல இடம் பெயர்ந்தன. சில புதையுண்டன. இவ்வாறு காலத்தின் கோலமாகக் கதை பேசும் அளவிற்கு இலக்காகி நிற்கும் பழம்பொருள்கள் பலப்பலவாகும்.

இவ்வாறு காலவெள்ளத்திற்கிரையான சிற்பங்களும் சிலைகளும் பழம் பொருள் ஆராய்ச்சிக்குரிய பழம் பொருள்களாகவே தோற்றமளிக்கின்றன. இம்முறையில் என்னுடைய ஆராய்ச்சித் துறைக்குரியதாகத் தமிழ் நாடெங்கணும் கிடைத்தப் பழம் பொருள்களில், சோழநாட்டின் வடக்குப் பகுதியில் உள்ள ஸ்ரீபுரந்தான் என்னும் ஊரில் யான் கண்ட திருமால் திருமேனிகள் ஆராய்ச்சிக்குரிய சிறப்புடையனவாகும்.

கும்பகோணம் வட்டத்திலுள்ள வரலாறுகண்ட திருப்புறம்பயத்திற்கு வடக்கே ஒரு கல்லளவில் கிழக்கிட்டு ஓடும் கொள்ளிடத்தைக் கடந்து செல்லுவோமாயின், வடகரைப் பகுதியில் நான்கு கல் தொலைவில் சிற்றூராகக் காட்சி தரும் ஸ்ரீபுரந்தானைக் காணலாகும். இவ்வூர் ஒரு காலத்தில் பெரிய அளவில் சிறந்த முறையில் இருந்திருக்க வேண்டுமென்பதை, இப்பகுதியில் எங்கு அகழ்ந்தாலும் ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த மக்கள் கையாண்ட மண்பாண்ட ஓடுகளும் செங்கற்களும் கிடைப்பதைக் கொண்டும், பல்லவர் வளர்த்ததும், பிற்காலச் சோழர்கள் காத்ததுமான சிற்பங்கள் ஆங்காங்கு கிடப்பதைக் கொண்டும் நன்கு அறிய முடிகின்றது

இவ்வூர்ப் பெயரின் முதற்பகுதியாகிய ஸ்ரீ என்பது திருமகளை உணர்த்தும். புரந்தான் என்பது திருமகளை வலமார்பினிற்கொண்டு புரந்தானுகிய திருமாலைக் குறிக்கும். எனவே, திருமகள் கேள்வன் திருமாலின் இருப்பிடம் என்னும் பெரும் பொருளைக் கொண்டே ஸ்ரீபுரந்தான் என்று பெயரிட்டுள்ளார்கள். என்பதை உள்ளத்தில் ஒருவாறு கொண்ட நிலையிலேயே இவ்வூரின் பழமையை ஆராய்ச்சி செய்யலானேன். இவ்வூரில் நான்கு திருமால் கோயில்கள் இருந்து அழிந்திருக்கின்றன. திருமாலின் திருமேனி நிலையினை நான்கு திறமாகப் பெருமக்கள் கண்டுள்ளனர். அவை, நின்ற கோலம், இருந்த கோலம், கிடந்த கோலம் என்பதுடன் நடந்த கோலம் என்பதுமாகும். இக்கருத்திற்கு விளக்கமாகப் பொய்கையாழ்வாரும்

"வேங்கடமும், விண்ணகரும், வெஃகாவும் அஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும்,—நான்கிடத்தும்
நின்ருன், இருந்தான், கிடந்தான், நடந்தானே
என்ருல் கெடுமாம் இடர்."

என்று முதல் திருவந்தாதியில் கூறிப்போந்தார்.

இவ்வாறு நான்கு திருப்பதிகளில் எழுந்தருளப் பெற்றிருந்த நான்கு வகைக் கோலத்தையும் ஸ்ரீபுரந்தானில் ஒருசேர அமைத்து வழிபட்டிருந்திருக்கின்ருர்கள். இத்தகைய வைணவத் தலமாகிய ஸ்ரீபுரந்தானில் எழுந்தருளி நின்ற திருமேனிகளை யான் கண்டு கொண்ட செயலினைக் கூறுகின்றேன்.



ஊரின் நடுவிடத்தேயுள்ள இல்லங்களுக்குரிய கொல்லைப் புறமொன்றில், முள்வேலிகள் சூழ்ந்த புதரிடையே, ஒரு புற வேலியே சார்பாக, எதிரே அவ்வப்போது எழுந்து நிற்கும் கை கோல்போரே சூழலாக 'அன்று அமரர்க் கதிபதியும் அயனும் சேயும் அடிபணிய அணியழுந்தூர் நின்ற கோமான்' இன்று பூமகளும் புவிமகளும் இரு புறமும் கேள்வனை எங்நிலையினும் பிரியாதிருப்பதைப் போன்று அணைந்து நிற்க, நிலமளந்த பெருமான் பத்தடி உயர அளவில் நெடிதாக உயர்ந்து பெருமிதத்தோடு நிற்கின்ருர். திருவருள் சுரக்கும் அவர்தம் திருமுகமும், திகழும் நெடுமுடியும் திண்மை எழிலாடும் தோள்களும், திருமகள் இடங்கொண்ட மார்பும், அடியவர்க்கு ஆதர

வாக நின்ற திருவடிகளும், மேனியெங்கும் திகழாபரணங்களும் உயிர்ப்புடன் விளங்க, சிற்பி உயிரோவியமாக வடித்தெடுத்திருக்கின்ருன். இத்தகு நெடுமாலின் இருபுறமும் எழுந்தருளி நிற்கும், திருமகள் நிலமகள் ஆகிய தெய்வத்தாயரின் கருணை நிலேத்தக் கண்களுடன் கூடிய முகங்களும், அழகூட்டும் அங்கங்களின் நெளிவும், அணிகலன்களின் அருமைப்பாடும் இன்னமும் ஒருங்கே செறிந்து காட்சிக்கு மாட்சி யோடு விளங்குகின்றன.

இவ்வளவு பெரிய திருமேனிகள் நின்று விளங்கிய கருவறை எவ்வளவு பெரியதாக இருந்திருக்க வேண்டும்! அதற்குரிய கோயில் எவ்வளவு திருச்சுற்றுடைய தாக அமைந்திருக்க வேண்டும்! கற்பனையில் காணும்போதே வியப்பாகவுளதே. அன்று ஆயிரமாயிரம் வைணவப் பெருமக்கள் போற்றிப் பரவிய பெருமான் இன்று மண்ணினின்மேல் தனித்து மகளிருடன் நிற்கின்ருரே. சூழலில் கருவறையோ கட்டிடமோ இருந்ததற்குரிய சுவடுகூடத் தெரியவில்லையே. என்னே காலத்தின் கோலம்! நிலத்தை அகழ்ந்து ஆராயின் கோயிலின் அளவு ஒருகால் புலனுதற்காம். இத்தகைய நிலேயில் பாரளந்த பழம்பொருளின் நின்ற கோலத்தைக் கண்டு வியப்புற் றேன் யான். நீங்களும் படத்தில் காணுங்கள்.

இவ்வாருன நின்ற கோலத்தைக் கண்ட யான் ஊரின் வடபுறம் சென்று ஆராயலானேன். அங்கு கள்ளிச்செடிகளால் எல்லேகோலப்பெற்ற புன்செய் நிலங்கள் தோற்றமளிக்கின்றன. அவற்றுள் ஒன்றினிடையே, 'ஆயிரம் பெயரால் அமரர் சென்றிறைஞ்ச அறிதுயிலலேகடல் நடுவே, ஆயிரம் சுடர்வாய் அரவணைத் துயின்ருன்' நிலத்துள் அழுந்திய நிலேயில் முடி யொன்றுமே தோற்றமளிக்க மற்றைய பகுதி களெல்லாம் மண்ணுள் மறைய, அருகே புற் பூண்டுகள் முளேத்தெழுந்து காற்றினுல் அசைந்து வழிபட, வலது கையை முடியருகே மடக்கியமைத்த நிலேயில் நிலத்தைக் கிழித்து வெளிப்பட முயற்சிப்பவரைப் போல காட்சி யளித்தார். அணையாக நின்ற ஆதிசேடன், அவருக்குத் தெற்கே இருபதடி அளவில் தரையின் அகட்டிலிருந்து தலேயை மட்டும் வெளியே நீட்டித் தம் தலேவனின் ஆற்றலேத் தனித்தெழுந்து காண்பதைப்போல, எஞ்சிய



பகுதிகளே நிலவகட்டில் ஒடுக்கிய நிலேயில் புதையுண்டு கிடக்கின்ருன். கிடந்த கோலத்தின் திருவடிகளேத் தீண்டிய நிலேயில் இணைந்தமரும் பூமாதும், புவிமாதும் எங்குற்றுரோ; எளியேன் முயன்ற காட்சிக்கு இலக்காயினுரில்லே. இந்நிலேயில் ஒன்பதடி அளவுடையதாக, அறிதுயில்கொண்ட நிலேயில் திருமாலின் திருமேனி கிடக்கின்றது. கோயில் மருங்கற அழிந்து மண்மேடிட்டிருந்த பின்னரே நன்செய் களாகத் திருத்தப்பட்டிருக்கின்றது. இவ்வாறு, ஓங்கி உலகளந்த உத்தமன் மண்ண ளேந்து கிடந்த கோலத்தைக் கண்ட யான், முடியிலிருந்து இயன்ற அளவில் பக்க மண்ணேக் கையால் அகழ்ந்து விலக்கி, காட்சிக்கு அரியனுகிக் கிடந்தானேக் காட்சிக்கு எளியனுக்கிக் கண்ணுரக் கண்டு, அவனழகில் திளேத்து புகைப் படமும் எடுத்து மகிழ்ந்தேன். இதுவே கிடந்த நிலே கிடைத்தச் செய்தியாகும்.

மற்றும், இவ்வூரின் மேற்குப்புறத்தில் இருமகளும் சூழ மிகவும் சிதை வடைந்த நிலையில், நின்ற கோலத்திலொரு பெருமாளும் காட்சியளிக்கின்றார். இவரொருபுறம் நிற்கத் தொடர்ந்து கிழக்கு நோக்கி நடப்போமாயின் இடையே திடலொன்றில் திருமணக்கோலத்துடன் சீதாபிராமனைச் சிதைந்த வடுக்களுடன் ஐந்தடி உயர அளவில் தனித்துச் சீதாதேவியுடன் நிற்கும் திருமேனியைக் காண லாகும். தேவியுடன் கானிடை நடந்த பெருமானுதலின் இதுவே அன்று நடந்த நிலையில் எழுந்தருளப் பெற்ற தெய்வம்போலும்!

ஊரின் வடமேற்கே அழிந்தும் அழியாமலும் தோற்றமளிக்கும் பெருமாள் கோயிலொன்று உள்ளது. இக்கோயிலிலேயே இருந்த கோலத்தில் (அமர்ந்த நிலையில்) திருமால் அமைக்கப்பட்டுள்ளார். இக்கோயிலின் முன்னர் எழுப்பப்பட்டிருந்த மண்ட பங்களும், தோரண வாயிற் கோபுரங்களும் இருந்து அழிந்து கற்பொதிகளாகக் கிடக்கின்றன. அக்கற்றெருகுதிகளை நன்கு ஆராய்ந்ததின் பயனாக, பல்லவர் ஆட்சிக் காலத்தில், கி. பி. 630-க்கு மேல் ஆட்சியேற்று, சிற்பக்கலையைப் புது மெருகுடன் வளர்த்த நரசிம்ம பல்லவனுக்குரிய இலச்சினையாக விளங்கும் சிங்கத் தூண்கள் இரண்டு கிடைத்தன. அத்தூண்கள் அங்கு நின்ற மண்டபங்களை அன்று தாங்கி நின்ற தூண்களாகும். பின்னங்கால்களில் அமர்ந்த நிலையில் நிமிர்ந்து நின்று, தலையில் தூணைத் தாங்கும் பாங்கில் கருங்கற்களில் செதுக்கப் பட்டிருக்கும் தூண்களே நரசிம்மபல்லவன் வளர்த்த சிற்பக்கலையின் சிறந்த இலச்சினை யாகும். இச்சிங்கத் தூண்கள் அகப்பட்ட தைக் கொண்டும், எஞ்சியதாகச் சிதறிக் கிடக்கும் வேலைப்பாடுடைய கருங்கற் சிதை வுகளைக் கொண்டும், நரசிம்ம பல்லவன் காலத்தில் இங்கு திருக்கோயில்கள் கற்றளி யாக எழுப்பப்பட்டிருந்திருக்கின்றதென்பது தெளிவாயிற்று. இக்கருத்திற்கு இலக் காக, ஆங்காங்கு பழம்பொருளாகக் கிடைத்த திருமால் திருமேனிகள் பல்லவர் காலத்தில் ஆக்கப்பட்ட அங்க அளவுகளுடன் இருக்கின்றன. எனவே, ஸ்ரீபுரந்தான் பல்லவர் ஆட்சியில் சிறந்திருந்த காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இடைக்காலம் என்று தணிக்கை செய்யலாகும்.



இத்தகைய ஆய்வினை உள்ளத்திற்கொண்டு சிந்தித்து நின்ற என்னிடம், ஊரவருள் ஒருவர் கிழக்கே ஒட்டைக் கோயிலொன்றுளதென்று பகர, ஓடோடிச் சென்று காணலானேன். பிற்காலச் சோழரின் திருப்பணியால் திகழ்ந்த இச்சிவன் கோயில், சாலை தேய்ந்து பாட்டையானதைப் போன்று, திருச்சுற்று, மதிள், பரிவார தெய்வக்கோட்டங்கள் ஆகியவைகளெல்லாம் அழிந்தொழிய, கருவறை முகமண்டபம் மகாமண்டபம் ஆகிய அளவில் இடிபாடுகள் நிறைந்து யாண்டும் ஒட்டைகள் நிரம்பப் பெற்றதாகி, மக்களால் ஒட்டைக்கோயிலென்றே சுட்டும் நிலையைக்கண்டு வருந்தலானேன்.

இக்கோயில் பிற்காலச் சோழர்கட்குரிய சிற்பச் சுவடுகளோடு கூடிய அடிப்

படையைக் கொண்ட கருவறையோடு விளங்கியதால், அதில் கல்வெட்டுகள் இருக்கக் கூடுமென்ற குறிப்பில் ஆராயலானேன். ஓரளவு புதையுண்டிருந்த அடிப்படையை ஓரடியளவில் அகழ்ந்து பார்த்தபோது பத்ம வரிசையின் மேலுள்ள பலகை வரிசையில் கல்லெழுத்துக்கள் இருப்பது தெரிந்தது. முயன்று கல்வெட்டின் ஒரு பகுதியைக் கண்டு படியெடுக்கலானேன். கல்வெட்டின் மெய்க்கீர்த்தி இரண்டாம் இராசராசனுக்குரியதாக இருந்தமையான், இக்கல்வெட்டு எழுந்த காலம் கி.பி. 12-ஆம் நூற்றுண்டென்பது புலனுயிற்று. மற்றும், இப்பகுதி விக்கிரம சோழ வள நாடென் பதுடன், இவ்வூர் 'ஸ்ரீ பராந்தக சதுர்வேதி மங்கலம்' என்பதும் தெள்ளிதின் விளங்குவதாயிற்று. முதற் குலோத்துங்க சோழனின் மகனுன விக்கிரம சோழனின் பெயரால் வளநாடு பெயர் பெற, சோழர் மரபின் வளர்ச்சிக்குக் காரணமான பராந்தக தேவரின் பெயரால் இவ்வூர்ப் பகுதி நான்மறைவல்ல அந்தணர்கட்கு இறையிலி நிலமாக அளிக்கப்பட்டுள்ளதென்பதைப் புலப்படுத்தும் பெயரால் அழைக்கப்பட்டுள்ளதென்பதும் தெளிவாயிற்று.

## கல்வெட்டின் — முதற்பகுதி

வரி. 1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜராஜ தெவர்க்கு யாண்டு ௯யக. சித்திரை மாசத்து ஒரு நாள், உடையார் கொயில் காலம் பிடாரருஞ் செவுராக்களுக்கும் கண்காணிக் கரணத்தாற்கும் வடக

2. ரை விக்கிரம சொழவளநாட்டு ஸ்ரீ பராந்தகச் சருப்பெதி மங்கலத்து காணி உடைய பிரளையங் காத்தான் ஆழ்வானுன சொழகங்க தெவனென் இற்றை நாளால் உடையார் திருச்சிற்றம்பலமுடையார்க்கு திருப்பாவாடைப்புற திருநாமத்துக் கா

3. ணியும் இறையிலியுமாக நான் திருப்பட்டியில் நீர் வார்த்துக் கொடுத்த நிலமாவது (தொடரும்)

திருச்சிற்றம்பலமுடையார் என்னும் திருநாமமுடைய சிவபெருமான் எழுந்தருளிநின்ற இச்சிவன் கோயிலின் பழமையை விளக்கும் இக்கல்வெட்டுச் செய்தியால், இவ்வூரின் முழுப்பெயர் 'ஸ்ரீ பராந்தகச் சதுர்வேதி மங்கலம்' என்பதும், அப்பெயர் காலப்போக்கில் தேய்ந்து 'ஸ்ரீபுரந்தான்' என்று குறுகியுள்ளதென்பதும் நன்கு புலனுயிற்று. இக்கல்வெட்டில் கண்ட உண்மைகளால், முன்னர் ஸ்ரீபுரந்தான் என்பதற்குத் திருமகள் கேள்வனுகிய திருமாலிடம் என்று காலைப் பொழுதில் பொருள் கொண்ட யான், அன்று மாலைப் பொழுதிற்குள் உண்மையைக் கண்டு பொருளை மாற்றியறியலானேன். இதுபோன்று உண்மையான பெயர்க்காரணத்தை உணர்ந்துகொள்ளாத நிலையில் கண்டதே காட்சியாகப் பொருள் கொள்ளப்பட்டுள்ள ஊர்ப்பெயர்கள் பலவாகும்.

இப் பராந்தகச் சதுர்வேதி மங்கலத்தைச் சார்ந்து கிழக்கே 'விக்கிரமன் மங்கலம்' என்னும் பெயருடன் விளங்கும் சிற்றூரிலும் வரலாற்றுண்மைகள் பல கிடைக்கின்றன. இவ்வாறு சோழநாட்டின் வடக்குப் பகுதியாகும் இடங்களில் சமயச்சார்புடைய பழமைகள் மிகுதியாகச் சிதைந்துள்ளமைக்குக் காரணம் சிற்பங் தாக்கிகளாகத் தென்னகத்தில் அலை அலையாகப் புகுந்த முகம்மதியரின் படையெடுப்பும், ஆட்சிக் கொடுமையும், சமயப்பூசல்களுமேயாகும். இவ்வழிவு நிலை

பதினேழாம் நூற்றுண்டளவில், கொள்ளிடத்திற்கு வடக்கேயுள்ளதும் இடை நாடென்று வரலாறு கண்டதுமான பகுதிகளில் மிகுதியாக நிகழ்ந்திருக்கின்றது. இத்தகைய கொடுமைகட்கிலக்காகியதே ஸ்ரீ பராந்தகச் சதுர்வேதி மங்கலத்தில் எழுந்து நின்ற திருமால் கோயில்களாகும்.

இவ்வாறு இன்று ஸ்ரீபுரந்தான் என்று கூறப்படும் ஸ்ரீ பராந்தகச் சதுர்வேதி மங்கலத்தில் ஆங்காங்கு பழம்பொருளாகக் கிடைக்கும் திருமேனிகளும், சிற்பங்களும், கல்வெட்டுகளும் தமிழக வரலாற்றை வளர்ப்பதற்குரிய பழம் பொருட்குப் பழம்பொருள்களாகும்.






# நாயனுர் கோயில்

**ஜீவபந்து டி. எஸ். ஸ்ரீபால், சென்னை**

[இக்கட்டுரையின் நோக்கம் உண்மையை விளக்குவதற்கேயன்றி உரிமை கொண்டாடவல்ல]

சென்னை மயிலாப்பூரிலுள்ள திருவள்ளுவர் கோயிலைப் பலரும் நன்கு அறிவர். அக்கோயிலைத் திருவள்ளுவர் கோயில் என இன்று அழைக்கப்பட்டாலும் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னர் நயினுர் கோயில் என்றே வழங்கி வந்தது.

வரலாற்றின் வழியில் ஆராயும்போது அக்கோயில் தோன்றிய காலத்திலிருந்து சில நூற்ருண்டுகளுக்கு முன்னர்வரை **நாயனுர் கோயில்** என வழங்கி வந்துள்ளது. நாயனுர் எனில் நாயகன், தலைவன் எனப் பொருள்படும். நாயனுர் என்ற இச்சொல் முதன் முதல் ஜைன சமயத்தவர் போற்றும் தீர்த்தங்கரர்களுக்கும் ஜைன முனிவர்களுக்கும் பட்டப் பெயராகத் தொன்றுதொட்டு வழங்கி வந்துள்ளது. சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் மதுரைக்காண்டத்தின் ஆரம்பத்தில்

" திங்கள் மூன்றடுக்கிய திருமுக்குடைக் கீழ்ச்
செங்கதிர் ஞாயிற்றுத் திகழொளி சிறந்து
கோதை தாழ்பிண்டிக் கொழுநிழ லிருந்த
ஆதியில் தோற்றத்து அறிவனை வணங்கி "

என்னும் அருகன் வாழ்த்துக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையில் அறிவன் கோயில் என்பதற்கு **நாயனுர் கோயில்** என உரை எழுதியுள்ளார். இதுபோன்றே கழுகுமலையிலுள்ள கல்வெட்டுச் செய்திகளில் ஜைன முனிவர்களைப் பற்றிய குறிப்பு

களில் நாயனுர் எனப் பொறிக்கப்பட்டுள்ளன.* திருவதிகையில் கிடைத்த கல்வெட்டுக்களில் ஜைனக் கோயிலை நால்முக நாயனுர் கோயில் என்றும், முனை தீச்சுரம் உடைய நாயனுர் என்றும் காணப்படுகிறது. திருப்பரிதிக் குன்றத்துக் கோயில் கல்வெட்டுச் செய்தியில் அக்கோயில் தீர்த்தங்கரரை நாயனுர் என்றே பொறிக்கப்பெற்றுள்ளது. நன்னூலுக்கு உரை எழுதிய மயிலைநாதர் தமது உரையில் அவிநாயனுர் என்னும் ஜைன அறவோரை அறிமுகப்படுத்தி உள்ளதைப் புலவர் உலகம் நன்கு அறியும். சில பண்டைய கல்வெட்டுச் செய்திகளில் தீர்த்தங்கரர் களையும், முனிவர்களையும் நயினுர் என்றும் குறிக்கப்பட்டுள்ளன. குறிப்பாக விழுப் புரம் தாலுக்காவிலுள்ள கோலியனூர் ஜைனக் கோயில் ஒன்றில் ஸ்வஸ்தி ஸ்ரீ நயினுர் தேவர் பெருமானுர் ஸ்ரீகோயில் என்றும், கோலியாபுரநல்லூர் நயினுர் அருமொழி நாயகர் கோயில் என்றும் காணப்படுகின்றன. இவ்வரலாற்றின் அடிப்படையிலேயே திருக்குறளாசிரியருக்கும் நாயனுர் என்றும், நயினுர் என்றும், தேவர் என்றும் பட்டங்கள் அமைந்துள்ளன. தேவர் என்ற பட்டத்தைப் பற்றிய வரலாறு பலருக்கும் நன்கு தெரியும். ஜைன சமயத்தைத் தோற்றுவித்த முதல் தீர்த்தங்கரருக்கு விருஷப தேவர் (இடப தேவர்) எனப் பட்டம் வழங்கி வந்துள்ளது போன்று ஜைன முனிவர்கள் பலருக்கும் தேவர் பட்டம் விரவி வந்துள்ளதைக் காணலாம். எனவே நாயனுர், தேவர் என்ற பட்டங்கள் முதன் முதல் ஜைன தீர்த்தங்கரர்களுக்கும் முனிவர் களுக்கும் வழங்கி வந்துள்ளன என்பதை அறிகின்ருேம்.

இவ்வரலாற்றை ஆதாரமாகக்கொண்டு மயிலாப்பூரில் அமைந்துள்ள திருக் குறளாசிரியரின் திருக்கோயில் வரலாற்றை ஆராய்வோம்.

" மறமேமுனிந்து மயிலாபுரி நின்று மன்னுயிர்கட்
சுறமே பொழியும் அருட்கொண்டலே யதரஞ்சிவந்த
நிறமே கரியவொண் மாணிக்கமே நெடுநாளொழித்துப்
புறமே திரிந்த பிழையடியேனைப் பொறுத்தருளே "

எனத் திருநூற்றந்தாதி ஆசிரியர் மயிலாபுரியில் கோயில் கொண்டிருந்த நேமிநாத தீர்த்தங்கரரைப் போற்றியுள்ளார். இதுபோன்று வேறு பல தோத்திரப் பாக்க ளாலும், மயிலாப்பூரில் கிடைத்துள்ள ஜைன தீர்த்தங்கரர்களின் உருவச்சிலை களாலும், கல்வெட்டுச் செய்திகளாலும், பண்டைய காலத்தில் ஜைன சமயத்தின் உறைவிடமாய் மயிலாப்பூர் விளங்கிற்றென்பது தெளிவாகிறது. இத்தகு வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த மயிலாப்பூரில் நன்னூல் உரை ஆசிரியர் மயிலைநாதர், அவிரோசி நாதர், நேமிநாதம் இயற்றிய குணவீர பண்டிதர் போன்ற பல்கலைச் செல்வர்களாகிய ஜைன அறவோர்கள் வாழ்ந்து வந்தனர் என்பதையும் ஆராய்ச்சி அறிஞர்கள் அறிவர். மயிலாப்பூரில் வாழ்ந்த ஜைனப் பெருமக்கள் நேமிநாதரை வழிபட்டதைப் போன்றே தெய்வப் புலவராம் திருக்குறளாசிரியரையும் வழிபட மயிலையில் கோயில் ஒன்று அமைத்தார்கள். அக்கோயிலில் திருக்குறளாசிரியரின் திருவடிச் சின்னங் களைப் பொறித்து வைத்து வழிபாடியற்றி வந்தனர்.

நமது பாரத நாட்டின் வரலாற்றை ஆராயின் ஜைன சமயத்தவரே முதன் முதல் தங்கள் தீர்த்தங்கரர்களையும், ஆச்சாரியர்களையும், முனிவர்களையும் வழிபட அம்மகான்களின் திருவடிச் சின்னங்களை அமைத்து வழிபட்டு வந்துள்ளது நன்கு

* சமணமும் தமிழும் என்ற நூலில் காண்க.

விளங்கும். குறிப்பாக இமயமலையில் கைலாசகிரியிலும் வங்காளத்தைச் சார்ந்த சம்மேதசிகரமலையிலும், சம்பாபுரி, பாவாபுரி, கிர்னூர் போன்ற பல மலைகளிலும் தீர்த்தங்கரர்களின் திருவடிகள் பொறிக்கப் பெற்றுள்ளன. தமிழகத்தில் பொன்னூர் குந்தகுந்தாச்சாரியார் திருவடிகளையும், திருப்பறம்பூர் அகளங்கதேவர் திருவடிகளையும், ஜினகாஞ்சியில் வாமனமுனிவர் திருவடிகளையும், விழுக்கம் குணசாகரர் திருவடிகளையும் காணலாம்.

கி. மு. 3-ம் நூற்றுண்டில் தென்னகம் விஜயம் செய்த பத்திரபாகு சுவாமிகளின் திருவடிகளும், மௌரிய சக்கரவர்த்தி சந்திரகுப்த மன்னனின் திருவடிகளும் சிரவண பெள்குளாவில் அழகாகப் பொறிக்கப் பெற்றுள்ளன. இவ்வழக்காற்றின் துறையிலேயே மயிலையிலும் திருக்குறள் ஆசிரியர் திருவுள்ள நாயனுர், அல்லது திருவுள்ள தேவரின் திருவடிகளை ஜைனப் பெருமக்கள் வணங்கி வந்தனர். இவ்வழிபாட்டில் ஏனைய சமயத்தவரும் கலந்துகொள்வார்கள். அவர்கள் இக்கோயிலைக் குறிப்பிடும்போதெல்லாம் தமிழகத்து ஜைனப் பெருமக்களின் பட்டப்பெயராகிய நயினர் என்பதைக்கொண்டு நாயனுர் என்பதை நயினர் கோயில் என அன்புடன் அழைத்துப் போற்றுவார்கள். அவ்வழக்கம் இன்றும் அப்பகுதியில் வழங்குவதைக் காணலாம். சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்னர் 'திருவள்ளுவர் கோயில் எது?' என்று கேட்டால் அக்கோயிலைச் சுற்றியுள்ள வீதிகளில் வசிக்கும் மக்கள் ஒன்றும் விளங்காமல் விழிப்பார்கள். நயினர் கோயில் எனில் 'அதோ' எனச் சுட்டிக்காட்டுவார்கள்.

கி. பி. 17-ம் நூற்றுண்டுவரை மயிலாப்பூரில் பெரும்பாலும் ஜைன சமயத்தவரே வாழ்ந்து வந்தமையால் அவர்களின் பட்டப் பெயராகிய நயினர் என்னும் சிறப்புப் பெயரைக் கொண்டு அவ்வாறு அழைத்து வந்தனர். மயிலையில் ஜைனர்களே மலிந்திருந்தனர் என்பதைப் பண்டைய நூலாகிய தோத்திரத் திரட்டில் " மயிலாப்பூர் பத்து " என்னும் பதிகத்தில்

" ஒளிதரு தண்ணிழல் குலவியோ ரோசனையுயரமோ ரோசனையில்
களிதரு நாண்மலரணியும சோகுடையரி குலநாயகரூர்
விளிதரு மூடமும் வினையும் விடாமயல் வீடருநால் வகையிற்
றெளிதரு சாவகர் செழுமனையேமலி திருமயிலாபுரியே "

என வரும் தோத்திரப் பாவின் கடைசி வரியால் விளங்குகிறது. இதனுல் மயிலாப்பூரில் சாவகர்கள் (நயினர்கள்) சிறப்பாகவும் செழிப்பாகவும் வாழ்ந்திருந்தனர் என்பதையும் அறிகின்றோம். அந்"நயினர்" பட்டம் தமிழகத்தில் வாழும் ஜைனர்களிடம் இன்றும் சிறப்பாக வழங்கி வருகிறது. ஜைன சமயத்தினின்றும் வேறு சமயம் புகுந்தவர்களும் தங்கள் பண்டைய நயினர் பட்டத்தைத் துறக்கவில்லை என்ற உண்மையை இன்றும் காணலாம். குறிப்பாக நீறுபூசி வேளாளர்களும், நெல்லிக்குப்பம், பண்ருட்டி, செஞ்சி முதலான ஆரணி பகுதிகளில் வசிக்கும் பல வேளாளர்களும் பண்டைய நயினர் பட்டத்தையே வைத்துக்கொண்டுள்ளார்கள். தென்னுட்டு முஸ்லீம்களில் பெரும்பாலோருக்கும் நயினர் பட்டம் வழங்குகிறது. அவர்களும் ஜைனர்களாயிருந்து மாறியவர்கள் என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. திருநெல்வேலி ஜில்லாவில் ஆழ்வார்திருநகர், ஸ்ரீவைகுண்டம், தென்காசி போன்ற பல பகுதிகளில் உள்ள சைவ சமயத்து வேளாளர்கள் தங்கள் பெயருக்குப் பின்னுல் நயினர்

பிள்ளை என அமைத்துக்கொண்டுள்ளார்கள். மேலும் தமிழகத்தின் பல பாகங்களில் நயினர்குளம், நயினர் மண்டபம், நயினர்மேடு, நயினர் குப்பம் என வழங்குவதைக் காணலாம். அவைகள் யாவும் ஜைனர்கள் வாழ்ந்த இடங்களேயாகும்.

இத்தகு சான்றுகளால் மயிலாப்பூரில் வாழ்ந்து வந்த நயினர்கள் வழிபாடியற்றிய திருக்குறளாசிரியர் நாயனர் கோயிலே இன்று திருவள்ளுவர் கோயில் என அழைக்கப்படுகிறது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

அத்திருவடிகள் எங்கே ?

பண்டைய காலமுதல் திருக்குறளாசிரியரின் திருவடிகளை வணங்கிவந்த நயினர்கள் (ஜைனர்கள்) மயிலாப்பூரில் பிற்காலத்தில் அருகிவிட்டார்கள். அங்குள்ள கோயில்களும், சின்னங்களும் மறைக்கப்பட்டும், மாற்றப்பட்டும், அழிக்கப்பட்டும் போயின. இது மறுக்கவியலாத வரலாற்றுண்மை! இங்கிலையில் சுமார் 100 அல்லது 120 ஆண்டுகளுக்கு முன்னர் சிலர் திருக்குறளாசிரியருக்கு உருவச்சிலை வைப்பதாகக் கூறித் தாடி மீசை சடையுடன் கூடிய உருவச்சிலையைச் செய்துவந்து திருக்குற ளாசிரியர் திருவடிச் சின்னங்களுக்குப் பின்னே மூலவராக அமைத்தார்கள். அதற்குச் சில ஆண்டுகளுக்குப் பின்னர் அத்திருவடிச் சின்னத்தைப் பெயர்த்தெடுத்து மறைத்துவிட்டார்கள்.

இவ்வடாத செயலைக்கண்ட அங்குள்ள பொதுமக்கள் அர்ச்சகரையும் அவ்வாறு செய்ததற்குக் காரணமாய் இருந்தவர்களையும் எதிர்த்துக் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தார்கள். இவ்வெதிர்ப்பின் வேகத்தை அறிந்த அர்ச்சகர்கள் அச்சின்னத்தைச் சிதைத்துச் சில மாறுதல்களுடன் உள் கோயிலை விட்டு வெளியே மண்டபத்தில் வைத்தார்கள். இவ்வாறு சில காலம் அம்மண்டபத்திலேயே இருந்தது. என்றாலும் அவ்வர்ச்சகர்கள் அத்திருவடிகள் அங்கிருப்பதில் வெறுப்பே கொண்டிருந்தனர். அதற்குக் காரணம் அங்கு வருபவர்கள் அத்திருவடிகளையும் தொழுது வந்தார்கள். அதனால் சில ஆண்டுகள் கழித்து அச்சின்னத்தை அக்கோயிலின் மதிற்சுவரில் வைத்து மூடிவிட்டார்கள். அதனை அறிந்த பொது மக்கள் எதிர்க்கவே புதைத்த இடத்திலேயே திறந்து வைத்துவிட்டார்கள். இக்கிளர்ச்சிகளெல்லாம் ஜைனரல்லாத அப்பகுதிப் பொது மக்களாலேயே நடந்தது. ஏனெனில் அவர்கள் பல காலமாக அத்தேவர் திருவடிகளைத் தொழுது வந்த உரிமையாலும் அன்பாலும் ஆகும். ஜைன சமயத்தவர் வழிபடும் சின்னம் என்பதற்காகவும், திருக்குறளாசிரியரின் இயற்பெய ராகிய திருவுள்ள நாயனர் என்னும் பெயர் மாறித் திருவள்ளுவர் என வழங்குவதை நிலை நிறுத்தவுமே இச்சதிச் செயல் நடந்ததெனில் மிகையாகாது.

இவ்வரலாற்றைச் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னர் அந்நயினர் கோயிலின் எதிர் வீடுகளில் வசித்து வந்த வயது முதிர்ந்தோரின் வாயிலாகக் கேட் டறிந்தேன். இச்செய்தியைத் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களிடத்தும், பேராசிரியர் எ. சக்கரவர்த்தி நயினர் அவர்களிடத்தும் நான் தெரிவித்தேன். அப்பெரியார்கள் இருவரும் வியப்புற்று அங்கு சென்று கோயிலின் எதிர்வீட்டு வாயிற்படியில் நின்றிருந்த முதியோரை விசாரித்து உண்மையை அறிந்தார்கள். பின்னர் 1945-ஆம் ஆண்டில் இக்கட்டுரையின் தலைப்பில் உள்ளது போன்று திருக் குறள் ஆசிரியரின் திருவடிகளைப் படமாக வரைந்து 'ப்ளாக்' செய்து ஒரு பிரசுரம்

வெளியிட்டேன். 1947-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 16-ம் நாள் மயிலாப்பூர் குயப் பேட்டை வீரப்பெருமாள் தெருவில் மயிலைத் திருவள்ளுவர் கழகத்தின் ஆண்டுவிழா நடைபெற்றது. அவ்விழாவில் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களின் வற்புறுத் தலின்பேரில் யான் தலைமை வகித்தேன். எனது தலைமையுரையில் அக்கோயிலின் வரலாற்றைப் பேசுமாறு தமிழ்ப்பெரியார் பணித்தார்கள். அவ்வாறே மேலே குறிப் பிட்ட வரலாற்றை விளக்கிப் பேசினேன். இதனைக்கேட்ட அறிஞர் பெருமக்களும், பொதுமக்களும் வியப்புற்றனர். அது மட்டுமல்ல! பண்டைக்கால மதக்காழ்ப்பின் போக்கினை எண்ணி எண்ணித் திகைத்துவிட்டார்கள். கூட்டம் முடிவடைந்ததும் அவ்விழாவில் சொற்பொழிவாற்றிய அறிஞர் பெருமக்களான தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள், பன்மொழிப்புலவர் டி. பி. மீனாட்சி சுந்தரனார் அவர்கள், தமிழ் அறிஞர் ரெவரெண்ட் அருள்தங்கையா அவர்கள், எஸ். லக்ஷ்மிரதன் பாரதியார் பி. ஏ., பி. எல். அவர்கள், திரு. கே. அன்பழகன் எம். ஏ. அவர்கள் ஆகிய பல அறிஞர் களும், புலவர்களும் திருவள்ளுவர் கோயிலுக்குச் சென்று பார்வையிட்டார்கள். யான் பொதுக்கூட்டத்தில் விளக்கியவாறே மதிற்சுவரில் வைத்துள்ள திருவடிச் சின்னத்தைக் கண்டு முற்றும் உண்மை உண்மை என உள்ளம் பூரிக்கப் பேசிக் கொண்டார்கள். அது மட்டுமல்ல; அங்கு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த அவ்வீதி மக்களில் ஒரு வயது முதிர்ந்த அம்மையாரை நோக்கி இது என்ன கோயில் எனக் கேட்டார்கள். உடனே அக்கிழவி நயினார் கோயில் எனப் பகர்ந்தார். எதிர் பாராத இவ்விடையைக் கேட்டதும் புலவர்களும், பொது மக்களும் கைகொட்டி மகிழ்ந்தார்கள். அவர்கள் அனைவரும் என்னை நோக்கித் தாங்கள் கூறியவாறு நயினார் கோயில் என்பது மறுக்கவியலாத வரலாற்று உண்மை எனப் பாராட்டினர். திருக்குறளாசிரியர் தேவர் திருவடிச் சின்னத்தை அகற்றித் திருவள்ளுவர் உருவச் சிலையெனக் கற்பனையாகச் சில ஆண்டுகளுக்கு முன் அமைத்தும் தொன்றுதொட்டு வரும் நயினார் கோயில் என்ற பெயரும் தேவர் திருவடிச் சின்னமும் அம்மக்கள் உள்ளத்தினின்றும் அகலாது நின்று நிலவுகிறது என்றும் வியந்து பேசினார்கள். இத்தகு அகச்சான்றுகளாலும். புறச்சான்றுகளாலு;ம் உண்மை கண்ட நாம் பண்புடைய வரலாற்றுச் சின்னத்தை நிலைநாட்ட முற்படவேண்டும். இதனால் நமது ஆசிரியர்களாகிய அறவோர்கள் நாம் கொண்டிருக்கும் மதிப்பையும், பக்தியையும் உலகோர் கண்டு வியப்பர். உயர்ந்தோர் திருவடிகளை வணங்கும் நமது பண்பும் எந்நாளும் அழியாது வழி வழி வளரும்.

ஆகவே நமது பாரத அரசியலரால் வெளியிடப்பட்டதும், நமது சென்னை அரசியலாரைக் கலந்து வரையாததுமாகிய திருக்குறளாசிரியரின் திருவுருவப்படம் பெரும்பாலான தமிழ் அறிஞர்கள் ஏற்காததும் பலரும் அறிந்ததே. திருக்குற ளாசிரியர் எவைகளை வேண்டா என வெறுத்தாரோ அவைகளையே அவர் தலையில் வலிந்து சுமத்தியது போன்ற உணர்ச்சியே நமது உள்ளத்தில் உருவாகிறது.

இந்நிலையில் தமிழ் மக்கள் பலரும் சமய, சாதி, அரசியல் கட்சி நோக்கங்களை மறந்து, "ஒன்றாக நல்லது கொல்லாமை" என்னும் அருட்கொடியைத் தாங்கி நிற்கும் நமது தேவர் பெருமானைப் பண்டையகாலச் சான்றோர்கள் வழிநின்று அவ் அறவோரின் திருவடிகளையே சிலையாகச் செய்து வாழ்த்தி வணங்குவோமாக.



# இலக்கிய நோக்கம்

○

புலவர் ந. இராமநாதன் பி. ஓ. எல்.
பார்த்தசாரதி தனிப்பயிற்சிக் கல்லூரி, கோவை.

○



இலக்கியம் என்பது மக்கள் வாழ்வை இலக்காகக் கொண்டு இயங்குவது என்பது பொருள். உயிர்ப் பொருள்களையும், உயிரல் பொருள்களையும் தழுவிய, நம் கண்ணெதிரில் காணும் உலகமே இலக்கியத்தின் பிறப்பிடமாகும். இலக்கியத் திற்கு மட்டுமன்று; ஓவியம், சிற்பம், இசை முதலான நுண்கலைகட்கும் பிறப்பிடமும் வளருமிடமும், வாழுமிடமும் உலகமேயென்பதை நுண்ணிதின் உணரவேண்டும். இலக்கிய ஆசிரியர்கட்கும் பிற நுண்கலைவாணர்கட்கும் அள்ளக் குறைபடாத அரும் மணிகளைத் தந்து கொண்டிருக்கும் சுரங்கமாக மனித வாழ்வுடன் கூடிய உலகம் விளங்குகின்றது. மனிதனுடைய அறிவினுல் முழுக்க அறிந்துகொள்ள முடியாத வாறு துறைதோறும் பலவகைப் புதுமைகளைக்கொண்டு உலகம் இலங்குகின்றது.

கடவுள் அருள் பெற்ற கவிஞர்களும், தெய்வத்தன்மை வாய்க்கப்பெற்ற நுண்கலைவாணர்களும் உலகிடைக்கண்டு கூறியனவும், உருப்படுத்தியுள்ளனவும் மிகச் சிலவேயாகும். பெரியோர்களின் படைப்புக்களையும் உலக வாழ்வின் விரிவான பல அரிய துறைகளையும், அன்றுடம் பட்டறிவின் மூலம் நாம் காணும் உண்மை களையும் நோக்க, அவர்கள் கூறியதெல்லாம், அல்லது உருப்படுத்தியதெல்லாம் வாழ்வுக் கூறுகளின் சில பகுதிகளேயென்பதைத் தெள்ளிதின் உணரலாம். இவ் வுண்மையினை இலக்கியப் படைப்பாளர்கள் தன்னம்பிக்கையோடு எண்ணிப் பார்க்க வேண்டும். தன்னம்பிக்கையுடன் கூடிய காவிய ஓவியப் படைப்பாளர்கட்கு வேண்டுவது புதியவற்றைப் படைக்க வேண்டுமென்னும் உள்ளார்ந்த வேட்கையே யாகும். இவ்வேட்கை தானும் செயற்கையால் போலியாக ஏற்படக்கூடாது. எத்தகைய புகழ்ச்சி இகழ்ச்சிகளையும் எதிர்பாராத, உயிருடனும் உள்ளவுணர்வு களுடனும் பொருந்திக் கிடக்கும் வேட்கையாக அது இலங்க வேண்டும். இத்தகைய கலைவாணர்கட்கு முன்னர் இயற்கையன்னை தன்னுடைய உண்மைக் காட்சிகளை வழங்கிய வண்ணமிருப்பாள். இவ்வாறு உண்மையில் இயற்கையுடன் படிந்த காவிய ஓவியப் படைப்புக்கள் தாம் எக்காலத்தும் நின்று நிலவும் கலைகளாக இலங்குகின்றன. நிலையான இக்கலைக் கோயில்களே மனிதவுள்ளங்களைப் பண்படுத்தி நல்வாழ்வு மலர வழி செய்கின்றன.

## இலக்கியப் படைப்பின் நோக்கம்

இலக்கியத்தையும் கலைகளையும் மனிதன் ஏன் படைக்க வேண்டும்? இவ்வினாவிற்கு இருவகையாக விடைகள் கூறப்படுகின்றன. முதற்கருத்து மக்கள் உள்ளத்திற்கு நல்ல கருத்துக்களையும், சிறந்த நீதிகளையும் வழங்கவே கலை இலக்கியக் கூறுகள் படைக்கப்படுகின்றன என்பது. இரண்டாவது கருத்து கலை இலக்கியப் படைப்புக்கள் கலைக்காகவும் இலக்கியத்திற்காகவுமே படைக்கப்படுகின்றன என்பதாகும். சுருங்கக்கூறின் கலை இலக்கியப் படைப்புக்கள் கருத்துக்களை வழங்கவே யென்பதும், கலை இலக்கியப் படைப்புகள் கலைக்காகவே யென்பதும் ஆகும். இவ்விரு கோட்பாடுகளிலும் உண்மையில்லை. இவ்விரண்டையும் வேண்டிய அளவு இணைப்பதில்தான் உண்மையிருக்கின்றது. இலக்கியப் படைப்பாளன் தான் கூறக் கருதும் கருத்துக்களை அல்லது நீதிகளை இலக்கியச் சுவை கெடாமல் வெகு திறமையாகக் கூறி நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். இலக்கியப் படைப்பாளன் திறமையெல்லாம் இங்கேதான் அமைந்து கிடக்கின்றது. சுருங்கக் கூறினுல், எப்படிக் கூறினுன்? என்பதும், என்ன கூறினுன் என்பதுமே கலை இலக்கியப் படைப்புகட்கு அடிநிலை என்று கூறலாம். பழ மரங்கள் தாங்கள் படைக்கும் பழங்களில் அமைத்துள்ள சுவையாலும் மணத்தாலும், நிறத்தாலும் பறவை இனங்களையும் மக்களினங்களையும் தம் பால் ஈர்த்துக்கொள்ளுகின்றன. சுவைநாடி, மணம் நாடிச் செல்லும் உயிரினங்கள் மரங்களின் விதைகளைப் பல இடங்களிலும் பரப்புகின்றன. இச்செயலை மரங்கள் நிறைவேற்றிக் கொள்ளுவதுபோல, மனிதனும் தான் படைக்கும் இலக்கியப் படைப்பால் தன்னுடைய முடிந்த குறிக்கோளை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். மரத்தின் முழு ஆற்றலும் பழத்தில் அமைந்து அதனுடைய விதை பரவுதலில் முடிதல் போல இலக்கியப் படைப்பாளனின் முழு ஆற்றலும் இலக்கியப் படைப்பின் கவர்ச்சியில் படிந்து கருத்துக்களைப் பரப்புதல் என்பதில் முடிய வேண்டும். தான் கூறும் கருத்துக்களை அல்லது நீதிகளை மறைமுகமாகச் சுவையும் கவர்ச்சியுமிக்க இலக்கியப் போக்கால் அமைத்துவிடுவதே இலக்கியம் வல்லானின் முழுத்திறமையாகும். இலக்கியம் படைக்கும் பாவாணர்கள் கருத்துக்களையே நேர்முகமாக வழங்கும் நாவாணராக மாறிவிடுதல் கூடாது. இலக்கியப் படைப்பின் நோக்கமே மாறுவுண்மைகளை மக்கள் உள்ளத்தில் மலர வைப்பதில் தான் நிறைவேறுகின்றது. இதனைப் பிறிதொரு வகையில் சிந்திப்போம்.

நாம் காணும் உலகு நமக்குக் காட்டும் உண்மையும் இதுவேயாகும். எண்ணற்ற மரஞ் செடி கொடிகள் தோன்றி வளர்ந்து செழித்துப் பூத்துக் காய்த்துக் கண்ணைக் கவருகின்றன. இவைகள் இங்ஙனம் தோன்றி விளங்குவதன் நோக்கமென்ன? இலைகளைப் பச்சைப் பசேலென்று தோற்றுவிக்க மரங்களும் செடிகளும் உள்ளனவென்று கூற முடியுமா? மரங்களிலும் செடிகளிலும் வண்ண மலர்கள் இன் மணம் பரப்பிக் காத்துக் கொண்டிருப்பதேன்? வெறும் அழகுடன் விளங்குவது இவைகளின் குறிக்கோளா? பல வகையான நிறங்களும், நறுமணமும் நறுஞ் சுவையும் சான்ற பல வகையான பழங்களை மரங்களும் செடிகளும் பழுப்பானேன்?

இத்தகைய இயற்கைப் படைப்பின் ஆற்றலை நுண்ணிதின் நோக்கினுல் நமக்கு உண்மை புலப்படும். தன்னுடைய இனத்தை இந்த உலகில் வாழையடி வாழையாக வாழ வைப்பதற்கே, இம்மரங்களும் செடிகளும் கொடிகளும் அரும்பாடு பட்டு நிலத்தினின்றும், வளியினின்றும் சத்துக்களை உறிஞ்சி வாழ்ந்துகொண்டு

பூப்பதன் மூலமும் காய்ப்பதன் மூலமும் கனிகளை நல்குவதன் மூலமும் நிறைவேற்றிக் கொள்ளுகின்றன. இவ்வளர்ச்சிக்கான அவைகளின் குறிக்கோள் நிறைவேறின பிறகு மரஞ்செடி கொடிகளில் உள்ள அழகும் கவர்ச்சியும் இயற்கையன்னையால் பின் வாங்கிக் கொள்ளப்படுகின்றன. மரஞ்செடி கொடிகள் பூத்துக் குலுங்கும் போதுள்ள அழகுதான் முழுமையான அழகு. காய்த்துக் கனியாகத் தொடங்கியதுமே அழகு குறைந்துவிடுகின்றது.

ஒரு எருக்கஞ் செடியை எடுத்துக் கொள்ளுவோம். இது தோன்றி வளரும் போது இதன் கண் அமைந்த இலைகளின் பளபளக்கும் அழகையும் குலைகுலையாகப் பூத்துத் தொங்கும் அழகையும் யாவரும் எங்கும் கண்டு களிக்கலாம். இச்செடிகள் காய்த்து விதைகளை நல்ல காற்றுக் காலத்தில் வெடித்துப் பரப்புகின்றன. விதை களெல்லாம் பாரசூட்டுடன் மனிதன் வானத்தினின்றும் இறங்குவதுபோல ஒரு வகையான பஞ்சுத்தூய்களுடன் பறக்கின்றன. பலவேறு இடங்களில் விழுகின்றன. விழுந்த விதைகள் பல்வேறு இடங்களில் முளைத்துக் கொள்ளுகின்றன. காய்த்து முடிந்ததும் இச்செடிகளின் இலை, காம்பு முதலியவைகட்குள்ள அழகு அடியோடு போய்விடுகின்றது. இவ்வாறு எப்பொருளும் இயற்கையின் குறிக்கோளை நிறை வேற்றவே வாழ்கின்றன. அழகு அழகுக்காக என்னும் தத்துவம் இயற்கையிடம் இல்லை. அழகு அழகுக்காக என்பது உண்மையான இயற்கையோடியைந்ததானல் எப்போதும் அழகுடன் அவைகள் விளங்க வேண்டுமே. அவ்வாறு விளங்க நாம் யாண்டுங் காணுமையின் இதனை ஒரு தத்துவப் போலியாகக்கொள்ள வேண்டும்.

மனித வாழ்வையே சற்று சிந்திப்போம். குழந்தைகள் கவர்ச்சியாக அழகாக வளருகின்றன. காளைப் பருவத்தில் ஆண் பெண்ணுகிய இருபாலாரின் அழகும் உச்சநிலையடைகின்றது. அழகும் கவர்ச்சியும் காதலாகத் தோற்றமெடுக் கின்றன. காதலால் உந்தப்பெற்ற காதலர்கள் ஒருவரை ஒருவர் விரும்பிக் கூடுகின் றனர். காதலின் விளைவு கட்டிளங் குழந்தையாகத் தோற்றமெடுக்கின்றது. குழந்தைகள் பிறக்கப் பிறக்க காதலர்களின் இளமைக் கவர்ச்சியும் குறைந்து விடுகின்றன. வாழைத் தண்டினைப் போன்றிருந்த தொடைகள் தாழைத் தண்டி னுணங்கலாகக் காட்சியளிக்கின்றன. வள்ளைத் தாள்போல் வடித்தெடுக்கப் பெற்றதுபோன்ற காதுகள் உள்ளுன் வாடிய உணங்கலாக ஆய்விடுகின்றன. தளிரடிவண்ணமெல்லாம் போய் முளிமுதிர் தெங்கின் உதிர்காய் போன்ருகி விடுகின்றது. கருநெடுங்கூந்தல் வெள்ளிய கூழையாக மாறியும் தேய்ந்தும் விடுகின்றது. மேற்காட்டியவைகளால் உலகில் வாழும் உயிரினங்களில் காணப் பெறும் அழகும் கவர்ச்சியும் அந்தந்த இனங்களின் விருத்திக்கெனவே இயற்கை அமைத்துள்ளதென்பதை நன்கு அறியலாம். இதனை இயற்கை நேர்முகமாக நிறை வேற்றிக்கொள்ளவில்லை. சுவையுள்ளது போலவும் இன்பமுள்ளது போலவும் உயிரினங்கட்குக் காட்டி இயற்கை தன் கருத்தை முற்றுவித்துக் கொள்ளுகின்றது.

இயற்கையின் படைப்பில் காணப்பெறும் அழகுக்கும் கவர்ச்சிக்கும் ஒரு உள் நோக்கம் இருக்குமேல் காவிய ஓவிய ஆசிரியன் படைக்கும் கலைகளின் அழகுக்கும் கவர்ச்சிக்கும் ஒரு உள் நோக்கம் வேண்டாமா? இவ்வுள் நோக்கம் வேண்டாம் என்பது எங்ஙனம் பொருந்தும்? இயற்கையில் காணப்பெறும் அழகுக்கும் கவர்ச்சிக்கும் இனப்பெருக்கம் என்னும் உள்நோக்கம் இருத்தல் போல, காவியங் களையும் ஓவியங்களையும் படைக்கும் படைப்பாளனுக்கும் உள்நோக்கமிருப்பது

இயற்கையோடியைந்ததேயாகுமென எண்ணலாம். அவ்வுள் நோக்கத்தை நிறை வேற்றிக்கொள்ளவே, அவ்வழகிய கவர்ச்சியுடைய இலக்கியப் படைப்பை ஆக்கு கின்றுனென எண்ணுக.

இதனைப் பிறிதொரு வகையில் சிந்திப்போம். மனிதன் பேசுவதன் நோக்க மென்ன? தன்னுடைய உள்ளக் கருத்தை மற்றவருக்கு வெளிப்படுத்தவே யென்பதை யாவரும் உணர்வர். பட்டறிவின் மூலம் மனிதன் அன்ருடம் அறியும் உண்மைகள் பல. அவைகளையுணர்ந்த வண்ணம் அப்படியே மற்றவருக்கறிவிக்க மனித உள்ளங்கள் துடிக்கின்றன. துடித்த உள்ளங்கள் மிகப்பழங்காலத்தில் கைச்செய்கை களால் தம்முணர்ச்சியுடன் கூடிய எண்ணங்களைப் புலப்படுத்திக் கொண்டன. கைச் செய்கைகளால் உள்ளவுணர்ச்சிகளை முற்ற விளக்க இயலாதென்பது கண்டு பிடிக்கப் பெற்றது. பிறகு மொழி பிறந்தது. பேச்சு மொழி கைச்செய்கையைவிட உணர்ச்சி யுடன் கூடிய கருத்துக்களை விளக்க வன்மை பெற்றிருந்தது. பெரும்பாலான மக்கள் கருத்துக்களை மொழியாலும் உணர்ச்சிகளைச் செய்கையாலும் கலந்தே வெளிப்படுத் தினர். மனிதன் உலகில் வாழ வாழக் கருத்துக்களும் துய்ப்புணர்வுகளும் துறை தோறும் விரிந்தன. இவைகள் முழுமையும் பல காலம் விளக்கப் பேச்சு மொழிக்கு ஆற்றலில்லை. எழுத்து மொழி பிறந்தது. எழுத்து மொழியில் உணர்ச்சியில்லை. உணர்ச்சியையும் கருத்தையும் எக்காலத்தும் வழங்கவல்ல கருவியொன்று தேவைப் பட்டது. பாட்டு மொழி பிறந்தது. பாட்டில் சுருக்கமும் ஆழமும் அழகும் கவர்ச்சியும் ஒரு சேரக் காணப்பட்டன. ஆகவே உலக இலக்கியங்களில் பல பாட்டு மொழியால் யாக்கப்பெற்றுள்ளன. இக்கருத்தைக் காலஞ்சென்ற திருமிகு மறைமலையடிகளார் நன்கு வரைந்துள்ளனர்.

"பாட்டெல்லாம் மக்கள் அறிவைப் பற்றிக்கொண்டு சென்று உணர்ச்சி யைத் தொடவல்லது என்றும், உரைநடை அறிவைத் தொடுமல்லாது உணர்ச்சியைத் தொடாதென்றும்" குறித்துள்ளனர்.

பேச்சுமொழியின் வளர்ச்சியான பாட்டு மொழிக்கும், இப்பாட்டு மொழியால் இயற்றப்பெற்ற கலை இலக்கியங்கட்கும் குறிக்கோள் எவ்வாறு வேருக முடியும்? ஆகவே, கருத்துக்களையும் உண்மைகளையும் நீதிகளையும் உலகுக்கு வழங்குவதே மனிதப் படைப்பான இலக்கியத்தின் அல்லது கலைகளின் குறிக்கோளாகுமென்பதைத் தெள்ளிதின் உணரலாம்.



# கலைஞன் யார்?

பாவலர். பாலசுந்தரனுர், கரந்தை.

அறிவுலகம் பாராட்டி வணங்கி ஏத்தி
ஐம்புலனுல் அகம்நிறைந்து மகிழ்ந்து துய்த்துப்
புறம்பொசியும் மெய்ப் பாட்டாற் புளகமுற்றுப்
புந்திநிறைந்துயிர் தளிர்ப்பப் புகழ்ந்து நாளும்
செறியிருளை விலக்குமொளி என்று பேணித்
தித்திக்குஞ் சிந்தையினுல் தமை மறந்து
குறையுலகங் கொள்ளும்வகை குறித்துக் காட்டும்
கோதற்ற நறுங்கலையாம் பேற்றை ஈங்கே

கருவுற்றுக் கைம்மாறு கருதா தீனும்
கலைஞன்யார்? கருதுங்கால் கடல்சூழ் ஞாலம்
பொருவற்ற வான்சுடர்விண் மீன்கள், தாமும்
புயல்நெருப்பு முதலாகப் பொலிந்து நிற்கும்
பெருமலைமா மரஞ்செடிகள் மலர்கள் விந்தை
பிறங்குவிலங் கூர்வனவான் புட்கள் என்று
மருவுமுயிர் யாவையுமிங் கீன்று தோன்று
மாண்கலைஞன் எடுக்கும்மறு பிறவி யன்றோ

பேருலகைப் பள்ளியெனக் கொள்வான் ஆங்கே
பிறகுங்குபொருள் அத்துணையும் நூலாக் கற்பான்
சீருணரும் சிந்தனையே அவனுக் காசான்
திகழுமுயிர் அத்துணையும் அவற்குத் தோழர்
ஊருகின்ற சிறுபுழுவும் உயர்நி லாவும்
உயர்மணியும் கருங்கல்லும் சமனு நோக்கித்
தேருமதியா லவற்றின் சீர்மை காண்பான்
செவியாலே அவைமொழியும் செய்தி கேட்பான்

இயங்கியற்கை எழிலரசி கொலுவி ருக்கும்
இடந்தோறும் ஊடுருவிப் புலன்க ளூந்தும்
மயங்கியொரு நிலையாகி மனத்த ரங்கில்
மங்கைநடம் புரியுமெழில் மகிழ்ந்து சிந்தை
முயங்கியறி வொன்ருகித் தனைம றந்து
முழுதுமவள் தானுகிக் காதல் முற்றி
நயங்கொழிக்கும் உணர்வெழுந்து ததும்பிப் பொங்க
நலியாமற் கருவுயிர்ப்பான் கலைஞ ஞுவான்

செய்பொருளின் திறன்முழுதும் உணரான் தேருன்
சிதையாமல் அதன்வயமாய்ச் செறிந்து தோய்ந்து
"பொய்இது" என்றறிவறியார் புகலு மாறு
போற்றியுல குய்யும்வகை பொய்பு னைந்து
மெய்யுணர்வைத் தூண்டிஒளி பரவச் செய்யும்
வித்தகனுய் எப்பொழுதும் பித்தனைப் போல்
மய்யலிலே மகிழ்கலைஞன் தன்வாழ்நாளில்
வஞ்சம்அழுக் காறுடையார் வசவில் வாழ்வான்

அச்சமென்ப தறியான்தன் கலையை யன்றி
அடிமைசெயத் தெரியான்பொன் பொருளை வாழ்வைத்
துச்சமென மதித்திருப்பான் தோல்வி கண்டு
துயர்கொள்ளான் புகழ்நோக்கான் ஆர்வமென்னும்
உச்சியிலே வீற்றிருந்திவ் வுலகைக் காண்பான்
உண்டாக்குந் தன்கலையில் இன்பந் துய்ப்பான்
பச்சையிளங் குழந்தைமனங் கொள்வான் துய்ப்போர்
பாராட்டைப் பெரும்பரிசாப் பொருளா வேட்பான்

ஒருதேசம் ஒருசமயம் ஒருமொழிக்கே
உரியவனுத் தனைக்கருதான், உறவுச் சுற்றம்
திருவாழ்வு சேர்பதவி சிந்தை செய்யான்
செல்நெறியும் அல்நெறியும் தேர்ந்து நோக்கான்
தருவாரும் பெறுவாரும் சமம் அவற்குச்
சாதிகுலப் பிறப்பெல்லாம் ஒன்றே யாகும்
கருவாலே திருவுற்றுக் கலைப் படைப்பைக்
கண்ணுக உயிராகக் காதலிப்பான்

முன்பிருந்த நிலைதெரியான் முடிவும் நோக்கான்
முறைநோக்கான் மொய்ம்புணர்வில் மூழ்கித் தோய்வான்

இன்பமிவை துன்பமிவை என்று காணுன்
எழிலுணர்வே ஐம்புலனுல் ஏந்தி நிற்பான்
மின்வெட்டுப் போலுணர்வு மேவுங் காலே
விண்மாரி இடித்திடித்துப் பொழிவதைப் போல்
மன்பதையோர் சிந்தைசெழித் தின்பு கூர
மாணறிவாற் கலேமாரி வழங்கி வாழ்வான்

செங்கதிர்போல் தேனீப்போல் செயல் மேற்கொண்டு
திங்களைப்போல் திகழ்தருவான், கல்விக் காட்டில்
சிங்கமெனத் திரிதருவான் உலகோர் வாழ்வைத்
தித்திக்கச் செய்வான்றன் செழும் படைப்பில்
பொங்குமெழிற் பின்னுக இன்பம் பூக்கப்
புடைக்குமுணர் வாருக அறிவு கூரத்
துங்கமுறச் செயவல்லான் கலேஞன் அன்னுன்
தோற்றத்தால் மனிதன்தன் **செயலால் "தேவன்"**

# பழையன பாதுகாக்கும் இலாகா

★

டாக்டர் மா. இராசமாணிக்கனார், எம். ஏ., எல். ஒ. எல்., எல். டி., பி. எச். டி.,
சென்னைப் பல்கலைக் கழகம்

★

இற்றைக்கு ஏறத்தாழ ஆயிரத்து எழுநூறு ஆண்டுகட்கு முன்பு சிறப்புற்று இருந்த காவிரிப்பூம்பட்டினம், சோபட்டினம், மாமல்லபுரம், கொற்கை, தொண்டி, முசிறி முதலிய துறைமுகங்கள் இன்று காணத்தகும் நிலையில் இல்லாமல் அழிந்துவிட்டன. அவ்விடங்களில் அக்காலக் காசுகளும் மட்பாண்டச் சிதைவுகளும் இன்றளவும் கிடைத்து வருகின்றன. கொற்கை நகரத்தில் இன்றும் காசுகள் கிடைக்கின்றன. டாக்டர் கால்டுவெல் அங்கு ஆராய்ச்சி நடத்தி அந்நகரம் இருந்த பகுதியை அகழ்ந்து ஆராய வேண்டும் என்று சென்ற நூற்றாண்டில் அரசாங்கத்திற்கு வேண்டுகோள் கடிதம் எழுதினர்.

பெரியாறு கடலொடு கடந்த இடத்தில்தான் சங்க கால முசிறி இருந்தது. முசிறியும் அதனை அடுத்திருந்த வஞ்சிமா நகரமும் இன்று காணத்தகும் நிலையில் இல்லை. அந்நிலப் பகுதி கடலுக்கும் உப்பங்கழிக்கும் இடைப்பட்டுள்ள நிலத்தில் உள்ளது. கொச்சி அரசாங்கம் அங்கு ஆராய்ச்சி நிகழ்த்தி ஓரளவு உண்மை கண்டது. ஆயினும், மேலும் தொடர்ந்து ஆராய்ச்சி நிகழவில்லை.

தமிழகத்தில் பல இடங்களில் பண்டைக்காலத் தாழிகள் புதைக்கப்பட்ட இடங்கள் மிகப் பலவாக உள்ளன. இதுகாறும் கூறப்பெற்றவை புதை பொருள் ஆராய்ச்சி இலாகாவைச் சேர்ந்தவை. பல ஊர்களில் புத்தர் அல்லது சமணர் சிலைகள் திறந்த வெளிகளில் கவனிப்பாரற்றுக் கிடக்கின்றன. சில ஊர்களில் இச்சிலைக்குத் திருநாறுபூசி மக்கள் வழிபடுகின்றனர்.

## செய்ய வேண்டுவன

பழமையைப் பாதுகாக்கும் இலாகா ஒன்று ஒவ்வொரு மாகாணத்திலும் அரசாங்க நிலையில் இருந்து செயற்படுதல் நல்லது. அது புதை பொருள் ஆராய்ச்சி இலாகாவோடு இணைந்தும் வேலை செய்யலாம். ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒவ்வொரு புலவரை நியமித்து அவருக்கு வேலை தரவேண்டும். அவர் ஒவ்வொரு

ஊரிலும் உள்ள பெருந்தெய்வங்கள், சிறுதெய்வங்கள், அவை பற்றிய விழாக்கள், மக்கள் பேச்சு வழக்கிலுள்ள இலக்கியச் சொற்கள், செவிவழிச் செய்திகள் இவற்றைத் தொகுத்துத் தலைமை நிலையத்திற்கு அனுப்ப வேண்டும். ஒவ்வொரு மாவட்டத்திலும் சிதறுண்டு கிடக்கும் சிற்பங்களைத் தொகுத்து மாவட்டத் தலைநகரில் பொருட்காட்சிச் சாலையை அமைக்க வேண்டும். இவ்வாறு எல்லா மாவட்டங்களிலும் ஒரே சமயத்தில் வேலை நடைபெறுமாயின், தமிழ்நாடு முழுமையிலும் சில ஆண்டுகளில் தமிழகம் பற்றிய பல விவரங்களையும் எளிதில் அறிதல் கூடும். ஒவ்வோர் இனத்து மக்களுடைய வழிபாட்டு முறைகள், பழக்க வழக்கங்கள், ஆட்சிச் சொற்கள், வரலாற்றுக்குரிய பழைய செய்திகள் முதலியவற்றை எளிதில் அறிந்து கொள்ள முடியும்.

மார்கழி நோன்பு கொங்கு நாட்டில் கொண்டாடப்படும் முறை வேறு; தமிழகத்தில் கொண்டாடப்படும் முறை வேறு. இவ்வாறே சோழ நாடு, பாண்டிய நாடு, கொங்கு நாடு, தொண்டைநாடு ஆகிய நாடுகளில் சில விழாக்களும் நோன்புகளும் வேறுபடுகின்றன. இந்த விவரங்களை அறியவும், இவற்றுக்குரிய காரணங்களை ஆராயவும், நமது பழைமையை அறிந்து பண்படவும், தமிழ் மக்கள் ஒற்றுமைப் படவும், எல்லாச் செய்திகளையும் அறிந்து இன்புறவும் **பழைமையைப் பாதுகாக்கும் இலாகா** மிகவும் இன்றியமையாதது. அரசாங்கம் இத்துறையில் கவனம் செலுத்துமாயின், தமிழக வரலாறு மிக்க சிறப்படையும்.

# தமிழ்க் கண்டத்தைக் கண்டுபிடித்தல்

பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர், எம். ஏ., எம். லிட்.,
மொழியியல் துறைத் தலைவர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

## உரைச் செய்யுள்

தமிழிலக்கிய மென்ருல் தமிழ்ப் பாக்களையே நினைத்துக் கொள்கிருேம். உரைநடை நூல்களையும் இலக்கியமென்றே கொள்ள வேண்டும். நம்முடைய மனத்தைக் கவர்ந்து சுவையூட்டுவன எல்லாம் இலக்கியமேயாம். எளிதில் உருப்போடுவதற்கும் சுருக்கமாக எழுதுவதற்கும் செய்யுள்கள் உதவுவதால் ஏடும் எழுத்தாணியும் கொண்டு எழுதிய காலத்தில் எல்லா வகையான நூல்களையும் செய்யுளிலேயே எழுதி வந்தார்கள். அதனுலேதான் நூலென்ருல் செய்யுள் நடையில் இருக்க வேண்டும் என்றவொரு மயக்கம் உண்டாயிற்று. நூல்களுக்கு விளக்கம் கூறும் வகையில் நச்சினர்க்கினியர் போன்றவர்கள் அன்றுமுதல் இன்றுவரை எழுதி வருகிருர்கள். இவை உரைநடையில்தான் இருக்கின்றன. இதனுலே மற்ருெரு மயக்கமும் உண்டாயிற்று. உரை யென்ருல் ஏதோ ஒரு நூலுக்கு விளக்கம் கூறுவதே என்ற எண்ணம் பரவியது. பாச் செய்யுளுக்கு வேருன சொற்ருெடரமைப்பில் அமைவதே உரை என்பதை மறந்து விடுகிருேம். தொல்காப்பியர் இலக்கிய அமைப்பைச் செய்யுள் என்றும், இந்தச் செய்யுள் பாவாக அமையும் பாச்செய்யுள் என்றும், உரை நடையில் அமையும் உரைச்செய்யுள் என்றும் இரண்டு வகையாகும் என்றும் விளக்குகிருர். பாச் செய்யுளினும் வேருன இந்த அமைப்பை உரையென்று கூறினுல் பொருளில் குழப்பமே வரும் என்றெண்ணி உரைநடை என்ற தொடரை இக்காலத்தில் பயன்படுத்துகிருேம்.

## உரைநடை இலக்கியம்

இலக்கிய நயமுடைய உரைநடை நூல்கள் பழங்காலத்தில் தமிழில் மிகச் சிலவேயாம். நக்கீரர் முதலானுேர் எழுதிய விளக்கங்களிலும் சில நயமுள்ள பகுதிகள் உண்டு. பாட்டின் இடையே இடையே ‘சிலப்பதிகாரம்,’ ‘பெருந்தேவனுர் பாரதம்’ முதலிய நூல்களில் உரைநடை அமைப்பும் இருக்கக் காண்கிருேம். ஸ்ரீபுராணம் என்ற சைனநூல் உரைநடை இலக்கியமாகவே விளங்குகிறது. மேனுட்டுத் தொடர்பினுலே அச்சடித்து நூலைப் பரப்புவது எளிதாகியது. இதனைப் பயன்படுத்திக் கிறித்துவப் பாதிரிமார்கள் பல உரைநடை நூல்களை எளிய நடையில் எழுதி வெளியிட்டார்கள். “அவிவேக பூரண குரு கதை” இந்த வகையில் எழுந்த நூல்களில் சிறந்ததாகும்.

## சுவையா ? அருமையா ?

ஆகையால் உரைநடை நூல்களையும் இலக்கியமென்றே நாம் கற்கவேண்டும்.

உரை நடை நூல்களைப் பலர் படியாமலில்லை. ஆனால் அவற்றைப் பொழுது போக்கிற்காகப் படிக்கின்றார்களேயன்றி இலக்கியக் கண்கொண்டு கற்றுக் கொள்கிறார்கள் என்பதில்லை. பழைய தமிழாசிரியர்கள், அந்தாதி முதலியவற்றிற்குக் கொடுக்கின்ற பெருமதிப்பைத் தமிழில் வெளிவரும் சிறந்த சிறு கதைக்கோ, நாவலுக்கோ கொடுப்பார்களா என்று எண்ணிப் பார்க்க வேண்டும். சுவை மிகுந்ததே இலக்கியம் என்பது போகக் கடுமை மிகுந்ததே இலக்கியம் என்ற எண்ணம் எங்கோ நம் மனத்துள் புகுந்து கொண்டு நம்மை அலைக்கிறது. இந்தப் பேயை ஓட்டி விட்டால் தான் உண்மை இலக்கியத்தை உணர்ந்து சுவைக்கும் திறமை வளரும்.

### அச்சில் பழங்கதைகள்

இந்தக் கண் கொண்டு பார்ப்போமானால் நம் காலத்தில் எழுகின்ற உரை நடை நூல்களைக் குற்றங் காணும் கண்ணோடில்லாமல் இலக்கியச் சுவையை உணர்ந்து அந்த நூல்களோடே ஒன்றுபட்டுப் படித்து மகிழும் நிலைமை வளர வேண்டும் என்பது விளங்கும். அங்கு ஒரு நூலோடு ஒரு நூலை நம் மனம் ஒத்துப் பார்க்கும்போது குறைகளும் நிறைகளும் வெளியாகும் என்பதிலே ஐயமில்லை. இப்படிப் படிக்கும் நிலை வளருமானால் கடந்த நூற்றாண்டுகளில் வெளியாகிய உரை நடை நூல்களை இலக்கியங்கள் என்ற கண்ணோட்டத்தில் படிக்க முடியும். "பிரதாப முதலியார் சரித்திரம்" முதலியவற்றை மட்டும் இங்கு நாம் குறிக்கவில்லை. 'இராமாயணம்' முதலியவற்றை உரை நடையில் எழுதியவற்றிலும் இலக்கிய நயம் உண்டு. இவை போக, பல நாடோடிக் கதைகளையும், புதிய கதைகளையும் எழுதி அச்சிட்டுள்ளார்கள். "பன்னிரண்டு மந்திரி கதை", "விக்கிரமாதித்தன் கதை", "நாலு பக்கிரி கதை" என்று எத்தனையோ கதைகள் வெளிவந்துள்ளன. இவற்றின் பலவகையான போக்குகளையும் ஒப்பிட்டுப் பார்த்து மகிழலாம்.

### ஓலையில் பழங்கதைகள்

இப்படிப் பழகும்போது பழமைக்கு அடிமையாகிவிடக் கூடாது. பழங் காலத்து நூல்கள் பலவற்றைப் படித்துக் கொண்டே வரும்போது அவற்றோடேயே ஒன்றுபட்டுப் போய்க் குறைகளை மறந்து நிற்கும் நிலை உண்டாகும். அங்கேதான் பழமைக்கு அடிமையாகும் நிலை வேரூன்றிப் போகும். இந்த எச்சரிக்கையோடு படித்து வந்தால் ஏட்டுச் சுவடிகளிலே பழைய கதைகள் இருப்பதைக் காண்போம். அவற்றில் பல சைனக் கதைகள். இலக்கணப் புலவர்கள் இதில் எங்கே பார்த்தாலும் பிழையையே காண்பார்கள். இருந்தாலும் இவையெல்லாம் அந்தக் காலத் தமிழ்ப் பேச்சின் போக்கு என்றெண்ணி அவற்றைப் படிக்க வேண்டும். நம்முடைய காலத்திற்குக் கருத்தாலும் ஒட்டாதவை; பேச்சாலும் ஒட்டாதவை; அப்படி இருந்தாலும் அவற்றைப் படித்துக் குறைவு, நிறைவு காணும் மனந்தான் சுவைஞனது மனமென்று பெயரெடுக்கும். குப்பையிலும் மாணிக்கம் மறைந்து கிடக்குமல்லவா? இவற்றைச் சுவைப்பதற்குப் பழமொழிகளிலும் விடுகதைகளிலும் நம் மனம் பழக வேண்டும். இவற்றைத்தான் தொல்காப்பியர் சிறந்த உரைச் செய்யுள் என்று சொல்லியிருக்கிறார்.

### தமிழை அறிதல்

உரைநடை நூல்களை இலக்கியமென்று எண்ணிப் படிப்பதோடு இதுவரையிலும் ஒதுக்கித் தள்ளப்பட்ட பழைய கதைகளையும் அச்சிலும் ஓலையிலும் தேடிப்பிடித்து அந்தந்தக் காலத் தமிழ் மக்களின் பேச்சோடும் எழுத்தோடும் ஒன்றாகி அவர்கள் உள்ளத்தை உணர்ந்து அதனோடு ஒத்துத் துடித்துத் துள்ளும் மனத்தை இன்று

நாம் பெற்ருல்தான் தமிழை உள்ளபடியே அறிந்தவர்களாவோம். இதனை விளக்கவே இந்தக் கட்டுரை எழுந்தது. தமிழை அறிவதென்ருல் தமிழ் என்ற மலையின் கொடு முடிகளை மட்டும் அறிந்தால் போதாது. பிறருக்குக் காட்டுவதற்கு அது உதவலாம். தமிழை உணர்ந்து தமிழனை முழுதும் அறிய வேண்டுமென்ருல் தமிழிலக்கியத்தை முழுநோக்காகப் பார்க்க வேண்டும்.

தமிழை உணர்தல்

"என்னுடைய மனைவியின் குற்றங்களும் எனக்கு இனிப்பதுபோல இந்து மதத்தின் குறைகளும் எனக்கு இனிக்கின்றன" என்று காந்தியடிகள் ஒரு முறை கூறினர். அதுபோலத் தமிழின் பலவகை நிலைகளும் நமக்கு இனிக்க வேண்டுமல்லவா! அப்போதுதான் தமிழ் பட்டபாடு, தமிழ் குற்றுயிரும் குலையுயிருமாக இருந்த நிலை, அந்த நிலையிலும் அது கண்ட கனவுகள், அலறிய அலறல்கள், பேசிய பேச்சுக்கள் முதலிய எல்லாம் விளங்கும்.

தமிழைக் கண்டுபிடித்தல்

ஜவஹர் அவர்கள் இந்தியாவைத் தாம் எப்படிக் கண்டுபிடித்தாரென ஒரு நூல் எழுதியுள்ளார். அதுபோலத் தமிழன் ஒவ்வொருவனும் நாம் இங்கே விளக்கி வந்ததுபோலத் தமிழைக் கண்டுபிடிக்கும் ஒரு தீரச் செயலில் இறங்க வேண்டும். பொது மக்கள் உள்ளத்தை அறிந்து உணர்ந்தாலன்றித் தமிழன்னையின் உள்ளத்தை உணர்ந்து அறிய முடியாது.

# SOME THOUGHTS ON DEMOCRATIC SOCIALISM AND PLANNING

C. R. PATTABHI RAMAN,
Union Dy. Minister for Information & Broadcasting

In socialism, the principle involved is that individual freedom should be subordinated to the interests of the community. Socialism stands for a form of economic organisation in which private ownership of property is prevented from becoming an instrument of exploitation and therefore implies replacement by social ownership wherever there is possibility of such exploitation. This by itself is not a sound condition for realising socialist ideals, but, in principle, it is a necessary one. In some fashion or other all modern Governments have a positive role in the welfare of its people and are by and large socialistic. However, in the fight for certain ideals we find today that some amount of vituperation is being hurled at one another by political parties. Many Western thinkers characterise Communist Governments as State Capitalists, pretending to be truly democratic. Their opposite numbers claim that they are the only true Democratic Socialists and condemn others as given to greed and selfishness with no real public welfare in their hearts. In the Lok Sabha, the other day, I heard a lady member who had a fine record of service in the days of the freedom struggle saying that everyone claimed to be a socialist irrespective of his or her record. According to her, the Lok Sabha consists of socialists only, viz. the Congress socialists, the Communist socialists, the P. S. P. socialists, the Socialist-socialists and the Swatantra socialists.

In our land of the golden mean, which is as old as the Vedas, we have endeavoured to take the good wherever it may come from, all the time endeavouring to preserve human dignity and personality. In the early days of our history, action and behaviour in conformity to " dharma " was the core and a way of life. Dharma was above all, including Rulers. "Namo Dharmaya Mahathe" proclaimed our seers. The father of the Nation strove hard to restore the role of "Dharma" in India. He frequently quoted from the scriptures and proclaimed that the wealth in the hands of the rich was given in trust to them for the amelioration of their less fortunate brethren. Similarly, his desciple, the saintly Acharya Vinobhaji proclaimed in 1957 ( Kurukshetra–July 1957 ) as follows:

> "Many of those who worked prominently for the Indian Renaissance have derived their inspiration from "Shankar" (Sri Sankaracharya). Dyaneswar, Sri Ramakrishna Paramahamsa, Sri Ramana Maharishi and Narayana Guru have been influenced by the teachings of "Shankar".

The "Bhoodan" movement derives its inspiration from him. While quoting from the "Isopanishad" "Ma Grudhaha Kasyasvithdhanam" Shankar says "covet not wealth whether yours or others". All wealth belongs to God.

"Dhanam Samvibhagaha". 'Dhan' means not charity but just distribution......This definition outdoes even a Marx.

We have in India given to ourselves a written Constitution and my readers are familiar with Part III of our Constitution which deals with fundamental rights which are guaranteed to the citizens of India and in some cases also to persons who are not citizens. The clauses contained in this part cannot be amended or altered in the ordinary way by Parliament. What is equally important is Part IV of our Constitution containing about 15 clauses, which are referred to as Directive Principles. Though these are not enforcible by any Court, they are fundamental in the governance of the country and it is the duty of the State to take note of these principles while making the laws. These clauses are an epitome of socialistic and welfare ideals and contain also the substance of the "Panch Sheela" doctrine in the last clause. The courts of the land have frequently referred to these directive principles and in the days to come they are bound to play a very important part in the interpretation of our Constitution. We have great regard for our heritage as also the socio/economic pattern that we work for and in this process, we are striving to blend the best of our past tradition and old experience with new forces and ideas that envelop us.

Democracy, it is true, may not have the same emotional appeal to the masses in general and the people should be educated to appreciate its value. Henry L. Mencken bemoans the potency of a growing custom under which "there is a national philosophy which erects conformity into the noblest virtue, and free functioning of personality into a capital crime against the society". The question today is whether democracy or authoritarianism or something else is psychologically the most feasible way to run a scientific technological society as pointed out by Gardner Murphy in his book on "Human Potentialities". In the "Road to Serfdom" Frederik Hyek says that "there is no other possibility than either the order governed by the impersonal descipline of the market place or that directed by the will of a few individuals, and those who are out to destroy the first are wittingly or unwittingly helping to create the second". People who think like him are opposed to and condemn State Planning. They feel that technical experts are attracted to planning and yearn for a single all–embracing rule to apply to society. They are convinced that economic planning violates the rule of law and that as a result of which the freedom to occupational choice would disappear. According to them the laws made for the furtherence of a plan become the instrument in the hands of the planners to achieve their ends. At the opposite end we have thinkers like Herman Finer who believe that State Planning is in the best

democratic tradition and argue that competition is inefficient and wasteful and has led to one depression after another. In the London School of Economics in which I had the privilege to study, we were much influenced by Laski, Finer and the Webbs to mention a few outstanding thinkers. They proclaimed that it is possible successfully to plan in a fully democratic society enjoying the plenitude of civil rights, and still retain democracy and the rights. Finer states that "in a democracy, right is what the majority makes it to be" and adds that if the maximum of the freedom for all is to be available then the maximum of economic welfare must be sought for all."

It is, therefore, really vital for a democratic and a free society like ours to meet the challenge of the times. And in this task of establishing a socialist society, the foremost aim has to be the removal of poverty with all its attendant evils. This indeed calls for rapid economic development with continuously rising levels of production, agricultural as well as industrial. The slow growth of our economy has hitherto been due to our inability to make full use of our manpower and natural resources and this in turn is explained by our failure to take sufficient advantage of the advance in science and technology.

A reorientation in our industrial and development programmes has to be made urgently so that the economy of the country may be transformed into a modern and efficient one with a high level of production. The benefit of development of science and technology should be made available for agricultural production in an increasing measure. Because of the large and increasing labour force available in rural areas, employment opportunities have to be created and decentralisation of industry on a small and cottage scale will continue to occupy an important place in the economy of the country. In order that fuller use is made of, it is imperative that the level of techniques is improved rapidly and continually; and the availability of power is extended to rural areas as extensively as possible.

I wish to end by quoting from the resolution at the Bhubaneswar Congress 1964: "The descipline of planned economy necessarily involves a considerable amount of regulation at various levels of production as well as the social objectives of the Plan. It is necessary to ensure that economic development should not result in widening of disparities of income and concentrations of wealth and means of production to the common detriment. If that happens, social stability will be jeopardised. If, on the other hand, a regulated and planned economy is created, keeping in view of the needs of the time, the people's enthusiasm and co-operation in the tasks of development would itself become a very substantial factor in the augmentation of resources and accelerating the pace of progress."





# துஞ்சும் பொழுதினும்...

•

கங்கைவளவன், கல்கத்தா.

•

"செப்புமொழி பதினெட் டுடையாள், எனிற் சிந்தனை ஒன்றுடையாள்" என்று ஒளிபடைத்த பாரதத் தாயினைப் புகழ்ந்து பாடுகின்றார் பாரதியார். இந்திய மொழிகள் அனைத்திற்கும் பொதுவான சில சான்றாண்மைப் பண்புகள் உள்ளன. எனவேதான் கீழ்த்திசைக் கருத்துக்கள் என்பன காஷ்மீரம் முதல் குமரி வரையிலும் பாரம்பரியத் தொடர்பாகப் பரவி வந்துள்ளன. கொண்டு, கொடுத்து மொழி உறவு நலம் பேணுகின்ற சிறப்பு எல்லா மொழிகட்கும் இயல்பான தொன்றாயினும், வடக்கிலும், தெற்கிலும் சிறக்கின்ற ஆரிய — திராவிட மொழிக் குடும்பங்களிடையில் குறிப்பிடத்தக்கனவாக அமைந்துள்ளது. இவ்வுண்மையை மொழி வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடத் தவறவில்லை. திராவிட மொழிக் குடும்பத்துள்ளும் தமிழ் மொழிக்குத் தனிச் சிறப்பியல்புகள் உள்ளனவே போன்று, வடமொழிக்கும் ஆரிய மொழிக்கும் குடும்பத்திற்குள் சில சிறப்பியல்புகள் உள்ளன. வடமொழிக்கு உள்ளன போன்று **வங்க மொழிக்கும்** சில தனிச் சிறப்பியல்புகள் அமைந்துள்ளன என்பதை மறந்துவிட இயலா. வட மொழியின் கிளைகளாகப் பல வட இந்திய மொழிகளையும் குறிப்பிட்டுப் பேசுகின்றவர்கள், வங்க மொழியும் அவ்வாறுதான் உள்ளது என்று சொல்வர். இக்கூற்று முற்றிலும் சரியன்று.

புதிய பார்வை, சரித்திர நோக்கம், விருப்பு, வெறுப்பற்ற நடுநிலை உணர்வு, உண்மை காணவேண்டும் என்று அலையும் ஆர்வத்துடன் வங்காளி மக்கள் பேசுகின்ற வங்க மொழி பற்றிய சில செய்திகளைத் தெரிவிப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

மொழி நூல் உண்மையை ஆராய்ந்து பார்க்கின்றவர்கள் வங்க மொழி, வடமொழியின் கிளை என்று சொல்வது இல்லை; எழுதுவதுங் கிடையா. இவ்வுண்மை நீண்ட காலமாகவே வெளியுலகிற் பரவி வராதவாறு சில சூழ்நிலைகள் தடுத்தும், கலக்கியும் வந்துள்ளன. வடநாட்டிலே உள்ள இந்தி, உருது, குஜராத்தி, மராட்டி, மண்டா, பஞ்சாபி, அசாமி, ஒரியா முதலான மொழிகளுக்கு மாறாக இந்த வங்கமொழி தனித்தியங்கும் சிறப்பிலே தனக்கென ஓர் இடமும் பெற்று, மொழி இயல் வரலாற்றிலே

வடமொழிக்கு மாருகவும் அமைந்துள்ளது. இதனை அறியாதவர்கள் இன்றளவும் இம்மொழி பற்றிய கருத்திலே குழப்பம் விளைவிக்க முயன்றும் வெற்றி காண இயல வில்லை.

மலையாளம், தெலுங்கு முதலிய மொழிகளில் நிறைய வடமொழிச் சொற்கள் கலந்துவிட்டன. சிற்சில இடங்களில் முதன் மொழியின் சொற்களே சிதைந்து, அச் சிதைவினைப் புகுந்த மொழி ஏற்றுத் தன் மொழிச் சொற்களாக மாற்றிக்கொண்டு, மீண்டும் கலப்பிலே ஒன்ருகி விட்டால் எப்படி அமையுமோ, அவைபோன்றே இன்றைய வங்க மொழியிலும் நிறைய வடமொழிச் சொற்கள் கலந்துள்ளன. ஆனுல் வடமொழி கலவாத வங்க மொழியின் இயக்கத்தையும் நன்கு காணலாம்.

பேச்சு வழக்கிலே நிறைந்த "**பிராகிருதமே**" வங்க மொழிக்கு முதலாகும். எனவே நேராக வடமொழியிலிருந்து தோன்றவில்லை என்பதை அறிய முடியும். இன்றைய வங்க மொழியில் பாலி, பாரசிகம், அராபியம், மற்றும் ஆங்கில, போர்த்துக் கீசியச் சொற்களும் நிறைந்து காணப்படுகின்றன. சிந்தி, உருது மொழிகளில் காணப்படும் ஒற்றுமையை இங்கு, சற்றுச் சிந்தித்துப் பார்த்தல் நலம். வங்க மொழிக்கு முக்கியமான அடிப்படை "**பிரம்மி**" எழுத்துக்கள்தாம். திராவிடமொழிக் குடும்பங்களில் உள்ள எழுத்துக்களின் ஒற்றுமையும் காணப்படுவதாக ஆராய்ச்சி யாளர் முடிவிட்டுள்ளனர். தமிழில் உள்ள "**ல**" என்ற மெய் எழுத்து வங்க மொழியில் குறில், நெடில் இரண்டிற்குமாகப் பயன்படுகின்றது. அதாவது கீழ்ச் சுழியிலிருந்து துவங்கி மேலே கொம்பு முனைவரை எழுதுவது குறிலையும், முழுவதையும் சற்றுச் சாய்த்து எழுதுவது நெடிலையும் குறிப்பனவாகும். இது போன்றே சொற்களுக்கும் அடித்துணை பயன்படுத்தப்பட்டுள்ளது.

வடநாட்டின் நாகரிக வளர்ச்சியில் மத்திய கங்கைச் சமவெளியின் காலம் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். ஆராய்ச்சியாளர்களால் இன்னமும் சரியானபடி முடிவுகட்ட முடியாதவாறு சில உண்மைகள் இலைமறை காய்போல் உள்ளன. வட நாட்டின் மொழித்துவக்கம், ஆராய்ச்சி, மக்கள் வளர்ச்சி முதலியனவற்றில் பற்பல உண்மைகள் இன்னமும் வெளியாகிக் கொண்டுள்ளன. ஆரியர்கள் பர்மா வரை யிலும், திராவிடர்கள் வங்காளத்திலும், ஆந்திரர்கள் அரக்கான், சிட்டகாங் வரை யிலும் கி. மு. 850-ல் பரவியிருந்த குறிப்புக்களால் வங்க மொழியின் மாறுதலில் வட மொழி மட்டுமன்றித் தென்மொழிகளும் பங்கு கொண்டுள்ளன என்று கருத இடமேற் படுகின்றது. பேராசிரியர் திரு. **ஜே. பி. மஜும்தார்** குறிப்பிடுவதுபோல, வட மொழிதான் வங்க மொழியின் கலப்பில் உள்ளது என்ற தவருன கருத்து எங்கும் வலுவாகப் பரவி விட்டதால், திராவிட மொழிகளின் மொழி ஆதிக்கம் இம்மியளவும் இல்லையென்று எண்ண இடம் தந்துவிட்டது. திராவிட மொழிகளின் செல்வாக்கு வங்க மொழியில் நிறைய இருப்பதை அவரே பல இடங்களில் சுட்டிக்காட்டியுள்ளார். கீழ்த்திசை மொழிகளில் வல்லுனரான டாக்டர் **எஸ். டி. பார்னட்** இவ்வுண்மையை ஆணித்தரமாக ஒப்புக்கொள்கிருர். வங்க, ஒரிய, அசாமிய மொழிகள் "**கிழக்கு மகதி பிராகிருதத்தின் பிறப்பு**" என்றும், "**பங்களா — காந்தா — ராதா — வங்க**" என்ற முறையில் **வங்க மூலம்** காணப்படுகின்றது என்றும் குறிப்பிடுகின்ருர்.

வேதகாலத்து வடமொழியில் அல்லது வேதகால இலக்கியங்களில் 'வங்க' என்ற சொல் இல்லை என்றும், அதர்வண வேதத்தில் 'அங்க' என்றும், பின்னர் மகத- ஆயித் ரேக- பிராம்மண வழக்கில் 'வங்க' என்ற சொல் காணப்படுகின்றது

என்றும், மற்றும் அந்தக்கால வழக்கில் காட்டுமிராண்டிகள் வசிக்கும் நாட்டிற்கு 'வங்க' என்ற பெயர் வழங்கப்பட்டது என்று திரு. மஜும்தார் குறிப்பிடுவதையும் கணக்கில் எடுத்துக் கொள்ளவேண்டும். திராவிட மொழிகள் வடகிழக்கில் செல் வாக்குப் பெற்றதுடன், வங்க மொழிச் சொற்கள் இலங்கைப் பகுதியில் வழங்கப் பெற்ற குறிப்பையும் அவர் சுட்டிக்காட்டியுள்ளார். எனவே வங்க மொழியின் பிறப் பிலும், வளர்ச்சியிலும் வடமொழி தவிரப் பிற மொழிகள் இடம் பெறவில்லை என்ற தவருன கருத்து விலகுவதற்கு இடமேற்படுகின்றது. அந்தக்கால ஆரியர்கள் அங்க, வங்க, கலிங்க மக்களை 'ஆரியரல்லாதார்' பட்டியலில்தான் குறிப்பிட்டுள்ளனர் என்பதையும் அவர் வற்புறுத்துகின்ருர்.

வங்க மொழி பேசுவோரின் நிலப்பரப்பும், பிரவும் அவர்களது இலக்கியத் தோற்றங்களுக்கு வழியமைத்த முறைகளும் கருத்தைக் கவர்வனவாகும். தற்போதைய கிழக்குப் பாகிஸ்தானம் முழுவதுமே ஆட்சி மொழி, தாய் மொழி என இரண்டும் வங்க மொழிதான் என்பதும், முகம்மதியர்கள் (கிழக்கு வங்காளத்தில்) பேரிலக்கியங்களை வங்க மொழியில் படைத்துள்ளமையும் வங்க மாநிலம் என்பதில் தற்பொழுதுள்ள மேற்கு வங்கத்தைவிடக் கிழக்கு வங்கமே இலக்கியத் திறனுய் வாளர்களால் குறிப்பிடப்பட்டு வருகின்றது என்பதும் உண்மைகளாம். இன்றும் கிழக்கு வங்கப் பகுதியினரே இலக்கியத் தராசில் சிறப்பிடம் பெற்றுள்ளனர். எனவே, கிழக்கின் இலக்கிய ஆதிக்கமே வங்க இலக்கியத்தின் வளர்ச்சிப்படிகளில் மேலோங்கி முன் நிற்கின்றது. தமிழ் நாட்டில் **உமறுப் புலவரின்** 'சிராப்புராணம்', **குணங்குடி மஸ்தானின்** 'அகத்தீசர் சதகம்', 'அகத்தீசர் வரலாறு', **வீரமாமுனிவரின்** 'திருக் காவலூர்க் கலம்பகம்', **கிருஷ்ணப்பிள்ளையின்** 'இரட்சணிய யாத்திரிகம்' முதலியனவும், மாவட்டத்திற்கு மாவட்டம் மாறுபட்ட 'பேச்சுவழக்குகள்' உள்ளனவும் எவ்வாறு காணப்படுகின்றனவோ அவை போன்றே இங்கும் சமயத்தால் மாறுபட்ட மக்கள் நிறைந்து இருப்பினும் இலக்கியப் படைப்புக்களில் மாறுபட் டிருக்கவில்லை என்பதையும், மாநிலத்திற்கு மாநிலம் மேற்கு, கிழக்கு வங்க மாநிலங் களிலும், அசாம், ஒரியா மாநிலங்களிலும் உள்ள வங்க மக்கள் வேறுபாடுற்றுள்ளனர் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும்.

வங்க மாநிலத்தில் "சில்ஹெட்" மாவட்டம், சிட்டகாங்கின் வடபகுதி, மான்பூம் மாவட்டம், மேற்கே பர்த்வர்னின் வெளிப்பகுதிகள், புருலியாவின் வட மேற்குப் பகுதிகள் என இவையாவும் தனித்தனியே வேறு வேறு மாநிலங்களுடன் இணைந்து விட்டாலும் ஏறத்தாழ ஐந்தரைக் கோடி மக்கள் — இதில் மலைவாசிகள், பிற இனத்தவர் உட்பட — இம்மொழியால் ஓர் குடும்பத்தவராகின்றனர் என்பதை அறிந்தால் இவ்வங்க மொழியின் இலக்கிய வளர்ச்சிக்கு எத்தகைய வலுவான அடி நிலமும், வித்தும் அமைந்து துணை செய்கின்றன என்பது விளங்கும்.

வட மொழியில் பல சொற்கள் இல்லாதிருக்க அவற்றை அராபிய, பாரசீக மொழிகளினின்றும் எடுத்துத் தன்னுருவாக்கி, வேர்ச் சொற்களும் அமைத்து அவ்வழி பிராகிருதத்திற்கும் அவற்றைப் பயனுக்கினர் என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. எனவே பிராகிருதத்தில் தோன்றிய வங்க மொழிக்கும் பல வேர்ச் சொற்கள் அந்நிய நாட்டு மொழிகளிலிருந்து எழுந்தவையாகும்.

நாக வம்சத்தாரது "பாங்" என்ற மூலத்திலிருந்து "பங்களா" தோன்றிய தாகவும், அங்க, வங்க, கலிங்க என்பன ஆரியரால் ஆரியரல்லாத மக்கள், நாடுகள்



பட்டமளிப்பு விழா: (1—11—63) "சிந்தாமணிச் செம்மல்"
பட்டம் பெற்ற இராசிபுரம் வித்துவான் திரு. மு. இராமசாமி அவர்கள்



தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கம் அவர்கள்
பரிசு வழங்குகிறார்.



இளங்கோ விழா: (2—11—63) தொடக்கவுரை
திரு. ஈ. வெ. கி. சம்பத் அவர்கள்



இளங்கோ விழா: (2—11—63) தலைமையுரை
சிலம்புச் செல்வர் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள்

என்ற குறிப்பில் வழங்கப்பட்டது என்பதையும் உணர்ந்தால், வங்க மொழி இனத்தார் தனிப்பிரிவினர் என்பதை உணர இயலும். துவக்க காலத்தில் பௌத்த சமயக் கருத்துக்கள் மிகுந்த நூல்களே எழுந்தன. இவ்வாறு எழுந்த நூல்களும் இந்து சமய நூல்கட்கு மாறுபட்டதில்லை என்பதுடன், அவை சீர்திருத்த இந்து சமய நூல்களாகவே கொள்ளப்பட்டன. எழுதியவர்களும் அந்தக் காலச் சூழ்நிலைக்கு ஏற்ப வாழ்ந்து வந்தவர்களாதலின் இக்கருத்து ஓர் பெரிய வேற்றுமையை உருவாக்கவில்லை. எனவே இலக்கிய வளர்ச்சியும் தடைப்பட்டதில்லை.

நீரின் பெருக்கமும், கடல்வழியும் சேர்ந்து பல்வேறு பிரிவினரிடையிலும் வெளிநாட்டுத் தொடர்புகளில் ஆர்வத்தை வளர்த்தன. இந்திய நதிகள் வடக்கின் நாகரிகத்தையும், இந்தியக் கடல்கள் கிழக்கிந்தியத் தீவுகளின் நாகரிகத்தையும் வங்க நாட்டிற்சேர்த்தன. வங்கத்தை ஆண்ட **'விஜயசின்ஹா'** வின் பெயர்த் தொடர்புடன் சிலோன் (சின்ஹலா) வழங்கப்படுவதாகவும் சொல்லப்படுகின்றது. வேத காலத்தோடும், மஹாபாரதத்தோடும் எத்தகைய குறிப்பிடத்தக்க முறையிலும் இப்பகுதி சிறந்து நிற்கவில்லையாயினும், பௌத்த வரலாறுகளில் தொடர்பு கொண்டுள்ளதை மறுக்க இயலா. ஐந்தாம் நூற்றுண்டில் இந்நாட்டிற்கு வருகை தந்த **'பாஹியான்'** இந்நாட்டைப் **'பௌத்த நாடு'** என்பதாகக் குறிப்பிட்டுள்ளார். கடல் வழியாக நாட்டிற்குத் திரும்பிய அவர், மரக்கலம் ஏறிய துறை **'தாமரலிப்தா'** வாகும். இத்துறைமுகப் பட்டினமானது தென்மேற்கு வங்கத்தில் உள்ளதாகும். தற்பொழுது இதன் பெயர் **'தாம்லுக்'** என மருவியுள்ளது.

வங்காள நாடு நீண்ட கடற்கரையைக் கொண்ட நாடாக இருந்தும், நதிகளின் மாறுபாடுகள், வெள்ளப் போக்குகள், வண்டல் இவற்றுல் பல துறைகள் தூர்ந்தும், கடலை விட்டே நீண்ட தொலைவிற்கு உள் நாட்டிற்குள் ஏகியும், கடலிலிருந்து நதிகளால் நில மீட்சி பெற்றும் பல மாறுபாடுகளை அடைந்துள்ளதையும் இங்கு நினைவு கொள்ள வேண்டும். எனவேதான் இன்று 'தாம்லுக்' கடற்கரையை விட்டுத் தொலைவு தூரம் உள்நாட்டிற்குள் காணப்படுகின்றது. இன்றைய **'கல்கத்தா'** நகரமானது **'ஹூக்ளி'** நதியின் கரையில், கடலிலிருந்து ஏறத்தாழ அறுபது மைல்கள் தள்ளி உள்நாட்டில் அமைந்து கப்பல் போக்குவரத்துகளிலும் தொடர்பாக உள்ளதும் குறிப்பிடத்தக்கதாகும். இன்றளவும் இங்குள்ள ஆறுகள் ஆண்டுதோறும் மாறுதல்களைத் தோற்றுவித்துக் கொண்டேயுள்ளன. எனவே இச்சூழ்நிலைகள் காரணமாகத்தான் போலும் கடல்வழி வங்கம் மாறுதல் பெருமலும் அதிகமான வடக்குக் கலப்பிற்கு உட்பட்டுத் தன்னளவில் வளர வேண்டியதாயிற்று. எட்டாம் நூற்றுண்டில் **"தர்மபாலர்"** என்ற அரசர் வடக்கு நோக்கிச் சென்று வெற்றி கண்ட பின்னரே வங்கத்தைப் பற்றிய உணர்ச்சி பரவலாயிற்று எனலாம். அவர் ஒரு பௌத்தர். ஆனுல் அவர் காலத்தில் விளங்கிய பௌத்த சமயமானது கௌதம புத்தருடன் எந்த அளவிலும் தொடர்புடையதன்று. இருபால்களையும் சார்ந்த ஏராளமான திபேத்தியக் கடவுள்கள் இவர்கள் வழிபாட்டில் நிலவி வந்தனர். அத்துடனன்றி இந்து அரசர்கள் பட்டத்திற்கு வந்தால் இத்தகைய பௌத்தக் கடவுள்களை இடம் மாற்றிப் பெயர் மாற்றி இந்துக் கடவுள்களாகச் செய்து வழிபடுவதுண்டு. இவ்வாறு பத்தாவது நூற்றுண்டில் நிகழ்ச்சிகள் நடைபெற்றன. **'வஜ்ரேஸ்வரி'** என்ற பெண்கடவுளைப் பௌத்தர்களாகிய முன் சொல்லப்பட்டவர்கள் வணங்கி வந்தனர். பாமர மக்கள் **'வாசாலி'** என்று அழைத்தனர். இவை பற்றிய அடிப்படையே சிறிதும் அறியாத இந்துக்கள் இந்த 'வாசாலியை' இங்கு குறிப்பிட்டதற்கு முற்றிலும் மாறுபட்டதும், வேறு கருத்துடையதுமான

'விசாலாட்சி' என்ற இந்துப் பெண்கடவுளுக்குக் கொடுத்து வழிபாடு தொடங்கினர். இவை போன்ற முரண்பாடுகளைப் பௌத்தத் துறவிகள் எதிர்த்தனர். எனினும் அவர்களால் வலுவானதொரு எதிர்ப்பைத்தர இயலாதவாறு கி. பி. 1999-ல் முகம்மதியர் படையெடுப்புத் தடை செய்து விட்டது.

வங்க இலக்கிய வரலாற்றிற்கு மேற்கண்ட படையெடுப்பு மிக மிக இன்றியமையாத துணை செய்தது என்னலாம். முகம்மதியர்களிடையில் அந்தக் காலச் சூழ்நிலையில் எத்தனையோ இன்னல்களை அனுபவித்தாலும், பார்ப்பனர்கள் தங்கள் மக்களிடையே வழங்கும் பொது மொழியான "மகதி – பிராகிருதத்தை" வடமொழி மயமாக்கும் திருப்பணியில் விடுதலையே பெற்றிருந்தனர். பெயர்களை ஆரிய மயமாக்குவதும் குறியாகக் கொண்டிருந்தனர். அம்முறைகள் இன்றும் இருந்து வருகின்றதொரு உண்மையாகும். ஏற்கெனவே பௌத்தம் நிலைகுலைந்துவர, இவ்வந்தணர்கள் வேறு தங்கள் செல்வாக்கிற்கு அப்பாற்பட்ட பகுதிகளில் மதமாற்றத்திற்கு முகம்மதியர்கள் கையில் பௌத்தர்களை ஒப்படைத்துவிட்டுத் தலையிடாமலும் இருந்தனர். இதனால் மறைமுகமான ஒரு நற்பலனும் கிடைத்தது. புதிய சமயத்தினரான முகம்மதியர்கள் பௌத்தர்களுடன் பலவற்றில் ஒத்திருந்தனர். ஜனநாயக சமுதாய அமைப்பிற்கு அதிக இடம் கொடுக்கப்பட்டதுடன், ஜாதி பற்றிய உணர்ச்சி அழுத்தமாக இவர்களிடையில் வேரூன்றாமல் இருக்க இடமிருந்தது. எனவே அந்தணர்களின் வழிமுறைக்கு மாறான சில நடைமுறைகள் இவர்களிடையில் பெருகின. கடல் கடந்து செல்வதையும், விவாகரத்து, மாட்டின் புலால் உண்ணல் (இதில் எப்படி பௌத்தர்கள் இசைவு காட்டினர் என்பதை ஆராய்ச்சியாளர்கள் துணிவிடமுடியவில்லை) முதலியனவற்றிலும் பௌத்தர்கள், முகம்மதியர்களுடன் ஒன்றுபட்டதால் இவற்றிற்கு மாறான 'பிராம்மண மதம்' தனித்தியங்க வேண்டியதாயிற்று.

எனவே வங்க முகம்மதியரில் பெரும்பான்மையோர் விவசாயம், கைத்தறி, நாவாய் ஓட்டுதல் முதலான தொழில்களில் ஈடுபட்டவராவர். "பிராகிருதத்தை" வளர்த்ததுடன், அதனுள் சிறிதளவு மட்டுமே அராபிய, வடமொழிச் சொற்களைக் கலப்பதுடன் நிறுத்திக்கொண்டு தங்கள் பௌத்த முதாதையர்களைப் போன்று பேசியும் வந்தனர். வங்க மொழித் தொடர்பு இவர்களிடையில் மிகுதியாக உண்டு. தனித்தியங்கும் தன்மையுடைய தூய்மையான வங்க மொழிச் சொற்களுடன் கூடிய நாட்டுக் கதைகளில் கூட இவர்களின் படைப்பே மிகுதியாகும். ஆனால் இந்துக்கள் இவற்றை மறந்து விடுவதுடன், இவற்றில் தங்கள் கலப்பு மொழிப் பாணியைத் தொடர்ந்து செய்து இன்று, "இவை என்ன?" என்று கேட்குமாறு உருத்தெரியாதவாறு செய்துவிட்டனர் என்பதாக ஆராய்ச்சியாளர் முடிவிடுகின்றனர். இப்படிப் பார்த்தால் இன்று முகம்மதியர்கள் மிகச் சிறந்த வங்காளிகள் என்று துணிந்து கூறலாம். வகுப்புக் கலவரங்கட்கு வங்காளத்தில் மொழி இடம் தரவில்லை என்பதையும் இங்கு நன்கு நோக்க வேண்டும். பாட்டாளி மக்களிடையில் கைத்தொழிலில் பெரும்பான்மையையும் மேற்கொண்டவர்கள் இந்துக்கள். இரு தரப்பிலும் நெசவாளிகள் உண்டு. எனினும் விவசாயிகளே அதிகமாக இஸ்லாத்தின் கவர்ச்சியில் இழுக்கப்பட்டவர்கள் ஆவர். கடல்மீது சென்று வாணிகத்தை மேற்கொண்டவர்கள் அனைவரும் முகம்மதியராவர். ஆனால் மீன் பிடிப்பவர்கள் அனைவருமே இந்துக்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. எனவே இத்தகைய பிரிவுகளிடையில் சாதி, சமய வேறுபாட்டு உணர்ச்சி என்பதே இல்லாதவாறு அனைவராலும் வங்க மொழி இலக்கியம் வளர்க்கப்படத் தொடங்கியதால்தான் இம்மொழி

பற்றிய திறனுய்வாளர்கள், "வங்க மொழி வளர்ச்சிக் குழுவினர்" என்ருல் "எல்லாச் சாதியார்" அல்லது "சாதிப் பிரிவு உணர்ச்சி அற்றவர்" என்ற சிறப்புடன் அழைக்கின்றனர்.

நாளடைவில் இந்துக்கள் முகம்மதியர் ஆட்சியில் பாரசிக மொழியும் கற்று இலக்கியத் துறையுடன் அரசியல் முதலானவற்றுள்ளும் பங்கு கொள்ளத் தலைப் பட்டதும் இலக்கிய வளர்ச்சி முளைவிட்டு எழத் தொடங்கியது. பல்வேறு அரசியல் பதவிகளும் பிறவும் சமூகத்தாரிடையே ஒற்றுமையை வளர்த்தன. பின்னர் பதினெரும் நூற்ருண்டிற்குப் பிறகு கடற்கரைப் பகுதிகளில் ஆங்கிலேய, டச்சு, பிரான்சு, டென் மார்க் நாட்டினர் வருகை தந்தனர். இவர்கள் பண்டக சாலைகளை ஏற்படுத்தி வாணி பத்தில் ஈடுபடலாயினர். இதனுல் வங்கத்தில் இந்து, முகம்மதியர், பௌத்தர் என்ற பிரிவுணர்ச்சிகள் மறைந்து வங்கப் பெருங்குடி மக்கள் என்ற நிலையில் அனைவரும் வங்காளியர் என்று மொழியால் ஒன்றுபடலாயினர். இத்தகைய திருப்பு முனைதான் தொடர்ந்து வளர்ந்த வைணவ—பக்தி இலக்கிய காலங்களை உருவாக்கிட அடிகோலிற்று எனலாம். வங்க இலக்கியங்களில் துவக்க காலத்திலும் சரி, இன்றைய காலகட்டத்திலும் சரி பற்பல இந்து சமய புராண இலக்கியங்களைப் படைத்தவர்களும் முகம்மதியர்கள் என்பதை உணரப் பலரும் வியப்படைவர். ஆனுல் உண்மை இது தான். இன்றைய வங்கத்தின் பெரும் புரட்சிக்கவி **'நஸ்ருல் இஸ்லாமின்'** படைப்புக் களில் சைவ, வைணவக் கருத்துக்கள் இழையோடி இருப்பதையும் காணலாம். எடுத்துக்காட்டாக அவரது **"அக்கினி வீணை"** முதலான கவிதைகள் அடங்கிய தொகுப்பில், **'இரத்தம் தோய்ந்த ஆடையுடுத்த அன்னை'** என்ற கவிதையில் ஊழிக்கூத்தும், நஞ்சை உண்ட நீலகண்டனின் வரலாறும் பின்னிப் பிணைந்து இருக்கக் காணலாம். இராமாயண, மகாபாரதங்களை முகம்மதியப் புலவர்களே வங்க மொழியில் எழுதியுள்ளனர்.

மேற்கண்ட அடிப்படை வரலாற்றினை நன்கு உணர்ந்துகொண்டோமே யானுல், வங்க இலக்கியச் சோலை இன்று நன்கு மலர்ந்து சிறப்பதையும் அறிய முடியும். மடித்தலத்து மதலைப் பருவம் முதல் அனுபவத்தின் முதிர்ச்சிக் கனியாகத் தோன்றும் மூப்பு ஈருக எங்கு பார்க்கினும் கவியரசர் இரவீந்திரரின் நினைவு அலைகள் தான் வீசிக்கொண்டிருக்கும். இந்நிலைமை ஓர் நாளில் ஏற்பட்டதன்று. இருப்பினும் **"முயற்சிதன் மெய்வருந்தக் கூலி தரும்"** என்றவாறு செயற்பட்டதால் அன்றோ இவ்வளவு சிறப்பும் ஏற்பட்டன.

கவிதையுலகில், தாகூர், திரேந்திரலால்ராய். நஸ்ருல் இஸ்லாம், பாணபூல், பிரேமன்தாஸ் போன்றவர்களும் நாடக உலகில் கிரீஷ்சந்திரர், சிசிர் குமார் பதூரி முதலானவர்களும், இயல் நவீனத் துறைகளில் பங்கிம் சந்திரர், சரத் சந்திரர், மைக்கேல் மதுசூதன் தத் மற்றும் ஆயிரக்கணக்கானவர்களும் காலமெல்லாம் வங்க இலக்கியத்தை அழகுபடுத்தும் பணியில் ஈடுபட்டு இன்று உலகின் பல மொழியின ரிடையிலும் தங்கள் பேரிலக்கியங்களை வழங்கி வெற்றி கண்டுள்ளனர் என்பதை நாம் உணர்தல் வேண்டும். வங்க மொழி பேசுவோரிடையே குறுகிய தேசிய உணர்ச்சியைக் காண இயலா. அது போன்றே சாதி, சமய வேறுபாட்டுணர்ச்சியால் பிரிவுற்றும். பிளவுற்றும் நில்லாது மொழியால் ஒன்றுபட்ட நிலைமை உருவாகி உள்ளதையும் காணலாம். இத்தன்மையைக் கொண்ட வங்க மக்களை எண்ணிப் பார்த்த பாரதி,

" துஞ்சும் பொழுதினும் தாயின்பதத் தொண்டு
நினைந்திடும் வங்கத்தினோர் "

என்றே பாடுகின்ருர். இத்தகைய உணர்ச்சி இன்றைய தமிழ்நாட்டிலும் பல்கிப் பரவி நாட்டின் முன்னேற்ற நலனுய் வளர்வது கண்கூடு.

• இக்கட்டுரைக்கு அடிப்படை :

(1) Dr. L. D. Barnett - Journal of the Royal Asiatic Society (London) for 1923.

(2) Sir George Grierson's views in " The Imperial Gazetteer, Vol. 1."

(3) Criticisms by J. B. Mazumdar in " Modern Review ", August, 1908.

# பொங்குக, புதிய கீற்று !



○ சாலை இளந்திரையன், எம். ஏ.

நள்ளிரவுப் பூந்தோட்டத் துள்ளே மெல்ல
நடந்துவரும் மதியணங்கே, உன்னைத் தேய்க்கும்
உள்ளநிறை கவலைதான் எதுவோ? மாதத்து
ஒருநாளில் நீஇறந்தே போவ தேனோ?
கள்ளமிலாது உலகுக்கே உழைத்து ழைத்துக்
கரைகின்ற தொழிலாளி வடிக்கும் கண்ணீர்
வெள்ளமலை வீசியுனைக் கரைத்த தோ? அவ்
வேதனையாம் தீநாக்கில் கரிந்தா யோநீ?

மேலிருந்தும், மேலுக்கும் மேலி ருந்தும்,—
மெல்லியலே! — இவ்வுலக மேட்டு மக்கள்
போலிருந்தும், புவிமீதே உலவி வந்தும்,—
புவியிவர்கள் காணாத புவியைக் கண்டு,
'காலிருந்தால் சேரிதொறும் நடப்பே னோநான்! —
கையிருந்தால் அவர்க்குக்கை கொடுப்பே னோநான்!—
மேலிருந்தும் என்னபயன்?' என்றே சாம்பி
மேனிநலம் தேய்ந்தனையோ, மதிநீ அம்மா?

மதியிலொரு கறையிருந்தால் காணும் மக்கள்
மதியிலுள்ள மதியிதனைக் காணார் ஏனோ?
புதியமதி காணஒரு மதிவ ரட்டும், —
பூலோகம் புத்துலக மாயெ ழட்டும்!
விதிஎழுதும் கைகளுக்கு விலங்கு மாட்டி
விசாரணைக்குக் கொண்டுவந்து நிறுத்தட் டும்!வீண்
பொதிசுமக்கும் தலைகளிலே புதிய கீற்றுப்
பொங்கட்டும்; பொசுங்கட்டும், ஏய்க்கும் வாழ்வே!...

# மன மாயை

— பெ. தூரன் —

மனம் மிகப் பொல்லாதது; ஆனால் அதே சமயத்தில் அற்புதமானது. அதனுடைய தன்மையை அறிந்து அதை வசப்படுத்தி நடக்கத் தெரிந்துகொண்டால் வாழ்க்கையில் மிகப் பெரிய வெற்றியடையலாம். இவ்வாறு சொல்லுவது எளிது; ஆனால் அவ்வளவு எளிதிலே மனத்தை அறிந்து கொள்ள முடியாது; வசப்படுத்தவும் முடியாது.

மனம் சூக்குமமானது. இருப்பினும் அதற்கும் உடலுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. மனத்தில் ஏற்படும் கோளாறுகள் உடலிலே பல வேறு வகைகளில் வெளியாகின்றன. சற்று சிந்தித்துப் பார்த்தால் இந்த உண்மை புலனாகிவிடும்.

ஒருவன் பாம்பைப் பார்க்கிறான். அவனுக்கு அச்சம் உண்டாகிறது. அச்சம் என்னும் உணர்ச்சி உள்ளத்திலேதான் தோன்றுகிறது. இருந்தாலும் அதன் காரணமாக அவன் உடம்பு நடுங்குகிறது. சில சமயங்களில் அச்சத்தால் பேச முடியாமல் நாக்குக் குழறுகிறது; உடம்பு குப்பென்று வேர்க்கிறது.

ஒரு நாள் நானிருந்த வீட்டில் ஒரு பாம்பு புகுந்து விட்டது. அந்த வேளையில் ஒரு கிழவி பாயை விரித்துப் படுத்துக்கொண்டிருந்தாள். அந்தப் பாம்பு பாய்க்கடியிலே ஊறிக்கொண்டு வந்ததை அவள் பார்த்து அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்தாள். பாம்பு தன்னைக் கடித்துவிட்டதாக அவளுக்குப் பேரச்சம். பாயின் விளிம்பு காலில் பட்டதால் ஏதோ சுருக்கென்று கடித்ததுபோல் அவளுக்குத் தோன்றியிருக்கிறது. அதனால் அவள் மேலும் அஞ்சி நடுங்கினாள். பாம்பு கடித்து நஞ்சு உடலிலே பாய்ந்திருந்தால் மிளகாயைக் கடித்தால் காரம் தெரியாது என்று சொல்லுவார்கள். உண்மையில் பாம்பு கடித்திருக்கிறதா என்று அறிந்து கொள்வதற்குக் கிராமத்தில் மிளகாயைக் கொடுத்துப் பார்ப்பார்கள்; காலில் கிள்ளிப் பார்ப்பார்கள். கிள்ளும் போது வலிக்காவிடில் பாம்பு கடித்து விஷ மேறியிருப்பதாகக் கொள்ளவேண்டும்.

அந்தக் கிழவிக்கு இந்த இரண்டு சோதனைகளையும் செய்தோம். மிளகாய்க் காரம் அவள் நாக்கில் உறைக்கவே இல்லை. கிள்ளும்போது அவளுக்கு வலியும் ஏற்படவில்லை. ஆனால் உண்மையில் அவளைப் பாம்பு கடிக்கவே இல்லை. மனத்தில் ஏற்பட்ட பயத்தால் இப்படி விபரீதம் நடந்தது.

மேலே எடுத்துக் காட்டியுள்ள நிகழ்ச்சியிலிருந்து மனத்தில் ஏற்படும் கோளாறு உடம்பை பாதிக்கும் என்பதைத் தெளிவாக உணரலாம்.

மிக நெருங்கிய நண்பர் ஒருவர் எனக்கு உண்டு. அவர் மருத்துவர்; மேல் நாட்டு மருத்துவ முறையில் மிகத் தேர்ந்தவர். அவர் அண்மையில் தாம் சிகிச்சை செய்த இரண்டு நோயாளிகளைப்பற்றி என்னிடம் கூறிக் கொண்டிருந்தார். மனத்தின் தன்மைகளை அறிந்து கொள்வதற்கு அவர் கூறிய விஷயம் மிக நல்ல எடுத்துக் காட்டாகும். ஆதலால் அதை இங்கே தருகிறேன்.

சிறு பையன் ஒருவன் ஒரு குருகுலப் பள்ளியிலே படித்துக் கொண்டிருக கிறுன். ஆண்டிலே ஒரு குறிப்பிட்ட விடுமுறைக்கு மட்டும் அவன் தன் சொந்த ஊருக்குச் சென்று பெற்ருேர்களோடு தங்கியிருக்கலாம்; மற்ற நாட்களில் குருகுலத் திலேயே இருந்து படிக்க வேண்டும். அவன் ஒரு தடவை விடுமுறைக்கு ஊர் சென்று குருகுலம் திரும்புகிறுன். ரயிலே விட்டு இறங்கிக் குருகுலம் செல்லும் வரையில் அவனுக்கு எவ்விதமான தொந்தரவும் இல்லே. குருகுலத்திற்குள்ளே நுழைகிறுன். நுழைந்ததும் பேசும் சக்தி போய் விடுகிறது. தொண்டையிலே ஏதோ வலிக்கிறது போலவும் தோன்றுகிறது. அந்தப் பையனே என் மருத்துவ நண்பரிடம் காட்டு கிறுர்கள். அவர் பரிசோதனே செய்து பார்த்ததில் உடம்பில் எவ்விதமான கோளா றும் தென்படவில்லே. தொண்டையில் வலி ஏற்படுவதற்கும் காரணமிருக்கவில்லே. அவருக்குப் பையனுடைய மனநிலே நன்கு புலனுகிறது. வாய் பேச வராததின் காரணமும் தெரிகிறது.

விடுமுறைக்குப் பின் பெற்ருேரைப் பிரிந்து குருகுலத்திற்கு வருவதை அப்பையன் உள்ளூற விரும்பவில்லே. ஆனுல் குருகுலத்திற்குப் போய்த் தீரவேண்டு மென்ற கடமை எண்ணமும் அவனுக்குண்டாகிறது. படிக்கப் போகாமல் வீட்டில் தங்குவதைப் பெற்ருேர்கள் விரும்பமாட்டார்கள் என்பதை அவன் அறிவான். அதே சமயத்தில் குருகுலக் கட்டுப்பாடுகளேயும் வாழ்க்கை முறையையும் ஏற்றுக் கொள்ள அவன் மனம் அவனேயும் அறியாமல் மறுக்கிறது. இந்த இரண்டு உணர்ச்சிகளுக்கும் ஒரு போராட்டம். அந்தப் போராட்டத்தின் விளேவாக மனத் தின் மாயசக்தியால் அவனுக்குப் பேசும் சக்தி திடீரென்று போய் விடுகிறது.

டாக்டர் இதை அறிந்து கொள்கிருர். பையனே வீட்டுக்குத் திருப்பி அனுப்புகிருர். பெற்ருேர்களுக்கு உண்மையை விளக்கி எழுதுகிருர். அவர்கள் இந்த சமயத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதையும் தெளிவுபடுத்துகிருர். மருந்து என்ற பெயருக்கு ஏதோ கொடுத்தனுப்புகிருர். ஊர் சென்றதும் பையன் பேசத் தொடங்கிவிடுகிறுன்

ஓர் இளம்பெண் திடீரென்று பிரமை பிடித்தவள் போல் காணப்படுகிருள். அவளுடைய இடது கை வலிப்பு வந்தது போல மேலும் கீழுமாக ஆடிக்கொண்டி ருக்கிறது. அதை நிறுத்தவே முடிவதில்லே. பெற்ருேரும் மற்ருேரும் அஞ்சி வாடு கிருர்கள். மருத்துவரின் உதவியை நாடுகிருர்கள். பரிசோதனேயிலே உடம்பில் எவ்விதக் கோளாறும் இல்லே என்பது தெரிகிறது. மனக்கோளாறில் இந்த விப ரீதம் நேரிட்டிருக்கிறதை அவர் தெரிந்து கொள்கிருர்.

முகர்ந்து பார்க்கப் பயன்படுத்தும் உப்பை மூக்குக்கு நேராக அவர் பிடிக் கிருர். சுறுசுறுவென்று அந்த உப்பின் காரம் மூக்கில் ஏறுகிறது. ஏதோ ஒரு மருந்தை (அதை மருந்தென்றே கொள்ளக் கூடாது) எடுத்துக் கையிலே ஊசி போடு கிருர். "இப்பொழுது எல்லாம் சரியாகி விட்டது. கையை மடக்கு, வலிப்பெல்லாம் நின்று போகும்" என்று அதிகாரக் குரலில் கூறுகிருர். உடனே எல்லாம் சரியாகி விடுகிறது. மனத்தில் நம்பிக்கை ஏற்படுவதற்காக இன்னும் சில மருந்துகளேயும் கொடுக்கிருர்.

இது ஒருவகை ஹிஸ்டிரியா என்று நண்பர் என்னிடம் கூறினுர். மனத்தில் ஏதோ சிக்கல்; போராட்டம். அதன் விளேவாக இந்த விபரீதக் கோளாறு ஏற் பட்டிருக்கிறது.

கேட்பதற்கு ஆச்சரியமாக இல்லேயா? நம்புவதற்குக்கூட எளிதில் முடிவ

தில்லை. மனத்தின் மாயை இவ்வாறிருக்கிறது. இந்த இரகசியத்தை அறிந்து தான் மனத்தைப் பேய் என்றும், கள்ள மனம் என்றும், வஞ்ச மனம் என்றும் கூறி யிருக்கிறார்கள்.

மனத்தின் மாயைகளை வெல்வது எளிதல்ல என்று தாயுமானவர் ஒரு பாடலிலே அழகாகக் கூறியிருக்கிறார்.

'நற்புத்தி யாவையும்
சூறையிட்டு இந்திரசாலம்
அமையவொரு கூத்தும் சமைந்தாடு மனமாயை
அம்மம்ம வெல்லல் எளிதோ'

என்கிறார். மனம் ஒரு கூத்தே ஏற்பாடு செய்துவிடுகிறதாம். அந்தக் கூத்தை ஆடும் பாத்திரமாக நாம் ஆகிவிடுகிறோம்.

சும்மாடு என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியும். ஏதாவது ஒரு சுமையைத் தலையில் தூக்கி வைத்துச் சுமக்க வேண்டுமானால் சும்மாடு வேண்டும். தலையின்மேல் ஒரு கல்லை அப்படியே தூக்கி வைக்க முடியாது. முதலில் தலையில் ஒரு சும்மாட்டை வைத்து அதற்கு மேலே கல்லை வைக்கவேண்டும்.

இந்த மாயை மனம் தானே சும்மாடு ஆகிவிடுகிறதாம். நம்மைச் சுமை சுமக்கும் ஆளாகச் செய்துவிடுகிறதாம்.

"சுமை யெடுமின் என்று தான்
சும்மாடு மாயெமைச்
சுமையா ளுமாக்கி"

இந்தப் பொல்லாத மனம் 'கொள்ளித்தேள் கொட்டிக் குதிக்கின்ற பேய்க்குரங்காய்' ஆட்டமிடுகிறது.

உள்ளத்தின் பேயாட்டத்திற்கு எளிதான இரு உதாரணங்கள் தந்தேன். ஆனால் இது அக் கூத்தின் ஒரு சிறு பகுதியே ஆகும். வஞ்ச மனம் போக விரும்பு கின்ற பாதைகளையெல்லாம் ஆராய்ந்து பார்த்தால் அதன் பேய்க் குரங்குத் தன்மை நமக்கு ஒரு சிறிது புலப்படும்.

ஆனால் இது நமக்குத் தெரிகிறதா என்றால் அதுதானில்லை. இதைத் தெரிந்து மனதை நல்வழியிலே செலுத்த முயலுவதுதான் சிறந்த வாழ்க்கை முறை யாகும். அதில் வெற்றியடைகின்றவர்கள் உயர்வடைகிறார்கள். ஆன்ம சாதனையில் முன்னேற விரும்புகிறவர்களுக்கு மட்டும் இது தேவை என்று யாரும் நினைக்கக் கூடாது. உலக வாழ்க்கையிலே வெற்றி பெறுவதற்கும் இது தேவை. வாழ்க் கையை இன்பமும் அமைதியும் கொண்டதாக வகுத்துக் கொள்ளவும் இது உதவுகிறது.

இக்கட்டுரையிலே மனத்தைப் பற்றி ஒரு சில குறிப்புகளே தந்திருக்கிறேன். தத்துவ ஞானிகளும், உளவியல் ஆராய்ச்சியாளர்களும் கூறியுள்ள செய்திகளை யெல்லாம் தரவேண்டுமானால் ஒரு நூலே எழுதவேண்டும்.

ஆனால் உள்ளத்தின் மாயத்தன்மையை அறிந்துகொள்ள இக்குறிப்புகளே போதும். அதை உணர்ந்து வாழ்க்கையை நெறிப்படுத்துவதே சிறப்பும் சிலமுமாகும்.

# ஏழில் ஐந்து

ம. ரா. போ. குருசாமி

பொருளிலக்கணம் தமிழர் பண்பாட்டின் தனிச்சிறப்பு என்பது கற்றறிந்து தெளிந்த சான்றோர் ஏற்றுக்கொண்டதாகும். அகம், புறம் என இருபாற் படும் அப்பொருளிலக்கணம் சுட்டுகின்ற நாகரிகக் கூறுகளும் பண்பாட்டுச் சீர்மையும் எண்ணத்திற்குச் செம்மையும் வாழ்விற்கு மாண்பும் ஊட்டவல்லன. விரிந்த அத்துறை முழுவதினும் நாட்டம் செலுத்தாமல், அகப்பொருட் சார்பின் ஒரு சிறு பகுதியினை மட்டும் இக்கட்டுரை வாயிலாக நோக்குவோம்.

அகப்பொருளின் திணைப் பிரிவுகள் மிக நுட்பமான கோட்பாடுகளைத் தம் அடிப்படையிலே கொண்டு திகழ்கின்றன. அவற்றைப் பாகுபடுத்திய முறையினில் உள்ள அடிப்படை நயங்கள் சிலவற்றை இனிக் காண்போம்.

அகத்திணை ஏழு என்பர். அவை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்பனவாம். இவற்றை வரிசைமாற்றிக் கூறுவதும் உண்டு. நிரல் எவ்வகைத்தாயினும் அகப்பொருள் பற்றி ஆராய்வார் இவ்வேழினையும் கருதியே தீரவேண்டும். இவ்வேழினுள் கைக்கிளையும் பெருந்திணையும் சிறப்புடை யனவாகா. தமிழிலக்கியத்தின் இன்றைய போக்கில் கைக்கிளையும் பெருந்திணையும் கூடக் காதல் துறையின என்று கொள்ளப்படுதலைக் காண்கின்றோம். ஒருதலைக் காம மாகிய கைக்கிளையும் பொருந்தாக் காமமாகிய பெருந்திணையும், இற்றை நோக்கில் காதல் தொடர்புடையனவெனினும், சிறப்புடையன ஆகமாட்டா. உள்ளம் பண் பட்டுப் பண்பட்டு உயிர்க்கு ஆக்கம்தரும் முயற்சிகளே மானிட வாழ்க்கையின் செம் மாந்த நிலையாகும். அப்பெருநிலை கைக்கிளையிலும் பெருந்திணையிலும் வாய்ப்பதில்லை. அவை வெறிக்கும் மயக்கத்திற்குமே இடம் வகுக்கும்; செம்மைக்கும் சீர்மைக்கும் அவற்றிலே இடம் இல்லை. எனவேதான்,

> *'கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவா*
> *முற்படக் கிளந்த எழுதிணை யென்ப'*

என்று ஏழினையும் தொகுத்துச் சொல்லிய தொல்காப்பியர், 'அன்பின் ஐந்திணை' என முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலைகளை மட்டுமே அடையால் சிறப்பித்துக் கூறுகின்றார். இவ்வடைச் சிறப்பொன்றே கைக்கிளை பெருந்திணைகளை எடையிட் டுணரப் போதுமானதாகும்.

ஒருதலைக் காமமும், பொருந்தாக் காமமுமாகிய கைக்கிளை, பெருந்திணைகளை விடுத்து, அகனைந்திணை என்று சிறப்பிக்கப்படுகின்ற குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய திணைகளின் உள்ளுறையிலே அமைந்துள்ள ஒரு நுட்பம் பெரிதும் கருதுதற்குரியது.

குறிஞ்சி என்பது புணர்தலும் புணர்தல் நிமித்தமும். முல்லை என்பது இருத்தலைக் குறிப்பது; அஃதாவது தலைவன் பிரிந்து சென்ற பின்னை இல்லின்கண் தலைவி பிரிவுத் துன்பத்தினை ஆற்றி (பொறுத்து) இருத்தல். மருதம் என்பது ஊடலும் ஊடல் நிமித்தமும் ஆகும். நெய்தல் என்பது பொறுக்கும் ஆற்றல் மிறிய பிரிவுத் துன்பமாகும். பாலை என்பது பிரிதலும் பிரிதல் நிமித்தமும். — இவ்வுரிப் பொருள் விளக்கம் முன்னோர் கூறியது

மேற்குறித்த இவ் அகன் ஐந்திணையுள் குறிஞ்சி தவிரப் பிற நான்கும் ஏதேனும் ஓர் அளவான் பிரிதலையே குறிக்கின்றன. வடமொழியாளர் ஓதிய காதல் இலக்கியங்களும் இலக்கணங்களும் புணர்தல், பிரிதல் (சம்போகம், விப்பிரலம்பம்) என்று இரண்டு பிரிவுகளைத்தான் ஓதுகின்றன. காதலை இவ்விரண்டு வகையாகப் பிரிப்பதுவே இயற்கை என்று மேற்போக்காக நோக்குவார்க்குத் தோன்றலாம். வள்ளுவரின் காமத்துப்பாலுக்கு உரை எழுதுமுன், அப்பாலினைப் புணர்ச்சி, பிரிவு என்ற இரு வகையாகவே பரிமேலழகர் பிரித்துக்கொள்ளுகின்றார். தாம் மேற் கொண்ட வடநூல் வழக்கினைத் திருவள்ளுவர் மேலதாக்கிக் கூறுவார். ஆனால், தமிழர் நெறிக்கு அது பொருந்தாது. வடநூல் வழக்குவழி காமத்துப்பாலைப் பிரித்த பரிமேலழகர், குறிஞ்சி பாலை ஆகியவை தவிர முல்லை மருதம் நெய்தல் ஆகிய வேறு மூன்று திணைகளையும் நினையும் பொழுது இடர்ப்படுவதனை அவர்தம் உரை முன்னுரையிற் காணலாம். தாம் மேற்கொண்ட நெறியிலுள்ள பிழைபாட்டினை மறைத்தோ அல்லது மறந்தோ, அப்பாகுபாடு வள்ளுவர் வடநெறியை மேற்கொண்டதால் அமைந்தது என்று விளக்கி அமைதி கொள்ள முனைகின்றார். எனினும், அவர்தம் உரையுள் இத்தடுமாற்றம் முற்றிலும் மறைக்கப்படுமாறில்லை. அவர்தம் கூற்றினை ஈண்டு நோக்குதல் பொருத்தமுடைத்து :

> "இது புணர்ச்சி, பிரிவு என இரு வகைப்படும். ஏனை இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவோவெனின், இவர் பொருட் பாகுபாட்டினை அறம், பொருள், இன்பம் என வடநூல் வழக்குப் பற்றி ஓதுதலான் அவ்வாறே அவற்றைப் பிரிவின்கண் அடக்கினாரென்க. இனி, அவை தம்மையே தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும், பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மை பற்றி வகுத்து, அவற்றைச் சுவை மிகுதி பயப்ப உலக நடையோடு ஒப்பும் ஒவ்வாமையும் உடையவாக்கிக் கூறுகின்றார்."

பரிமேலழகர் காட்டுகின்ற வள்ளுவர் கருத்துப்படி அகவொழுக்கத்தைப் புணர்ச்சி என்றும் பிரிவு என்றும் பகுத்துக்கொள்ளுதல், நாம் மேற்குறித்த வண்ணம், மேற்போக்காகக் காணும் நோக்கினால் விளைவது. சங்க காலச் சான்றோர் புணர்தல், பிரிதல் என்ற பகுப்பு முறையினை அறியாதவரல்லர். அறிந்தும், புணர்ச்சியைக் குறிஞ்சியாகவும், பிரிதலை ஏனை நான்காகவும் கொண்டு ஓதிய நுட்பம் ஆழ்ந்த கருத்துடையது.

ஒன்றை ஆக்குதல் — செம்மையுற ஆக்குதல் — அருமையானது. ஆயின், அவ்வருமைப்பாடும் மற்றொரு கடமையினை நோக்க மிக எளியதாகும். ஆக்குதலினும், ஆக்கிய ஒன்றைப் பேணுதல் பெரிது; மிகப்பெரிது; அரிது, மிக அரிது. காதல் அரும்புதல் எளியதன்று. சிலர் அதன் செவ்வி தலைப்படுவார் என்பது வள்ளுவர் வாக்கு. இத்துணை அருமையான காதல், அதனைப் பேணும் முறையில்தான் தழைத்துச் செழித்துப்பயன் தரவல்லது. காதல் என்ற உணர்ச்சி உயிரினங்

களின் இயல்பூக்கங்களிலெல்லாம் மிகமிக ஆற்றலுடையது. ஆற்றலால் தலைமை பெறும் அவ்வுணர்ச்சியே நுட்பத்தால் மிக மென்மையானதாகவும் இருக்கின்றது. தன் ஆதிக்கத்தால் ஆற்றலது மிகுதியும், ஆளப்படும் திறத்தால் உணர்வினது மென்மையும் ஒரு சேரக் கொண்டிலங்கும் சிறப்பே காதலின் தனித் தன்மையாகும். இக்காதலெனும் சுவை இனப்பெருக்கமாகிய சாதாரண உயிர்க் கடமையோடு பிணைந்து கிடக்கின்ற தன்மையும் பெற்றிருக்கின்றது. வன்மையும் மென்மையும் ஒருங்கே கொண்டிலங்கும் காதல், இனக்கவர்ச்சியாகிய விலங்குணர்வும், உயிரினை மேல் உய்த்து மேம்படச் செய்யும் தெய்விகப் பண்பும் ஒருங்கே கொண்டதாகும். இவ்வாறு முரணி நிற்கும் பண்புடைய காதலைப் பேணுவது அருமையினும் அருமை. பால் உணர்ச்சியையும் இனப்பெருக்கத்தையும் தன்னுடைய இயல்பாகவும் நோக்கமாகவும் கொண்டதுதான் காதல் என்ருல், அதனைப் பெறுவதும் எளிது, பேணுவதும் எளிது. ஆயின், நாம் மேலே விளக்கிய வண்ணம், காதல் என்பது வன்மையும் மென்மையும், அருமையும் எளிமையும் ஒருங்கே கொண்ட ஒரே தன்மையாகும். எனவே, இதனைப் பெறுதலும் அரிது; பெறினும், அதனைப் பேணுதல் அதனினும் அரிது. ஆகையால்தான், ‘மலரினும் மெல்லிது காமம்; சிலர் அதன் செவ்வி தலைப்படுவார்’ என்று வள்ளுவர் அதன் இருமைப் பண்பு நோக்கி விளக்கினுர்.

காதல் தோன்றுதற்குரிய அருமைப்பாட்டினை உணர்ந்தே தலைமக்கட்குரியது அகனைந்திணை என்று தொன்மை இலக்கியங்களும் இலக்கணங்களும் வகுத்தோதின.

ஒருதலைக் காமமாகிய கைக்கிளையும் பொருந்தாக் காமமாகிய பெருந்திணையும் தொல்காப்பியத்தின்படி அகப்பொருளிலேயே வைத்து ஓதப்படுவன.

கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவா
முற்படக் கிளந்த எழுதிணை என்ப

என்பது தொல்காப்பியம். உளங்கலந்த காதலினை ஓதுகின்ற ஐந்திணைக் காதலின் சிறப்பையும் அருமையையும் உலகம் ஒப்பிட்டு உணரவேண்டும் என்பதற்காகவே கைக்கிளையையும் பெருந்திணையையும் முறையே முதலிலும் இறுதியிலும் வைத்து, இடையே ஐந்திணையைக் குறிப்பாற் பெற வைத்தார். இந்த நுட்பத்தினின்றும் கருத்து வேறுபட்ட பிற்காலத்தில் கைக்கிளையையும் பெருந்திணையையும் புறப் பொருட்பகுதியாக வைத்தோதினர். (புறப்பொருள் வெண்பாமாலையுள் புறத் திணைகள் பன்னிரண்டு என வகுத்துக் கைக்கிளையையும் பெருந்திணையையும் அப்பன்னிரண்டனுள் சேர்த்துக் கூறுவர் ஐயன் ஆரிதனுர்.)

தொல்காப்பியர் அகனைந்திணையின் சீர்மையும் சிறப்பும் புலப்படுத்தற் கேற்ற பகைப்புலமாய்ப் பயன்பட வேண்டுமென்ற கருத்தினுல் கைக்கிளையை முதற் கண்ணும், பெருந்திணையை இறுதிக் கண்ணும், இடையே ஐந்திணையையும் அமைத்துக் கூறியிருப்பதனுல் இவ்வரிசையில் மாற்றம் கூடாது என்பது அவர்தம் கருத்து. ஆதலால்தான், **“கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவா...”** என ஒரு சூத்திரத்துட் கூறியதோடமையாது **‘நடுவண் ஐந்திணை’** எனப் பிறிதொரு சூத்திரத்திலும் வற்புறுத்திக் கூறுகின்றுர்.

இந்தப் பெயர் அமைப்பிலும் வரிசையிலும் அமைந்துள்ள மற்றொரு நுட்பம் கூர்ந்து நோக்குதற்குரியது. புறப்பொருள் திணைகளுள் எவற்றையும் தொல்காப்பியர் இணைத்துச் சொல்லவேயில்லை; அவை ஏழையும் தனித்தனியே ஓதுகின்றுர். ஆனல், அகத்திணைகள் ஏழினையும் கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என

அமைத்துச் சொல்லும் முறை தொல்காப்பியத்துள் காணப்படுகின்றது.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்தையும் இணைத்து ஒன்ருகக் கண்டும் காட்டியும் கூறுவதோடு, ' **அன்பொடு புணர்ந்த** ' என்ற அடைமொழியும் கொடுத்து, ' **அன்பின் ஐந்திணை** ' என ஓதுவது தனிச் சிறப்புடையதன்ரே !

புறத்திணைகளைத் தனித்தனியே நோக்குதல் போல, அகத்திணை ஒழுகலாறு களைத் தனித்தனியே பிரித்து நோக்குதல் ஆகாது என்பது தொல்லாணை நல்லாசிரியர் கருத்துப்போலும். இங்கும் அகத்திணை ஏழையும் பிணைத்து நோக்காது கைக்கிளை, பெருந்திணைகளை விடுத்தே பிணைத்திருப்பது ஆழ்ந்து எண்ண எண்ண நுட்பச் சுவை பயப்பதாம்.

புறப்பொருள் வெண்பாமாலைகாரர் அகப்பொருளினது தூய்மையைக் காப்பது கருதிப்போலும் தொல்காப்பியர் நெறியினின்றும் மாறிக் கைக்கிளை, பெருந் திணைகளை அகப்புறம் எனத் தம் நூலுள் கொண்டு கூறினர். அகப்பொருளினது தூய்மையைக் காக்கக் கருதிய ஐயன் ஆரிதனரின் எண்ணம் பழுதுபட்டதன்று. எனினும், கைக்கிளை, பெருந்திணைகளாகிய பகைப்புலத்தின் பின்னணியில் ஐந்திணைக் காட்சியைக் கண்டு அடையும் பெருமிதம் பின்னைப் பிரிவில் இல்லையென்றே சொல்லுதல் வேண்டும்.

சிரிய உணர்வாகிய காதலினை ஓம்பி உயிரினம் உயர்வடைவதற்கு முதற் கண் வேண்டப்படுவது அவ்வுணர்வின் மாண்பு பற்றிய உணர்ச்சியாகும். முன்னரே கூறிய வண்ணம் உயர்ந்த பொருளொன்றை அடைதலினும் அப்பொருளினது அருமை உணர்ந்து காத்தலே சிறப்புடையதாகும். காதலின் அருமைப்பாட்டை உணர்த்தவல்லது பிரிவு என்ற ஒரே தத்துவந்தான். பிரிந்துள்ளபொழுது உண்மைக் காதலுள்ளம் தன்னைப் பறிகொண்ட மற்ரேர் உள்ளத்திலேயே தோய்ந்து கிடக்கும். முதற்கண் கண்டபொழுது, தனக்கொரு துணைவாய்த்தது என நினைப்பதே தொடக்க மாகும். ஆனல், ' தனக்கொரு துணை ' என்ற நிலைபோய், அவளின்றித் தான் இல்லை என அவனும், அவனின்றித் தான் இல்லை என அவளும் நினைக்கின்ற கரைவு காதலின் வளர்ச்சியைப் புலப்படுத்துவதாகும். இவ்வாறு அவளில் அவனும், அவனில் அவளும் கரையும் நிலை திளைப்பிலே தோன்றுவது. நினைப்பிலே முகிழ்க்கும்; பிரிவிலே மலரும் ; பரிவிலே கனியும். நினைந்து நினைந்து, பிரிவால் பரிந்து பரிந்து, காதல் உறுதி பெறுகின்றது. இத்தகைய பிரிவுத் துன்பத்திற்குத் துணைபோகும் உள்ளமே உண்மையிற் காதல் உள்ளமாகும். பிரிவால் உறுதி பெறும் காதலின் பல்வேறு தன்மைகளை இலக்கியப் புலவர்கள் நூற்றுக்கணக்கான பாடல்களில் மிக அற்புத மாகப் பாடியுள்ளனர். அந்தப் பாடல்களின் நுட்பங்களையெல்லாம் செறித்துச் செறித்து நான்கு திணைகளாக இலக்கண ஆசிரியர்கள் புலப்படுத்தினர். புணர்தல் எனும் குறிஞ்சி ஒரு பகுதி என்ருல், அப்பகுதிக்குச் சிறப்புத்தருவன பிரிவின் பல் வேறு தரத்தனவாகிய பாலை மருதம், நெய்தல், முல்லை என்ற திணைகளேயாகும்.

இவ்வாறு ஏழில் ஐந்தை ஒன்ருகப் பிணைத்தும், அவ்வைந்துள்ளும் நான் கிற்கு ஒரு தன்மை வகுத்தும் ஓதிய நுட்பத்தின் மாண்பு விரிப்பின் பெருகும் ; தொகுப்பின் எஞ்சும்.

# அகர முதல

**சித்தலிங்கம்,** எம். ஏ.,
தமிழ்த் துறை
பனாரஸ் இந்துப் பல்கலைக் கழகம், காசி.

**மொழி,** கருத்துக்களை எடுத்துரைக்க உதவும் ஒரு கருவி. சொற்கள் மொழியை உருவாக்குகின்றன. எழுத்துக்கள் தனித்தோ, ஒன்று சேர்ந்தோ பொருள் தந்து சொற்களாக உருவாகின்றன.[1] தமிழ் நெடுங்கணக்கு உயிர், மெய், உயிர்மெய், ஆய்தம் என நான்கு வகையாகப் பிரிக்கப் பட்டிருக்கின்றது. மற்றொரு வகையால் முதல் எனவும் சார்பு எனவும் இரு வகைப்படுகின்றது.[2] உயிரும் மெய்யும் முதல் எழுத்துக்களெனவும், உயிர்மெய், ஆய்தம், அளபெடைகள் முதலியன சார்பெழுத்துக்களெனவும் குறிக்கப்படுகின்றன.[3] முதலெழுத்துக்களிலும் உயிரெழுத்துக்களுக்கே முதலிடம் தரப்பட்டுள்ளது. மெய்யெழுத்துக்கள் உயிரின்றி ஒலிக்காலாகாமையின்.[4] இதனால் உயிரெழுத்துக்களின் இன்றியமையாமையை அறிகிறோம்.

தமிழில் உயிரெழுத்துக்கள் பன்னிரண்டு. அவற்றுள் முதலில் நிற்பது அகரம். இந்திய மொழிகள் அனைத்திலுமே அகரம் முதலெழுத்தாக அமைந்திருக்கிறது. ஐரோப்பிய மொழிகளிலும் அகரத்தின் திரிபாகிய 'ஏ' என்பதே தலை எழுத்தாம். கிரேக்க மொழியின் நெடுங்கணக்கு 'அல்ஃபா' என்பதனோடு தொடங்குகிறது. பாரசீக, அரபு, உருது மொழிகளில் முதலெழுத்து 'ஆலிஃப்'. எனவே, உலகமொழிகள் அனைத்திலுமே அகரம் எழுத்துக்களில் தலைமையாக இயங்குகிறது என்பது தெளிவு.

'அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே உலகு' என்று முதற்குறள் கூறுகிறது. இக்குறளுக்கு உரையாசிரியர்கள் கூறிய கருத்துக்கள் யாவை என்று காண்பது நல்லது.

**பரிமேலழகர் :** எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலை உடையன ; (அது போல) உலகம் ஆதிபகவனாகிய முதலை யுடைத்து. அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கை உணர்வானன்றி இயற்கை உணர்வான் முற்றும் உணர்தலானும் கொள்க. தமிழ் எழுத்திற்கேயன்றி வடவெழுத்திற்கும் முதலாதல் நோக்கி 'எழுத்தெல்லாம்' என்றார்.

**மணக்குடவர் :** எழுத்துக்கள் எல்லாம் அகரமாகிய எழுத்தைத் தமக்கு முதலாகவுடையன ; அவ்வண்ணமே உலகம் ஆதியாகிய பகவனைத் தனக்கு முதலாக வுடைத்து என்றவாறு.

---

1. 'எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரிற் பதமாம்' —நன்னூல்.சூ 128.
2. "அது முதல் சார்பென இருவகைத்தே"— நன்னூல் சூ. 58.
3. நன்னூல் சூ. 59,60.
4. 'மெய்யினியக்கம் அகரமொடு சிவணும்'— தொல்.

**பரிதியார் :** உயிரெழுத்துப் பன்னிரண்டுக்கும் அ க ர ம் முதலெழுத்தாதன் முறைமை போல, ஆதியான பகவன் முதலாம் உலகத்துக்கு என்றவாறு.

**காலிங்கர் :** அகரமும் அதுவே ; முதலும் அதுவே. அகரமாகிய எழுத்தின் கண் விரிந்தன ஏனையெழுத்துக்களும், அவற்ருனுகிய சொற்களும், மற்றைச் சொற்றெடர்புடைய எனைத்துக்கலைகளும். மற்றும் யாவையுமாகிய அது மற்றியாதொருபடி அப்படியே மூலகாரணனுகிய இறைவன் கண்ணே விரிந்தனவும். அவை……நுண்பூதமும்…… ஐம்பெரும்பூதமும்,…… பல்லுயிர்களும்,…… உலகங்களனைத்தும் என்றவாறு.

இவர்களுள் பரிதியார் உரை உயிரெழுத்துப் பன்னிரண்டையே குறிப்பதால் அஃது அத்துணைச் சிறந்ததன்று. மற்றவர்கள் உரை ஒரே விதமாக அகரத்தின் முதன்மையைக் குறிக்கின்றன. காலிங்கர் சிறிது வேறுபட்டு அதன் இன்றியமையாமையையும் குறிக்கின்ருர்.

வடமொழியிலும் அகரத்தைச் சிறப்பாகக் கூறும் இலக்கியப் பகுதிகள் பலவுண்டு. மறைகளிலும் இக்கருத்து வெளியாகியிருக்கிறது. 'அட்சராணும் அகாரோஸ்மி' என்பது கண்ணனின் கீதை. "எழுத்துக்களில் நான் அகரமாக இருக்கிறேன்" என்பது இதன் பொருள். "சிவஹ ஸ்திதஹ ஸர்வஜந்தூநாம் அட்சராணும் அகாரவத்" என்பது உபநிடதம். "மெய் யெழுத்துக்களெல்லாம் உடல் ; உயிரெழுத்து அவற்றின் உயிர்" என்று தைத்திரீய உபநிடதம் கூறுகிறது. உயிர், மெய் என்று தமிழில் எழுத்துக்களைப் பிரித்துள்ள முறையே இந்தக் கருத்தை நமக்கு உணர்த்துகிறது.

அகரத்தின் சிறப்பைக் குறிக்கப் பலரும் பல்வேறு கருத்துக்களைக் கூறுவர். எழுத்துக்களில் முதலிடம் பெற்றது பற்றிச் சிறப்புடையது அகரம் என்பார் சிலர். வேதங்களின் தொடக்கத்திலும் இறுதியிலும் இடம் பெறுவது 'ஓம்' என்னும் பிரணவமந்திரம்.[5] இத்தாரக மந்திரம், இறைவனது பீடம் ; மற்றைய தேவர்களுக்குப் பிறப்பிடம். எல்லா மந்திரங்களுக்கும் வேதங்களுக்கும் மூலம் ; காசியில் இறப்பவர்க்கு எம்பிரான் உபதேசித்தருளும் பிரணவம்.[6] 'ஓம்' என்பதில் அ, உ, ம என்னும் மூன்று எழுத்துக்கள் உள்ளன. எனவே மறைகளுக்கும் மந்திரங்களுக்கும் தேவர்களுக்கும் இருப்பிடமாய் உள்ள பிரணவத்தின் முதலெழுத்து அகரம். எனவே அது பெருஞ் சிறப்புடையது என்பார் சிலர்.

இவற்றின் உண்மையை வேறு நூல்களின் துணை கொண்டு காண முயல்வோம். ஏதேனும் ஓர் ஒலியை எழுப்ப நாம் வாயைத் திறக்கிறோம். இந்த ஒலியெழுப்பு முயற்சியிலேயே (Vocalization) அகரம் பிறக்கிறது. வாயைத் திறந்தவுடனே எழும் ஒலி அகரம்.[7] மற்ற வொலிகளெல்லாம் பின்னரே தோன்றுகின்றன.

---

5. "தூமறைக் கெலாம் ஆதியும் அந்தமும் சொல்லும், ஓமெனப்படும் ஓரெழுத் துண்மை" -கந்தபுராணம்- உற்பத்திகாண்டம்- அயனைச் சிறைபுரி படலம்.

6. "ஈசன் மேவரு பீடமாய் ஏனையோர் தோற்றும்
வாசமாய் எலா எழுத்திற்கும் மறைகட்கும் முதலாய்க்
காசி தன்னிடை முடிபவர்க் கெம்பிரான் கழறும்
மாசில் தாரகப் பிரமமாம் அதன்பயன் ஆய்ந்தான்"—
கந்தபுராணம்- அயனைச்சிறை புரிபடலம்.

7. "அவற்றுள், முயற்சியுள் அ,ஆ அங்காப் புடைய"— நன்னூல். சூ. 76.

எனவே எல்லா ஒலிகளுக்கும் முதலில் தோன்றி, அவற்றின் அடிப்படையாய் நிற்பது அகரம் என்பது தெளிவு. இதைக் காலிங்கர் தமது திருக்குறள் உரையிற் குறிக்கின்ருர். எழுத்துக்களின் முதலாயும், அடிப்படையாயும் மட்டுமன்றி அவற்ரேடு உடனியைந்து, இரண்டற நிற்பது அகரம் என்ற கருத்தைச் சித்தாந்த நூல்கள் கூறுகின்றன.

" ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்ற நீபாசத் தோடுளைகாண்— ஒன்றின்ருல்
அக்கரங்க ளின்ரும் அகர வுயிரின்றேல்
இக்கிரமத் தென்னும் இருக்கு "

என்பது மெய்கண்டார் திருவாக்கு. அகரம் இல்லையாளுல் எழுத்துக்களேயில்லை என்று இப்பாட்டிற் குறிப்பிடுகிருர், அவர். ஒன்ருதல், வேருதல், உடனுதல் என்னும் மூன்றியல்புகள் இறைவனுக்குண்டு. உயிர்களுடன் ஒன்றி, அவற்றினின்றும் வேருகி, உடம்பில் அவற்ரேடு உடனுறைகின்ற சிறப்பு கடவுளுக்கே உரியது. அந்தச் சிறப்பு எழுத்துக்களில் அகரத்திற்கு மட்டுமே உண்டு.

உமாபதி சிவாசாரியர் இக்கருத்தை இன்னும் தெளிவாக எடுத்துரைக்கிருர். 'திருவருட்பயன்' என்னும் தமது நூலில், முதற்குறளில் அவர் இதைக் குறிக்கிருர்.

" அகரவுயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறைநிற்கும் நிறைந்து "

என்பது அக்குறளாகும்.

அகரவுயிர் எழுத்துக்களெல்லாவற்றிலும் நிறைந்து நிற்கும். அது போல இறைவனும் எல்லாப் பொருள்களிலும் நிறைந்து நிற்கிருன். எனவேதான் அகரத்திற்குச் சிறப்பு மிகுத்துக் கூறப்படுகிறது.

இதை எண்ணியே, 'எழுத்துக்களுள் அகரம் நான்' என்று கண்ணன் கூறியதாகக் கீதை குறிப்பிடுகிறது.

எனவே, 'அகரமுதல' என்ற குறள், அகரத்தின் முதன்மையும், அதுமற்ற எழுத்துக்களுக்கு அடிப்படையாய் அமைவதையும், ஒவ்வோரெழுத்திலும் அகரம் உடனுறைவதையும் குறிப்பிட்டு, அதுபோல இறைவனும், உலகிற்கு முதலாய், அடிப்படையாய், உள்நிறை பொருளாய் இருக்கிருன் என்று வலியுறுத்துவதாகக் கொள்வது தவருகாது.

' அகர முதல எழுத்தெல்லாம் ; ஆதி
பகவன் முதற்றே உலகு' — திருவள்ளுவர்.

# கடல் கடந்த தமிழகம்!

— அப்துல் கனி —

உலகில் பல நாடுகளையும் பார்க்க வேண்டுமென்ற ஆசை ஏற்படுவது எல்லோருக்கும் இயற்கையே. இந்த இயற்கைக்கு நான் விதி விலக்கல்ல. பிற நாடுகளைக் காண வேண்டுமென்ற அவாவில் நான் முதலாவதாக தூரகிழக்கு நாடுகளைத்தான் காண விரும்பினேன். ஆனால் நான் முதன் முதலாகச் சென்ற வெளி நாடு என் ஆத்மீகக் கடமையை நிறைவேற்றுவதற்கு அமைந்த அரபு நாடாகும். அடுத்து இங்கிலாந்து, மேற்கு ஐரோப்பிய நாடுகள், எகிப்து போன்ற நாடுகளுக்கும், சோவியத் யூனியனுக்கும் செல்ல வேண்டியதேற்பட்டது. இந்த நாடுகளுக்கெல்லாம் சென்ற அனுபவத்தில் ஒரு வேற்று நாட்டுக்குச் செல்லும் மன உணர்வும், அந்த நாட்டில் சந்திக்க விருக்கும் புதிய மனிதர்கள், புதிய மொழிகள், புதிய நாகரீகங்கள் ஆகியவற்றைச் சமாளிப்பதற்கான ஆயத்தங்களும் எனக்குப் பழக்கப்பட்டு விட்டன.

சிங்கப்பூர் விமானத் திடலை என் விமானம் அணுகு முன், ஒரு வேற்று நாட்டில், முற்றிலும் வேறுபட்ட இன, மொழி, நாகரீகமுடைய மக்களைச் சந்திக்கப் போகிறேன் என்ற துரு துருப்பு என் மனத்தில் எழத்தான் செய்தது. ஆனால் நான் விமானத்திலிருந்து இறங்கியதும் தமிழர்களையே கண்டேன்; தமிழ் ஒலியையே கேட்டேன்! இது எனக்கு வியப்பைத் தந்தது. நாம் சிங்கப்பூருக்கு வந்துள்ளோமா, அல்லது தமிழகத்தில் உள்ள ஏதேனும் ஒரு ஊரில்தான் இருக்கிறோமா என்ற சந்தேகமே ஏற்பட்டது. சுங்க இலாக்காவிலும் கூட தமிழ் மொழியே போதுமான தாக இருந்தது!

சிங்கப்பூரில் இரண்டு நாட்கள் இருந்த போதும் தமிழ்ச் சூழலிலேயே இருந்தேன். நண்பர்கள் அளித்த விருந்தில் தமிழ் மணமே கமழ்ந்தது.

சிங்கப்பூரை விட்டும் மலாசியாவின் தலைநகராகிய கோலாலம்பூருக்கு ரயில் வண்டி மூலம் சென்றேன். ரயில் நிலையங்களில் நான் கண்ட கூலிகளிலிருந்து டிக்கட் பரிசோதகர்கள்வரை தமிழர்களாகவும், தமிழில் உரையாடுபவர்களாகவும் இருந்தனர். சிங்கப்பூரிலும் மலாசியாவிலும் மலாய் மக்களையும் சீன மக்களையும் பெருமளவில் கண்டேன் என்றாலும், நான் தமிழ்ச் சூழலிலேயே இருந்தேன். எனது அன்பிற்குரிய நண்பர்கள் ஆங்கு பெருமளவில் இருந்ததும், மலாசியாவில் கணிச மான அளவில் தமிழர்கள் வாழ்ந்து வருவதுமே இதற்குக் காரணமாகும். அங்கு தமிழர்கள் எல்லாத் துறைகளிலும் பணியாற்றுகிறார்கள்.

கோலாலம்பூரிலிருந்து நான் தாய்லாந்தின் தலைநகராகிய பாங்காக்கிற்குச் சென்றேன். அங்குதான் நான் வேற்று நாட்டிலிருக்கும் உணர்ச்சியை ஓரளவு பெற்றேன். நம் நாட்டிலிருந்து வேறுபட்ட இனத்தினரை அங்கு கண்டேன். அங்குள்ள மக்கள் குட்டையாகவும், மஞ்சள் நிறத்தினராகவும் இருந்தனர். பிரம் மாண்டமான ஆலயங்களும், பொன்னாலும், மரகதத்தாலும் உருவாக்கப்பட்ட புத்தர் சிலைகளையும் அங்கு கண்டேன்.

பாங்காக்கிலிருந்து தென் வியட்நாம் தலைநகராகிய சைகோன் சென்றேன். அங்கும் மலாசியாவைப் போல் அன்புக்குரிய நண்பர்களின் விருந்தாளியாகவே இருந்தேன். வியட்நாமியர், சிறிய உருவமும், பேரழகும், சாந்த குணமும் உடைய வர்களாக இருந்தனர்.

சைகோன் அழகான நகரம். இங்கும் கம்யூனிஸ ஆட்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கில் அன்ருடம் கம்யூனிஸ்ட்கள் பயங்கரப் போராட்டத்தை நாடு பூராவும் நடத்திக் கொண்டிருந்தும், சைகோன் நகர மக்கள் அமைதியோடு இருப்பதும் குறிப்பாக, நம் தமிழ் நண்பர்கள் இதைப்பற்றி அதிகம் கவலை கொள் ளாமல் அவரவர் தொழிலில் ஈடுபட்டிருப்பதும் எனக்கு ஆச்சர்யத்தை அளித்தது. கம்யூனிஸ அபாயத்திலிருந்து தென் வியட்நாமை அமெரிக்கா நிச்சயமாகக் காப் பாற்றும் என்ற உறுதியான நம்பிக்கையிலேதான் இவர்கள் இருப்பதாகத் தெரிகிறது.

சைகோனிலிருந்து கம்போடியாவின் தலைநகராகிய புனம்பின் வந்து சேர்ந் தேன். மீண்டும் தமிழகத்திற்கே வந்து விட்டோமா என்ற சந்தேகம் அங்கும் எழுந்தது. அங்கே நான் கண்ட மக்கள் எல்லோரும் நிறத்தாலும் தோற்றத்தாலும் தமிழர்களாகவே இருந்தனர். ஆனுல் மொழி மட்டும் வேருக இருந்தது. புனம் பினில் என்னுடைய நண்பர்களின் விருந்தினனுகத் தங்கினேன்.

அங்கிருந்து சுமார் நூறு மைல் தொலைவில் உள்ள அங்கோர்வாட் என்னுமிடத்திற்குச் சென்றேன். அங்குள்ள அரசினர் விடுதியில் தங்கி புனம்பினி லிருக்கும் என் நண்பர்கள் கூறிய ஆலோசனைப்படி திருவாளர் திருப்பதி செட்டி யாருக்குப் போன் செய்தேன். அங்கோர்வாட்டில் உள்ள ஒரே தமிழர் அவர். அவர்தான் நம் நாட்டிலிருந்து செல்லும் இந்தியர்களின் வரவேற்பாளராகவும் உப சரிப்பாளராகவும் வழிகாட்டியாகவும் இருந்து வருகிருர். அவர் என்னை மகிழ்ச்சி யோடு வரவேற்று அன்று பிற்பகலிலேயே அப்பகுதியைச் சுற்றிப்பார்க்க அழைத்துச் சென்ருர். நான் கண்டது கம்போடிய நாட்டின் ஒரு பகுதி தான் என்பதை என்னுல் இன்னும் நம்பமுடியவில்லை.

அங்கே நான் கண்ட உருக்குலைந்த மாளிகைகள், உருவம் மாருக் கோவில்கள் எல்லாம் தமிழ் நாட்டையே நினைவுறுத்தின. தமிழ் நாட்டுக் கோவில்களில் காணும் சிற்பங்கள், சிலைகள் எல்லாம் அப்படியே அங்கு அமைந்துள்ளன. புராண இதி காசத் தொடர்புடைய வரலாறுகளை உரை செய்பவையாக அச் சிற்பங்கள் இருக் கின்றன. சிற்பக் கலை பற்றிய நுணுக்கங்களை நான் அதிகம் அறிந்தவனல்ல, என்ருலும் எந்தெந்தச் சிற்பங்கள் நம் தமிழ் நாட்டின் எந்தெந்த மாவட்ட மக்களின் சாயல்களில் இருக்கின்றன என்பதையும், நம் தமிழகத்தின் இன்ன இன்ன பகுதியில் அணி செய்யும் இன்ன இன்ன ஆபரணங்கள் இவைகள் என்பதையும் நண்பர் திருப்பதி செட்டியார் தெளிவுற விளக்கம் செய்தார். அன்று மாலைவரை சில பகுதிகளைப் பார்த்து விட்டு, மறு நாளும் சில பகுதிகளைப் பார்க்கத் திட்டமிட்டு என் தங்குமிடம் திரும்பினேன்.

மறுநாள் காலையில் நண்பர் திருப்பதி செட்டியார் கட்டு சாதத்துடன் நான் தங்கியிருந்த இடத்திற்கு வந்து அழைத்துச் சென்ருர். அங்கு நான் சற்றும் எதிர்பார்க்க முடியாத எலுமிச்சம் பழ சாதமாக, தயிர் சாதமாக, தமிழரின் விருந் தோம்பும் பண்போடு அவர் கொண்டு வந்த கட்டுச் சாதம் இருந்ததை என்னுல் மறக்க முடியவில்லை.

செட்டி நாட்டு வாசியாகிய திருப்பதி செட்டியார் அங்கோர் வாட்டில் நாம் காண வேண்டிய அற்புத மனிதராகவே இருக்கிறார். இந்தியத் திருநாட்டிலிருந்து செல்லும் ஜனாதிபதி முதல் சாதாரணக் குடிமகன் வரை அவருடைய உபசரிப்புக்கும், வழிகாட்டலுக்கும் ஆளாகாமல் இருக்க முடியாது. மிகைப்படுத்திக் கூறிவிடுவதாக எண்ணி விடக் கூடாது. நமது முன்னாள் ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திர பிரசாத் அவர்களுக்கும் திருப்பதி செட்டியாரே உபசரிப்பாளராகவும், வழி காட்டியாகவும் இருந்திருக்கிறார். ஜனாதிபதி அவர்களுடன் இருந்து எடுத்துக் கொண்ட புகைப் படத்தை திரு. செட்டியார் பெருமையோடு போற்றி வைத்திருக்கிறார். திருப்பதி செட்டியார் சைவ சமயத்தவராகவும் தமிழ் ஆர்வம் மிக்கவராகவும் அங்கு வாழ்ந்து வருகிறார். அவர் சின மாது ஒருத்தியை மணந்துள்ளார் எனினும், இன்னும் சுத்த சைவராகவே அவர் விளங்கி வருவது அவருக்குள்ள சமயப் பற்றினைக் காட்டுகிறது. கம்போடியாவிற்கும், தமிழகத்திற்கும் உள்ள கலை— கலாச்சார— நாகரீகத் தொடர்பு பற்றி ஒரு ஆய்வு அவர் எழுதிக் கொண்டிருப்பதாகக் கேட்டு நான் பெருமித மடைந்தேன்.

உண்மையிலேயே தமிழர்களின் கலைத்திறன் அங்கே அழியாத சிற்பங் களாக உயிர் பெற்றுள்ளன. சுமார் ஐந்து சதுர மைல் அளவில் பரந்து கிடக்கும் அங்கோர் வாட், ஒரு காலத்தில் முழுக்க முழுக்கத் தமிழர்களின் வாசஸ்தலமாகவே இருந்தது என்பதற்கு அங்குள்ள மரங்கள் எல்லாம் சாட்சியமளிக்கின்றன. அவை யாவும் தமிழகத்தில் நாம் பார்க்கின்ற மரங்கள்.

உலகில் வேறெங்கும் காண முடியாத பனை மரத்தை இன்றும் அங்கோர் வாட்டிலே காண முடிகிறது. இந்தியாவில் மலையாளப் பகுதியில் கூட பனை மரத்தைப் பார்க்க முடிவதில்லை. ஆனால் தமிழகத்திற்கே உரித்தான இந்தத் தரு அங்கோர் நாட்டிலே— அங்கோர் வாட்டிலே இருக்கிறது.

தமிழகத்துக் கோவில்களிலே காண முடியாத அளவு விசாலமான சுற்றுப் பிரகாரங்களை அங்கோர் வாட் கோவில்களில் காண முடிகிறது. திருப்பதி செட்டி யார் அவர்களின் கூற்றுப்படி தமிழ் நாட்டின் கோவில் அமைப்பு இலக்கணம் அச்சுக் குலையாமல் அங்கு இருக்கிறது. நான் முன்னே குறிப்பிட்டது போல் கம்போடிய மக்களும் தமிழர்களும், மொழியைத் தவிர்த்து வேறு எந்த விதத்தாலும் வேறு பட்டவர்கள் என்று கூற முடியாது.

நம் நாட்டில் பல்வேறு மொழி பேசும் திராவிடர்களை எப்படி நாம் அந்நியர் களாகக் கருத முடியவில்லையோ, அது போலவே கம்போடியர்களை அந்நியர்களாக என்னால் காணமுடியவில்லை.

அங்கோர் வாட்டை முழுமையாகப் பார்க்க வேண்டுமானால் சுமார் ஒரு வாரகாலமாவது அங்கு தாமதிக்க வேண்டும். என் சுற்றுப் பிரயாணத்திற்கு அளிக்கப்பட்ட காலவரம்பு, அந்நியச் செலாவணி வரம்பு இவைகளைக் கருத்தில் கொண்டு நான் இரண்டு நாட்கள் மட்டுமே அங்கு தாமதிக்க முடிந்தது.

கம்போடியா முடியாட்சிக் குட்பட்ட பின் தங்கிய நாடு. வியட்நாம், கம்போடியா எல்லாம் முன்பு இந்தோ சைனா என்ற பெயரில் பிரஞ்சு நாட்டு ஆதிக் கத்திற்குட் பட்டிருந்து சமீபத்தில் விடுதலை பெற்ற நாடுகளாகும்.

இரண்டாவது உலக மகா யுத்தத்திற்குப் பின் விடுதலை பெற்ற பல நாடு களிலேயும் காணப்படும் குழப்பமான அரசியல், பொருளாதார நிலை இங்கும் இருக்கிறது. ‘இந்த நாடுகளுக் கெல்லாம் அமைதியான, ஒரு வாழ்வைக் கொடுக்க இறைவன் திருவருள் புரிவானாக!’ என்ற பிரார்த்தனையோடு நான் ஜப்பானுக்குப் பயணமானேன்.

# ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன்

**திரு. அடிகளாசிரியர்**

*( கரந்தைப் புலவர் கல்லூரி )*

## தோற்றுவாய்

எட்டுத்தொகை இலக்கியத்துள் ஒன்ருகிய புறநானூற்றிலிருந்து பல வரலாற்றுச் செய்திகளை அறிந்து கொள்கின்ரேம். அவற்றுள் ஒன்று ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் என்பவனுடைய வரலாற்றுச் செய்தியாகும். இவன் வாழ்ந்தது ஒல்லையூர். தந்தை பெயர் ஒல்லையூர் கிழான். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் புறநானூற்றுப் பதிப்பில் பாடப்பட்டோர் வரலாற்றில் "இவன் வீரர்க்கும் பாணர்க்கும் விறலியர்க்கும் பேருதவி புரிந்தோன்; வலிய வீரன்; இவன் இறந்த பிறகு பாடிய புலவர் **குடவாயிற் கீரத்தனுர், தொடித்தலை விழுத்தண்டினுர் (?).** இவன் பெயர் சாத்தனெனவும் வழங்கும்" என்று எழுதியுள்ளார். புறநானூற்றுள் 242, 243 எண்ணுள்ள பாட்டுக்கள் இவனைப்பற்றியனவாகும். முழு வடிவம் இல்லாத 244 ஆம் பாட்டும் இவனைப் பற்றியதாக யிருக்கலாம்.

## கோனுடு

புறநானூற்றால் அறியப்படும் நாடுகளில் ஒன்ருகும் கோனுடு. ***"கோனுடான கடலடையா திலங்கை கொண்ட சோழவள நாட்டு இரண்டுகரை நாட்டு நாடுகள் நகரங்கள் கிராமங்களோம்"*** (புதுக்—601) என்று வரும் கல்வெட்டுப் பகுதியால், இக்கோனுடு சோழவள நாட்டுப் பகுதியாயிருந்த தென்பதையும், இரண்டு கரை நாட்டு நாடுகளையும் நகரங்களையும் கிராமங்களையும் பெற்றிருந்ததென்பதையும் அறிந்துகொள்ளுகிரேம்.

புதுக்கோட்டைச் சீமையில் தென் வெள்ளாறு ஓடுகிறது. இந்த ஆற்றைச் சோழனுட்டிற்குத் தென்னெல்லையாகவும், பாண்டியனுட்டிற்கு வடவெல்லையாகவும் சில பழைய தமிழ்ப் பாடல்கள் குறிக்கின்றன. இவ்வாற்றின் தென்கரைப் பகுதி தென் கோனுடென்றும், வடகரைப் பகுதி வட கோனுடென்றும் வழங்கி வந்தன போலும்.

இவ்விரண்டு கரை நாடுகளும் புதுக்கோட்டைச் சீமையில் திருமய்யம் தாலூக்கா, குளத்தூர் தாலூக்கா என்னும் இரண்டு பகுதியில் இன்று அமைந்துள்ளன. குளத்தூர் தாலூக்காவில் கீரனூருக்குங் கிழக்கேயுள்ள பாப்பா குறிச்சி

முதலான ஊர்கள் **கீழ்கோனாட்டைச்** சார்ந்தவையென்று (புதுக் — 198) கீரனூர்க் கல்வெட்டொன்று குறிக்கின்றது. ஆலங்குடித் தாலுக்கா திருவரங்குளம் கல்வெட்டொன்றில் (புதுக் — 728) **'' இளங்கோனாட்டு அறந்தாங்கி அரசு அச்சம் அறியாதான் ''** என்று வருவது கொண்டு அறந்தாங்கி என்னும் ஊர் இளங்கோனாட்டில் உள்ளதென்று அறிந்து கொள்ளுகிறோம். இங்கே வரும் கீழ்கோனாடு வடகோனாட்டின் கீழைப்பகுதியாக விருக்கலாம். இளங்கோனாடு மேற்குறிப்பிட்ட இரண்டுகரைக் கோனாட்டில் அடங்கியதன்று.

வடகோனாடும் தென்கோனாடும் கோனாடு என்னும் ஒரு பெயராலேயே பண்டு வழங்கி வந்திருக்கலாம். அப்பொழுது அது பாண்டியரைச் சேர்ந்திருந்ததா சோழரைச் சேர்ந்திருந்ததா என்று அறியத்தக்க சான்றுகள் இப்பொழுது எனக்குக் கிடைக்கவில்லை. இராசராசன் I காலத்திலிருந்து இவ்விரு நாடுகளும் கோனாடு என்னும் ஒரு பெயரால் குறிக்கப்பட்டுச் சோழரைச் சேர்ந்த வளநாடாக இருந்து வந்ததென்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. **'' கேரளாந்தக வளநாடாயின கோனாடு ''** (புதுக் — 86) என்றும், **'' கோனாடான இரட்டபாடி கொண்ட சோழவளநாடு ''** (புதுக் — 182) என்றும், **'' கோனாடான கடலடையா திலங்கை கொண்ட சோழ வளநாடு ''** (புதுக் — 302) என்றும் வரும் கல்வெட்டுத் தொடர்களை ஆராய்ந்தால், முதலாம் இராசராசன் காலத்திலிருந்து சோழவள நாட்டுள் சேர்க்கப்பட்டுக் கோனாடென்னும் ஒரு பெயரால் வழங்கி வந்தமையும், அது கேரளாந்தக வளநாடு முதலான பெயர்களை வெவ்வேறு காலத்திற் பெற்றிருந்தமையும், அறியப்படும்.

I இராசராசனின் ஐந்தாம் யாண்டு தொடக்கமான கல்வெட்டுகளிலும் (புதுக் — 83) முதலாம் இராசேந்திர சோழ தேவனுடைய பதினேழாம் யாண்டிறுதியான கல்வெட்டுகளிலும் (புதுக் — 99) இக்கோனாடு 'கேரளாந்தக வளநாடாயின கோனாடு' என்று குறிக்கப்பட்டுள்ளது. முதலாம் இராசராசன் சேரரை வென்று 'கேரளாந்தகன்' என்னும் பட்டத்தைப் பெற்றான் ஆதலால், அப்பெயரைக் கோனாட்டுக்கு வைத்து வழங்கினான் போலும்.

ஈழமும் மதுரையும் கொண்டருளிய ஸ்ரீ ராசாதி ராச தேவன் ஆட்சியாண்டு பதின்மூன்றிலிருந்து இக்கோனாடு இரட்டபாடி கொண்ட சோழவளநாடு (புதுக் – 115) என்று வழங்கத் தொடங்கிற்று. 'இரட்டபாடி கொண்ட சோழன்' என்பது ஸ்ரீ ராசாதி ராச தேவனின் சிறப்புப் பெயர் போலும்.

கோப்பரகேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு இருபத்தொன்பதிலிருந்து இக்கோனாடு 'கோனாடான கடலடையா திலங்கை கொண்ட சோழவளநாடு' என்று குறிக்கப்பட்டு வந்தது. கடலடையா திலங்கை கொண்ட சோழன் என்பது மேற்கண்ட குலோத்துங்கனுக்குள்ள சிறப்புப் பெயர் போலும்.

## கோனாட்டின் பிரிவு

இக்கோனாடு பல பிரிவுகளை உடையதாயிருந்தது. அண்ணல் வாயிற் கூற்றம், உறத்தூர்க் கூற்றம், ஒல்லையூர்க் கூற்றம், கூடலூர் நாடு, குன்றியூர் நாடு, வயலக நாடு இவை யெல்லாம் கோனாட்டின் பிரிவான கூற்றங்களும் நாடுகளுமாகும். இவற்றுள் குன்றியூர் நாடென்பது குன்றுசூழ் நாடென்றும் வழங்கிற்று.

உறத்தூர்க் கூற்றத்தில் ஒரு பகுதி வடகோனுடென்றும் மற்றொரு பகுதி கீழ்கோனுடென்றும் வழங்கப்பட்டன. அண்ணல் வாயிற் கூற்றம் (புதுக்—489) வட கோனுட்டுள் இருந்ததாகவும், ஒல்லையூர்க் கூற்றமும் குன்றுசூழ் நாடும் (புதுக்–249) தென் கோனுட்டுள் இருந்தனவாகவும் அறியப்படுகின்றன.

## ஒல்லையூர்க் கூற்றம்

"முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே" (புறம் 242) என்னும் புறநானூற்றுப் பாடலடியை நோக்கினுல் இவ்வொல்லையூர்க் கூற்றம் பண்டு ஒல்லையூர் நாடென்றும் வழங்கப்பட்டது போலும். புதுக்கோட்டை 541 எண்ணுள்ள கல்வெட்டில் *'ஒல்லையூர் நாட்டுப் பட்டன்'* என்ற பெயர் வருவதும் இக்கருத்தை வலியுறுத்தும். *இவ்வொல்லையூர்க் கூற்றமாகிய ஒல்லையூர் நாட்டில்* ஒல்லையூர், நெருஞ்சிக்குடி, கீழ்தணியம், மேற்றணியம், ஆமாநல்லூரான ஆன்குடி, விண்தக்கியான இராசேந்திர சோழபுரம், காரையூர், இடையாற்றூர், சாத்தனூர், பூவாலைக்குடியாகிய சுந்தர சோழபுரம், சமமங்கல நல்லூரான சோழசிகாமணிச் சதுர்வேதிமங்கலம் முதலான ஊர்கள் அடங்கியிருந்தன.

## ஒல்லையூர்

ஒல்லையூர் நாட்டின் தலைநகராகிய ஒல்லையூர் *'ஒல்லையூர் மங்கலம்'* என்றும் வழங்கப்பட்டது. அது இப்பொழுது *'ஒலியமங்கலம்'* என்று வழங்கப்படுகிறது. மங்கலம் என்ற பெயரை நோக்கினுல் பிற்காலத்தே இவ்வூர் பார்ப்பனருக்கு முற்றூட்டாகக் கொடுக்கப்பட்டது போலும். இவ்வூரில் *வரகுணேசுரர்* என்னும் பெயருடைய சிவன் கோயில் ஒன்றுள்ளது. இக்கோயிலில் பல கல்வெட்டுகள் உள்ளன. புறநானூற்றுள் *ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்ற பெயரால்* ஒரு பாண்டியன் குறிக்கப்படுகின்ருன். இப்பெயருள் 'ஒல்லையூர் தந்த' என்னும் சொற்றொடரில் அமைந்துள்ள வரலாற்றுச் செய்தி அறிஞர்கள் ஆராய்வதற்குரியது.

## ஒல்லையூர் கிழான்

இவ்வாறு சிறந்த *ஒல்லையூரில்* முன்னொரு காலத்தில் *ஒல்லையூர் கிழான்* என்னும் பெயருடையானொருவன் வாழ்ந்து வந்தான். அக்கிழான் அவ்வூர்க்கும் அந்நாட்டுக்கும் உரிய தலைமகனுவான். சிறந்த வீரமும் வள்ளன்மையும் உடையவன். அவனுக்கு ஒரு புதல்வன் தோன்றினுன். அப்புதல்வனுக்குப் *பெருஞ் சாத்தன்* என்று பெயரிட்டுச் சீரும் சிறப்புமாய் வளர்த்து வந்தான். ஒல்லையூர் கிழானுக்கு உற்ற நண்பராய் விளங்கினுர் ஒரு *தண்டமிழ்ப் புலவர்*. அவருக்கும் ஒரு புதல்வன் தோன்றினுன். அப்புதல்வனுக்கு அழகான பெயரை அப்புலவர் வைத்து வழங்கியிருப்பர். ஆனுல் அப்பெயர் பிற்காலத்தவரால் மறக்கப்பட்டு விட்டது. புறநானூற்றுப் பாடல்களைத் தொகுத்த ஆசிரியர் அப்புலவர் புதல்வனுக்கு அப்புதல்வன் பாடிய பாட்டில் உள்ள சொற்றொடரால், **தொடித்தலை விழுத்தண்டினுர்** என்று பெயர் வைத்தழைத்தார்.

## இருபுதல்வரின் இளமை

புரவலன் புதல்வனும் புலவர் புதல்வனும் ஒருங்கு வளர்ந்து வந்தனர். இருவரும் இணைபிரியாத நண்பராய் விளங்கினர். இவர்கள் வாழ்ந்த ஒல்லையூர்

இயற்கை வளத்தால் எழில் பெற்றிருந்தது. அவ்வூரிலுள்ள குழந்தைகளெல்லாம் கவலை என்பதனைச் சிறிதும் அறியாமல் இன்பமே உருவாய் விளையாடிக்கொண்டிருக்கும். விளையாட்டினை மென்மையான விளையாட்டென்றும் வன்மையான விளையாட்டென்றும் இருவகையாகப் பிரிக்கலாம். மகளிரெல்லாம் மென்மையான விளையாட்டுகளையே விளையாடுவார். மைந்தரெல்லாம் வன்மையான விளையாட்டுகளையே விளையாடுவர். ஆனால், மேற்குறிப்பிட்ட இரு புதல்வரும் மகளிருடன்கூடி மென்மையான விளையாட்டுகளையும் விளையாடுவர் ; மைந்தருடன் கூடி வன்மையான விளையாட்டுகளையும் விளையாடுவர்.

இளைய மகளிரெல்லாம் நல்ல களிமண்ணைக் கொண்டு வருவார் ; அம் மண்ணால் அழகான பாவைகளைச் செய்வார் ; பின்னர் பல வண்ணம் பூக்களைப் பறித்து வருவார் ; அப்பாவைக்கு அம்மலர்களைக் கண்ணியாகவும் மாலையாகவும் செய்து புனைந்து விளையாடுவார். அதன் பின் குளிர்ந்த பொய்கையின்கண் புகுந்து குளித்து விளையாடுவார். இரு புதல்வரும் இம்மெல்லியல் மகளிர் குழாத்துடன் கூடி அவர்களுடன் கைகோத்தும் அவர்கள் தழுவினவிடத்தே தாங்களும் தழுவியும் இவ்வாறு மென்மையான விளையாட்டினைச் செய்யுமிடத்தே மென்மையான விளையாட்டினைச் செய்து (தூங்கும் வழித்தூங்கி — புறம் 243) மகிழ்ந்திருப்பர்.

வலிய விளையாட்டினை விளையாடக் கருதிய பொழுது, ஒளிமறைவில்லாத இளைய மைந்தருடன்கூடி, பெரிய மடுவின் ஓரத்திலே உள்ளதும் ஏறுதற்குக் கால் வழுக்கும் வழுவழுப்புடையதுமான உயர்ந்த கிளைகளுடன் கூடிய மருத மரத்தில் மளமளவென்று ஏறி, மடுவின் மேலே அதற்கு அணித்தாய்த் தாழ்ந்துள்ள அம்மரக் கிளைக்கண் சென்று, கரையில் நிற்பவரெல்லாம் வியக்கும்படியும் மடுவில் திரைதோன்றி அதன்கண் துளியெழும்படியும் துடும் என்ற ஓசையுண்டாகக் குதித்து, குதித்து முழுகிய ஒரே முழுக்கில் மடுவின் ஆழத்திற் சென்று, அங்குள்ள மணலைக் கையில் வாரிக்கொண்டுவந்து காட்டி இன்னோரன்ன வலிய விளையாட்டினைச் செய்து மகிழ்ந்திருப்பர். இவ்விருவருக்கும் கல்வியில் விருப்பமில்லாத இளமைக் காலம் இவ்வாறு கழிந்தது.

## இருவரின் பின்னிலை

கற்கும் பருவம் வந்ததும் இருவரும் செந்தமிழ் மொழியைச் சிறக்கக் கற்று வல்லவராயினர். தக்க வயதினை அடைந்தனர். பெருஞ்சாத்தன் ஒல்லையூர் நாட்டினை ஆளும் தலைமையை மேற்கொண்டான். ஒல்லையூர் நாடு பாண்டியனாட்டின் வடவெல்லையிலும் சோழனாட்டின் தென்னெல்லைப் புறத்திலும் இருந்த காரணத்தால் எல்லையைக் காக்க வேண்டிய பொறுப்பு இவனுக்கிருந்தது. அல்லாமலும் இவன் பாண்டிய மன்னன் கீழ் நாட்டுத் தலைவனாக இருந்த காரணத்தால் அம்மன்னனுக்கு உற்றுழி உதவ வேண்டியவனாயுமிருந்தான். இவற்றின் காரணமாக நிகழ்ந்த போர்களில் நம் சாத்தன் தன்னுடன் போரிடவரும் ஆடவர் அனைவரையும் வலிய வேற்படை ஒன்றனையே ஏந்திச் சென்று அவர் அஞ்சும்படி ஆண்மைகாட்டி அவரை வெல்வான். பெருஞ்சாத்தன் பெருவீரனாக விளங்கியதோடல்லாமல் பெருங்கொடையாளியாகவும் விளங்கினான். இவனுடைய பெருஞ்சிறப்புகளையெல்லாம் இவனோடு இளமைப் பருவத்திலிருந்தே இணைபிரியாது வாழ்ந்து வந்த **புலவரின் புதல்வர் (தொடித்தலை விழுத்தண்டினார்)** செவ்விய இனிய தமிழ்ப் பாடல்களால் பாடி மகிழ்வார். இவ்வாறாமுகி வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்த இவரிருவரும் பின்னர் பெரிய

முதுமைப் பருவத்தையடைந்தனர். ஒரு நாள் இருவரும் கூடி அளவளாவிப் பேசிக் கொண்டிருந்த பொழுது தம்முடைய கழிந்த இளமையைப்பற்றிய நினைவும் இப்பொழுது நிகழும் பெரிய முதுமையின் இழிவும் அவர்கள் உள்ளத்திலும் உரையிலும் எழுந்தன. அவர்கள் பின் வருமாறு உரையாடத் தொடங்கினர். நம் இளமைப் பருவத்தே மகளிருடன் கூடி மென்மையான விளையாட்டையும் விளையாடினோம். மைந்தருடன்கூடி வன்மையான விளையாட்டையும் விளையாடினோம். அப்பொழுது வழுக்கல் உடைய பெரிய மருத மரத்தின்மேல் மிக விரைவாக எளிமையாக ஏறிய நாம், இப்பொழுது சமனான தரையின்கண் பூண்கட்டிய நல்ல கோலின் உதவி யில்லாமல் நடக்க முடியாதவரானோமே; அன்று கண்டாரெல்லாம் மருளும்படி மடுவிற் குதித்து மணல் எடுத்து வந்து காட்டிய நாம், எத்தொழிலும் செய்ய முடியாமல் உடல் நடுக்குற்றோமே ; அன்று கணக்கற்ற மொழிகளை மிக விரைவாகத் தங்குதடை யின்றிப் பேசிய நாம் பல இருமல் மிடைந்த சில சொல்லேயே பெருமுச்செழ இன்று பேசும் நிலைக்கு வந்தோமே ; நம்மிடம் அன்றிருந்த இளமை இன்று எங்கேயோ ஓடி ஒளிந்துவிட்டதே; நம்மிடம் அன்றில்லாத முதுமை இவ்வளவு சிறுமைக்கும் இடமாய் இன்று நம்மிடம் குடி கொண்டுள்ளதே ; அதனை நினைக்கும் பொழுது நம்மிருவர்க்கும் இப்பொழுது இரக்கம் உண்டாகின்றதே என்று பேசி முடித்தனர்.

## தொடித்தலை விழுத்தண்டினார் பாட்டு

" பார்ப்பான் கிழமானால் பஞ்சாங்கம் பொய் போமோ, பாம்பு கிழமானால் பல்லில் விஷம் போமோ '' என்று **ஏற்றப் பாட்டுக்காரர்** பாடுவர். அதுபோல் புலவரின் புதல்வர் மிக முதுமை அடைந்திருந்தும் இருவரும் பேசிக்கொண்டிருந்த அக்கருத்துகளையெல்லாம்,

இனிநினைந் திரக்க மாகின்று திணிமணல்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமில் ஆயமொடு
உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்துமணற் கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்று
இருமிடை மிடைந்த சிலசொல்
பெருமூ தாளரேம் ஆகிய எமக்கே. — புறநானூறு — 243

என்ற பாட்டால் பாடினர். அப்பாட்டு, பெருஞ்சாத்தன், தொடித்தலை விழுத் தண்டினார் (புலவர் புதல்வன்) என்னும் இருவருடைய இளமை முதுமை நிகழ்ச்சிகளைக் காட்டும் சொல்லோவியமாய் உள்ளது.

## பெருஞ்சாத்தன் இறப்பு

இவ்வாறு வாழ்ந்திருந்த பெருஞ்சாத்தன் காலவயத்தனாய் இறந்தனன். இவன் மிகமிக முதுமை எய்தியிருந்தும் இவன் இறப்பிற்கு ஒல்லையூர் நாடே இரங்

கிற்று. அங்நாட்டிலுள்ள முதியோரெல்லாம் இரங்கினர்; இது வியப்பில்லை; எப்பொழுதும் இன்பத்திலே நோக்கமுடைய இளையோரும் அவர்தம் பெண்களாகிய வளையோரும் இரங்கினர். புரவலன் இறந்தமையால் இரவலராகிய பாணரும் அவர் தம் மங்கையராகிய பாணிச்சியரும் இரங்கினர்; இந்த நிலையில் **குடவாயிற் கீரத்தனர்** என்னும் புலவர் அங்நாட்டை அடைந்தார். சாத்தன் இறப்பைக் கேட்டார்; மிகவும் வருந்தினர்; அப்பொழுது மாலைக்காலமாக இருந்தது. முல்லைக்கொடி அழகாக மலர்ந்திருந்தது. அவர் அதனைப் பார்த்து 'முல்லையே! சாத்தன் இறந்துபோன துன்பத்துள் மூழ்கியிருக்கும் இங்நாட்டில் உன் மலரைச்சூடுவார் ஒருவரும் இல்லை; நான் பாடுகிற பாட்டைக் கேட்பாரும் இல்லை! நான் பரிசில் பெற்று வாழலாம் என்று கருதிக்கொண்டு இங்நாட்டிற்கு உவந்து வந்தாற்போல, நீயும் இங்நாட் டவர்க்குப் பயன்படலாம் என்று கருதிப் பூத்தனை போலும்! உன் கருத்தும் என் கருத்தும் நிறைவேறவில்லை; நீயுங் கொடியை; நானுங் கொடியன் என்று வருந்திக் கையறு நிலை பாடினர்.

பெருஞ்சாத்தனோடு இணைபிரியாது வாழ்ந்த **தொடித்தலை விழுத்தண்டி னரும்** தம் நண்பன் இறப்பிற்குப் பெரிதும் வருந்தி "பாணர் சென்னியும் வண்டு சென்றூதா" (புறம் — 244) என்ற கையறுநிலைப் பாட்டைப் பாடினர். பாவம்! அப்பாட்டும் காலவெள்ளத்தாற் சிதைந்தது. அப்பாட்டின் சிதைந்த உரைப்பகுதியில் "தான் உறுகின்ற துன்பத்தைக் கலைமேல் வைத்துக் கூறியவாறு" என்னுஞ் சொற்றொடர் மட்டும் தொடித்தலை விழுத்தண்டினரின் நிலையை நமக்கு அறிவுறுத் திக்கொண்டு இன்றளவும் அழியாமல் விளங்குகிறது.

# தமிழ்ப் பண்பாடும் உலகும்

'சோமலெ'

'அமெரிக்காவுக்குச் சென்ற தென்னிந்தியர்கள்' என்ற ஒரு நூல் எனக்கு இந்த வாரத்தில் சென்னையிலுள்ள அமெரிக்கச் செய்தி நிறுவனத்திலிருந்து வந்தது. இதைப் புரட்டிப் பார்த்தபோது, வேறு எந்த மாவட்டத்தையும்விட, கோவை மாவட்டத்திலிருந்து கூடுதலான தமிழர்கள் அமெரிக்காவுக்குச் சென்று வந்திருப்பதை உணர்ந்தேன்.

கல்வி பயிலவும், தொழிற் பயிற்சி பெறவும், பிற நாடுகளின் முன்னேற்றத்தை அவ்வப்போது அறியவும் வெளி நாடுகளுக்குச் செல்லுவதும் அதற்காக ஆங்கிலம் முதலிய பல அயல் மொழிகளில் சிறந்த புலமை பெறுவதும் இன்றியமையாதது. ஆனால் அதே நிலையில் அவ்வாறு செல்லுபவர்கள் தமிழைப் பற்றியும் தமிழ் நாட்டைப்பற்றியும் அடிப்படையான அறிவு பெற்றிருக்க வேண்டும். வெளி நாடுகளுக்குச் செல்லுமுன், தமிழ் நாட்டை விரிவாகச் சுற்றுப் பயணம் செய்வது நன்று.

தமிழில் வெளி வந்துள்ள கலைக் களஞ்சியத்தின் பல பகுதிகள் தமிழரின் வரலாற்றை அறிய உதவும். கனகசபைப் பிள்ளை எழுதிய '1800 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழர்', டாக்டர் ஆல்பிரட் ஸ்குவைசர் ஆக்கிய 'Indian Thought and Development', ஏ. எல். பாஷாம் எழுதிய 'The wonder that was India', திருக்குறளின் ஆங்கில மொழி பெயர்ப்புக்கள் ஆகியவையும் வெளிநாடு செல்ல விரும்பும் தமிழர்க்குப் பெரிதும் பயன்படும்.

தாய்லந்து நாட்டின் மொழியாகிய 'தாய்' மொழியின் எழுத்து வடிவம் தமிழ் எழுத்து வடிவத்துடன் தொடர்புடையது. மலாய், இந்தோனேசிய மொழிகளில் பல நூறு தமிழ்ச் சொற்கள் வழங்குகின்றன. இவற்றை ஓரளவேனும் அறிந்தால், தமிழ் மொழியின் பழமையை வெளி நாட்டாருக்கு விளக்கிச் சொல்லலாம்.

இசைத் தமிழ் அறிவு ஓரளவேனும் இருப்பது நன்று. தமிழ் நாட்டில் சாரங்கி என்ற இசைக் கருவி இருந்ததாக நிபந்தங்களில் சொல்லப்படுகிறது. திருநெல்வேலி நகரில் ஓதுவார் சிலரது இல்லங்களில் ஒருவரும் பயன்படுத்தா வண்ணம் இக்கருவிகள் உள்ளன. தமிழ் நாட்டிலுள்ள இந்த இசைக்கருவி பிரிட்டிஷ் மியூசியத்தில் உள்ளது.

நாட்டுப் பாடல்களில் சுவையானவற்றை ஓசையினிமையோடு பாடிக்காட்டி அவற்றின் பொருளையும் கூறின், எந்நாட்டினரும் கேட்டு மகிழ்வர்.

இத்தாலியில் நடைபெறும் நிகழ்ச்சிகள் பலவற்றில் காந்தாரம் செவ்வழி முதலிய ராகங்களில் இசைக்கருவிகளை இயக்குகிறார்கள்.

நியூயார்க்கு நகரத்து ராக்பெல்லர் சென்டரில் நாள்தோறும் நிகழும் ஆடல் பாடல்களில் சிலப்பதிகாரம் கூறும் ஆய்ச்சியர் குரவை போன்ற நிகழ்ச்சியுண்டு. இசைப் பயிற்சி — தமிழ் இசைப் பயிற்சி — பெற்ற இளைஞர்கள் இவற்றால் பயன் பெறலாம்.

அமெரிக்கா பணம் படைத்த நாடு. பணம் தராத அமைதியைத் தத்துவம் தருகிறது என்பதை அமெரிக்கர்கள் உணருகின்றனர். சைவ சித்தாந்தம், இயற்கை வழிபாடு, கோயில் அமைப்பு முறை, சிற்பங்கள், திருவுருவங்கள், நடராச நடனம் என்பவற்றை விரிவாக அறிய அவர்கள் ஆவலாக உள்ளனர்.

தமிழ்நாட்டுச் சிற்பக்கலையின் உயர்வு கம்போடியா நாட்டு அங்கோர்வாட் கோயிலில் காணப்படுகிறது. தமிழ்நாட்டு நடனக்கலை பாலித்தீவில் முழுமை அடைந்து பாரெல்லாம் புகழப்படுகிறது. அம்மையப்பராக இறைவனை வழிபடும் நமது பழக்கம் சக்திக்குரிய நீலமும், சிவனுக்குரிய செம்மையுமாய் தனித்தனியே ஆனால் ஒரே வட்டத்துள் இடம் பெற்று, சீனர்களுடைய இலச்சினையாய் விளங்கு கிறது. இதைப் பார்க்கும் மேலை நாட்டார் Matter and Energy என்று கூறுகின்றனர். சீனாவில் புத்தமதத்தைப் பரப்பியவர் காஞ்சிபுரத்திலிருந்து சென்ற ஒரு இளவரசர் என்பது தெரிந்தால், இதை வெளிநாட்டார்க்கு விளக்கிச் சொல்லுவது எளிதாகும்.

தமிழ் மொழியின் சிறப்பை வெளிநாட்டாருக்கு அறிவுறுத்துவதும் நம் கடமையாகும். எழுத்து சொல் யாப்பு அணி என்பன எல்லா மொழிகளுக்கும் உண்டு. பொருள் இலக்கணம் தமிழுக்கு மட்டுமே உரியதாகும்.

தமிழ் இலக்கியத்தின் சிறப்பு, பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழ் அறிஞர்கள் நிலநூல் அறிவு பெற்று, குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை, நெய்தல் என்று ஐந்திணைகள் வகுத்துக் கொண்டிருப்பதாகும்.

நுனிப்புல் மேயாது ஆழமாய்ப் படித்து அறிவு வளர்ச்சி பெற்றுத் தமிழன் என்ற உணர்ச்சியுடன் வெளி நாடுகளுக்குச் சென்றால் தமிழ்ப் பண்பாட்டை உலகினர்க்கு உணர்த்தலாம். உலகெங்கும் பரவிக் கிடக்கும் தமிழ்ப் பண்பாட்டை உற்றுநோக்கித் தமிழ் மக்களுக்கும் தெரிவிக்கலாம்.



# இலக்கியம்

ப. கோவிந்தராசு, ஈரோடு.

உலகில் சிறந்துள உயர்மொழி பலவுள்
இலகும் தமிழ்போல் இலக்கியம் உண்டோ?
இலக்கிய மென்பது இலக்கை உடைத்தாய்
இலக்கண நெறிக்கு ஏற்பவே அமைவது.
எள்ளின் ஞகில் எண்ணெயு மில்லை
தெளிபால் இல்லெனில் தீஞ்சுவை நெய்யிலை
எள்ளினின் றெண்ணெய் எடுப்பதைப் போல
சொல்லும் இலக்கியம் தாய்;சேய் இலக்கணம்
ஒல்காப் பெரும்புகழ் உயர்தமிழ் இலக்கணம்
தொல்காப் பியம்ஐ யாயிரம் ஆண்டுமுன்
தோன்றிய தென்ருல், துகள்தீர் சான்றீர்!
நான்தமிழ்ப் பழமையை நவிலுதல் இயலுமோ?
தன்னே ரில்லா இலக்கியத் தனித்திறன்
என்ஞல் செப்பிட எங்ஙனம் இயலும்?
எண்ணத்துள் தோன்றும் எழுச்சி யெல்லாம்
வண்ணச் சொல்லால் வளமார் கருத்தால்
வடித்த வார்த்தை மலர்,பா மாலை
தொடுத்த மாலையில் துலங்கும் செழுந்தேன்
போல்விளங் கும்புத் தம்புதுக் கருத்துகள்
ஆல்போல் அகன்ற அறிஞர் உளத்தில்
தேன்போல் கவிதை துள்ளியே ஓடிடும்.
ஊனில் இனித்திடும் உளத்தில் சுவைத்திடும்
கற்பனை என்னும் கவின்சேர் வானில்
அற்புதப் பாட்டிசை அருங்குயி லென்னப்
பற்பல புதுமையைப் பாங்குறத் தெளிந்து
நற்பொருள் கூட்டி நயத்துடன் உரைப்பான்.
கற்போர் நெஞ்சைக் களிக்கச் செய்து
அற்புதக் கவிதையை அகத்தினில் உணர்த்தி
நற்பெருந் தவமும் நனிமிகு காதலும்
விற்பெரு தடந்தோள் வீரமும் காட்டிப்
பெருமை முழுதும் பிறழா துரைத்தே
அருமை இலக்கியம் ஆக்குவான் புலவன்!
மானின் விழியை மதுநிகர் தமிழைத்
தேனின் சுவையைத் தென்றலின் இனிமையை

வானில் உலவிடும் வளர்மதி அழகை
விண்ணில் மின்னிடும் வியத்தகு மினுக்கை
நீலக் கடலின் நிமிர்திரை ஓசையைக்
கோல இயற்கை கொஞ்சிடும் மலையைக்
கானம் பாடிடும் வானம் பாடியை
மோன முனிவர்தம் முழுஅருள் நிட்டையைக்
காலைக் கதிரவன் கவின்பெறு காட்சியை
மாலை அழகின் மயக்குறு மாட்சியைக்
கூவிடும் புள்ளினக் குரல்களின் ஓசையைத்
தாவிப் படர்ந்திடும் தவழ்கொடி அசைவைப்
பூவின் அழகுசேர் பொலிவைப், புனலைக்
காவின் எழில்மிகு காட்சியின் அழகை
இழுமென விழுந்திடும் இனிய அருவியை
ஒழுகிப் பரந்து ஓடிடும் நதியை
மாதரார் கற்பை மழலையர் சிரிப்பைத்
தீதிலார் நட்பை திறமிகு படைப்பைச்
சிற்ப நுட்பம் சித்திர எழிலினை
அற்புதப் படைப்பாம் அவனருள் தன்மையைப்
பாலையின் கொடுமையைப் பசுமையின் செழுமையைச்
சோலையின் அழகெலாம் சொல்லிடும் இலக்கியம்!
சாதலில் காதலின் செம்மையைச் சாற்றித்
தீதிலா வீரத் திறத்தைப் போற்றும்.
அகப்பொருள் புறப்பொருள் அழகுடை இவைகளைச்
செகத்தினில் படைத்தது செந்தமிழ் இலக்கியம்!
யாதும் ஊரென யாவரும் உறவெனக்
கோதிலா வாழ்வின் கொள்கையைப் பேசும்.
முடிசார் மன்னர்கள் முடிந்த முடிவினை
வடித்த தத்துவ வகையாய் விளக்கும்.
அடிமையாய் இந்த அவனியில் வாழோம்
அடிமை யொழித்து அஞ்சா நெஞ்சொடு
மிடிமைசேர் துன்பினில் மடியா மாண்பில்
குடிமையி லுயர்ந்து வாழவே கூறும்!
முன்னர் நாளில் முறையே ஆண்டதும்
பின்னர் நாளின் பெற்றயின் தன்மையும்
கோலக் கொள்கையின் குணமது தோன்ற
ஞாலக் கதையெலாம் நன்ருய்க் கூறும்.
பண்டு வாழ்ந்தனர் பண்புட னேகடல்
உண்டகா ரணத்தால் உணர முடியாத
தண்டமிழ் மக்களின் தகைசால் வளமெலாம்
ஒண்டமிழ் மக்களுக் கியம்பும் இலக்கியம்!
குன்ரு வளங்களின் குணத்தைப் போற்றும்
குணமார் கொள்கையின் புகழினைப் பாடும்.
என்றும் அழியா நீதியை நாட்டும்
ஏற்றமுள் நேர்மையின் திறத்தைக் கூறும்.

மன்றுள் நடம்புரி மலரவன், மாலவன்
மலர்புரை அடிகளை வாழ்த்திப் புகழும்.
வாழ்வளி பெண்மையை விதந்துபா ராட்டும்
தாழ்விலா உளத்தன் மானம் காட்டும்.
பாழ்பட்டு வீழ்ந்த பகையை ஒட்டும்
வாழ்வாங்கு வாழ்ந்திட இலக்கியம் நாட்டும்
குறையுடை மனிதனைக் குணஞ்சேர் மனிதனாய்
நிறைமொழி மாந்தராய் நேர்மையைக் கூட்டும்.
வாளெடுக் கஞ்சும் கோழையை வீரனாய்த்
தோள்தட் டிப்பணி புரிதொண் டனாக்கும்.
அகங்கனி அன்பு நிறைபக்த னாக்கும்
முகமலர வழங்கும் வள்ளலும் ஆக்கும்.
இலக்கியச் சோலையில் இனிமையாய்ப் பூப்பது
துலக்கமாய் நிற்கும் தூய பூக்கள்,
கலங்கு மனத்தில் களிப்பினைத் தருவன.
விளக்கமாய் என்றும் ஒளிவீசு பூக்கள்!
மலருடைக் காட்டின் மணமிகு பூக்கள்!
வளர்சமு கத்தின் வண்ணப் பூக்கள்!
வாடா அழகு முல்லை, மல்லிகை,
சூடா நறுமலர்! சுவைக்கும் செந்தேன்!
தேடாச் செல்வம்! தெவிட்டா அமுது!
நாடின கூட்டும், நலமெலாங் காட்டும்!
செம்மைவாழ் வளிக்கும்; சிறப்பினைத் தந்திடும்.
நம்மைவாழ் வாங்கு வாழச் செய்யும்.
மும்மைக்கு வித்தாம் மூலஅறங் கூறும்
இம்மைநாள் பேற்றை இனிக்கவே இயம்பும்.
இமிழ்கட லுலகிலெந் நாளும்
அமிழ்தாம் தமிழில் கற்றக மகிழ்வமே!



# வள்ளுவர் கண்ட துறவறம்

உ. பழனி, எம். ஏ., பி. ஒ. எல்.,
( தமிழ் விரிவுரையாளர், தமிழ் ஆராய்ச்சித்துறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம் )

உலகத்தில் வாழும் வாழ்க்கை மனையாளொடு கூடி வாழ்வதும், மனையாளையும் மக்களையுந் துறந்து துறவுநிலை மேற்கொண்டு வாழ்வதும் என இருவகைப் படும். மனையாளொடு வாழும் வாழ்க்கை இல்லறமெனப்படும். மனையாளையும் மக்களையும் துறந்து வாழும் வாழ்க்கை துறவறம் எனப்படும்.

நோயுற்ற ஒருவனை நோக்கி மருத்துவர், நன்றாக உணவும் உண்ணலாம்; அதனுடன் இந்த இனிப்பு மருந்தையும் உட்கொள்ள வேண்டும் என்று சொன்னால் அவன் வருந்துவானோ? நோய்க்கு மருந்து ஒரு பத்தியமும் இல்லாதது. அதனுடன் மருந்தும் இனிதாக இருக்கிறது என்று மகிழ்வான். அவ்வாறே இல்லறம், தானும் பசியின்றி உண்ணவும் பிறரது பசியை நீக்கவும் துணை செய்வது. ஐம்புல இன்பங்களையும் ஆரத் துய்த்து இன்புறுவதற்கு இடனாக இருப்பது. அதனால் இல்லறத்தை மேற்கொண்டு வாழ்தல் யாவர்க்கும் எளிது. ஏனைத் துறவறமோ உப்பில்லாப் பத்தியத்தோடு கசப்பு மருந்தையும் உட்கொள்ளுதல் எவ்வளவு கடினமோ அவ்வளவு கடினமானது. காரணம் துறவறம், மனத்தையும் பொறிகளையும் அடக்கி வாழ்தலோடு பெண் இன்பத்தையும் அறவே துறந்து வாழ வேண்டியதாக இருக்கிறது. ஆதலின் துறவறம் மேற்கொண்டு அந்நெறியில் வழுவாது வாழ்தல் மிகக் கடினம். ஆதலின் வள்ளுவர்,

" அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று " (குறள், 49)

என்றார். இதன் பொருள், அறம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது இல் வாழ்க்கையே. மற்றத் துறவறமும் பிறரால் பழிக்கப்படும் குற்றங்கள் இல்லாத விடத்து அந்த இல்லறத்தோடு ஒப்பாக வைத்து எண்ணப்படும் என்பதாகும்.

இல்லறத்தார்க்குரிய ஒழுக்கங்களை எல்லாம் இருபது அதிகாரங்களில் கூறியவர், துறவறத்தார்க்குரிய ஒழுக்கங்களைப் பதின்மூன்று அதிகாரங்களில் கூறுகின்றார்.

ஊழ், மக்களாய்ப் பிறந்தார் யாவர்க்கும் உரியது. மக்கள், தாம் செய்த நல்வினை தீவினைகளின் பயனைத் தவறாது நுகர்வர். அவ்வாறு நுகரும் நெறியே ஊழ் என்று சொல்லப்படுகிறது. துன்பத்தால் வருந்தும் ஒருவரை நோக்கி, " ஐயா

ஏன் வருந்துகிறீர்கள் ? " என்று கேட்கும்போது, " இஃது என் ஊழ்வினைப் பயன் " என்று சொல்லக் கேட்கிறோம். ஊழ் என்னும் சொல் நெறி அல்லது முறை என்னும் பொருளைத் தரும். ஒருவன் செய்யும் நல்வினை தீவினைகளின் பயன், நிழல் அவனை விடாது தொடர்தல் போலத் தொடர்ந்து வந்து செய்தவனைச் சாரும். இவ்வாறு செய்த வினைகளுக்கேற்பப் பயனும் முறையே வந்து அடைகின்றபடியால் அஃது ஊழ் எனப்பட்டது. ஊழ், தெய்வம், பால், விதி என்பன வெல்லாம் ஒரு பொருட் சொற்களே. இந்த ஊழ், இல்லறத்தார்க்கும் துறவறத்தார்க்கும் உரிய தாதலின் இதனைத் துறவறவியல் கூறி முடித்தவுடன் கூறுகின்றார்.

இல்லறத்தார்க்குச் சிறப்பாக வேண்டிய அறங்களை இல்லறத்திலும், துறவறத்தார்க்குச் சிறப்பாக வேண்டிய அறங்களைத் துறவறத்திலும் கூறியுள்ளார். இல்லறத்தாருக்கு அன்புடைமை வேண்டுமாதலின் அன்புடைமை என்னும் அதிகாரத்தை இல்லறத்தில் வைத்தார். அது போலத் துறவறத்தார்க்கு இன்றியமையாதது அருளுடைமையாதலின் அருளுடைமையைத் துறவறத்தில் வைத்தார். தொடர்புடையார்மாட்டுச் செல்வது அன்பு. இல்லறத்தில் இருப்பவன் தன்னோடு தொடர்புடையார்மாட்டு அன்பு செலுத்துகின்றான். தொடர்புடையார் மாட்டு அன்பு செய்த பழக்கத்தால் தொடர்பு இல்லாதார் மாட்டும் அன்பு ஏற்படுகின்றது. தொடர்பு இல்லாதாரிடத்தும் செல்லும் அன்பின் முதிர்ந்த நிலையே அருள் எனப்படும். இதனையே " அருளென்னும் அன்புஈன் குழவி " (குறள், 757) என்றார். அன்பினால் உண்டாகும் அருள் என்னும் குழந்தை என்பது இதன் பொருள். அன்பு தாய் ; அருள் குழந்தை. இல்லறத்தில் அன்புடையரா யிருந்தவர் துறவறம் மேற்கொள்ளும் போது அருளுடையராகின்றார்.

இல்லறத்தான் பிறன் மனைவியை விரும்பாத மனத்திண்மை உடையவனாக இருத்தல் வேண்டும். இதனைப் " பிறனில் விழையாமை " என்னும் ஓர் அதிகாரம் வகுத்துப் பிறன் மனையாளை விரும்பாதவனே உலகத்தில் எல்லா நன்மைகளையும் அடைதற்கு உரியவன் என்று கூறுகின்றார். துறவுநிலையில் உள்ளவர்கள் பெண்ணின்பத்தைக் கனவிலும் நினைக்காதவர்களாய் இருத்தல் வேண்டும். ஆதலின் அதனைக் ' கூடா ஒழுக்கம் ' என்னும் தலைப்பில் துறவிகள்பால் பெண்களைக் கள்ளத் தன்மையில் நேசித்தொழுகும் தன்மை இருக்கக் கூடாதெனக் கண்டிக்கிறார். கூடா ஒழுக்கம் என்பது பொருந்தாத ஒழுக்கம். அஃதாவது துறவறத்திற்குப் பொருந்தாத ஒழுக்கம் என்பது பொருள்.

இல்லறத்தான் பிறன் பொருளை விரும்பக் கூடாது என்பதை இல்லறவியலில் " வெஃகாமை " என்னும் அதிகாரத்தில் வலியுறுத்திய திருவள்ளுவர், துறவறத்திலுள்ளவர்கள் பிறன் பொருளைக் கள்ளத்தனமாகக் கொள்ளுதற்கு நினைத்தலும் கூடாது என்பதைக் ' கள்ளாமை ' என்னும் அதிகாரத்தில் கூறுகின்றார். கள்ளாமை என்பது கள்ளத்தனத்தினால் பிறன் பொருளைக் கொள்ள நினையாமை எனப் பொருள் படும். துறவறத்திலுள்ளவர்கள் எல்லாப் பற்றுக்களையும் துறந்து சென்றவர்களாதலின் அவர்கள் மனம் மீண்டும் பொருளைப் பற்றி எண்ணுதலும், அதனைக் கள்ளத்தனமாகக் கொள்ளக் கருதலும் தீயன அல்லவா ? ஆதலின் இல்லறத்தான் பிறன் பொருளை விரும்பக் கூடாதெனவும், துறவறத்தான் பிறன் பொருளைக் கள்ளத்தனமாகக் கொள்ள நினைக்கவே கூடாதெனவும் கூறுகின்றார்.

இல்லறத்தானுக்குப் பொறையுடைமை வேண்டும் எனக் கூறிய வள்ளுவர், துறவறத்தார்க்கு வெகுளாமை வேண்டும் எனக் கூறுகிறார். வெகுளாமை என்பது கோபங் கொள்ளாமை எனப் பொருள்படும். ஒருவனுக்குக் கோபம், ஒருவன் செய்யத் தகாதன தன்மாட்டுச் செய்தவிடத்து உண்டாவதாகும். அத்தகைய கோபம் இல்லறத்தானுக்கு இடையிடையே வருவது இயல்பு. கோபம் சிறிதளவு இல்லறத்தானுக்குத் தேவைப்படுவதே. ஆனாலும் கோபப்பட்டுத் தவறான காரியங்களைச் செய்து விடக்கூடாது என்பதற்காகவே இல்லறத்தானுக்குப் பொறையுடைமை வேண்டும் என்று வலியுறுத்துகின்றார். ஆனால் "குணம் என்னும் குன்றேறி" (குறள், 29) நின்ற துறவிக்கு எவ்வாற்றானும் கோபமே உண்டாகக் கூடாது என்பதற்காக 'வெகுளாமை' என்ற அதிகாரத்தைத் துறவறத்தில் வைத்தார். இவ்வாறு வள்ளுவர் துறவிக்குக் கோபங் கொள்ளுதல் அறவே கூடாது என்று கூறியிருக்கவும் தொட்டதற்கெல்லாம் கோபங் கொண்ட துருவாசரையும் விம்புக்காக வெகுண்ட விசுவாமித்திரரையும் காண்கின்றோம். துறவிகள் எல்லாவற்றையும் துறந்தவர்கள் அல்லது முனிந்தவர்கள். ஆகையினாலே அவர்கள் முனிவர்கள் எனப் படுகிறார்கள். முனிதல் என்பதற்கு வெறுத்து நீக்குதல் என்னும் பொருளே யன்றிக் கோபங் கொள்ளுதல் எனவும் பொருளுண்டு. முனிவர் என்பதற்குக் கோபங் கொள்ளுபவர் என்னும் பொருளைத்தான் விசுவாமித்திரர், துருவாசர் போன்ற முனிவர்கள் மெய்ப்பிக்கிறார்கள். தொட்டதற் கெல்லாம் சாபங் கொடுத்துச் சிறிது கோபம் ஆறியபின் சாப விடையும் கொடுக்கிறார்கள்.

வள்ளுவர் இத்தகையவர்களைத் தாம் கூறிய துறவியர் பகுதியில் சேர்க்க மாட்டார் ; சேர்க்க விரும்பவும் மாட்டார்.

இல்லறத்தாருக்குச் சிறப்பான அறங்கள் இல்லறத்திலும், துறவறத்தாருக்குச் சிறப்பான அறங்கள் துறவறத்திலும் கூறப்பட்டுள்ளன. அதனால் இல்லறத்தாருக்குச் சொல்லிய அறங்களெல்லாம் துறவறத்தாருக்கு வேண்டுவன அல்ல என்றும், துறவறத்தார்க்குச் சொல்லிய அறங்களெல்லாம் இல்லறத்தார்க்கு வேண்டுவன அல்ல என்றும் கருதுதல் கூடாது. எடுத்துக்காட்டாக, இல்லறத்தார்க்கு இனியவை கூறல், அடக்கம் உடைமை, ஒழுக்கம் உடைமை, பொறையுடைமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, தீவினையச்சம் முதலியன கூறப்பட்டுள்ளன. இவையெல்லாம் துறவறத்தார்க்கு வேண்டுவன அல்ல என்பது கருத்தா? இல்லை. இவை துறவறத்தார்க்கும் வேண்டியனவே. இல்லறத்தார்க்கே சிறப்பாக உரியன இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட் பேறு முதலியன. இவை துறவறத்தார்க்கு உரியன அல்ல. இவ்வாறே துறவறத்தார்க்குக் கூறப்பட்ட அறங்களுள் துறவறத்தார்க்கே சிறப்பாக உரியனவும், துறவறத்தார்க்கே யன்றி இல்லறத்தார்க்கும் பொருந்துவனவும் உள. வாய்மை, இன்னா செய்யாமை, கொல்லாமை ஆகிய அறங்கள் துறவறத்தில் கூறப்பட்டன ; ஆயினும் இவ் அறங்கள் இல்லறத்தார்க்கும் உரியனவே. துறவறத்தார்க்கே சிறப்பாக உரியன தவம், நிலையாமை, துறவு முதலியன. இவ்வாறு இல்லறத்திலும் துறவறத்திலும் கூறப்பட்டுள்ள அறங்களைப் பகுத்துணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

செல்வங்கள் பலவகைப்படும். நாம் மதித்துப் போற்றிக் கொள்ளப்படுவனவாக உள்ளன வெல்லாம் செல்வங்களே யாகும். ஆனால் துறந்தார்க்கு எது செல்வம்? துறவறத்திலுள்ளவர்தாம் எல்லாப் பொருள்களையும் துறந்து சென்றவர்

களல்லரோ? வள்ளுவர் அவர்களுக்கும் ஒரு செல்வம் உண்டென்று கூறுகிருர். அஃதென்ன வென்ருல் அருட் செல்வம் என்று கூறுகிருர். அதுதான் செல்வங் களெல்லாவற்றுள்ளும் சிறந்த செல்வமாகும். ஏனைய பொருட் செல்வங்களெல்லாம் நல்லவர்கள் அல்லாதவர்களிடமும் உள்ளன வாதலின் அவை அருட் செல்வம் போல் சிறந்தன ஆகா.

"அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட் செல்வம்
பூரியார் கண்ணும் உள" (குறள், 241)

என்னும் குறளைக் காண்க.

நல்ல வழியில் நடப்பவர்களும் அருளுள்ளம் படைத்தவர்களும்கூட வாழ்க் கையில் துன்புற நேர்ந்தபோது நல்லவர்களுக்கு எங்கே கால மிருக்கிறது? கொடிய வர்கள்தாம் எல்லாக் கொடுமைகளினின்றும் தப்பித்துக் கொண்டு மகிழ்ச்சியாக வாழ்கிருர்கள். நல்லவன்தான் நலிந்து போகின்ருன். நல்லவன் வாழ்கின்ருனு என்று மனம் நொந்து பேசுகின்ருர்கள். அப்போது, வாழ்வில் எத்தகைய இன்னல் வரினும் நாம் தவறு செய்யாமல் அருளுடையராய் வாழ்தல் வேண்டும் என்பதில் உறுதி கொண்ட பெரியோர்கள், "அப்பா! வீணுகத் துன்பப்படாதே; நல்லவன் வாழ்வான்" என்று உறுதி கூறுகிருர்கள். நன்மை செய்தால் நன்மை விளையும். ஆதலின் எல்லா உயிர்களிடத்தும் அருளுடையராய் வாழ்தல் வேண்டும் என்னும் உறுதியான கொள்கை யில்லாதவர்கள் துன்பத்தால் மனம் நொந்து பேசுகிற வரோடு சேர்ந்து கொண்டு, 'ஆமாம், நீ சொல்வது சரிதான்; இது நல்லதற்குக் கால மன்று; நல்லவன் வாழ்வான் என்பதில் எனக்கு நம்பிக்கையில்லை' என்று கூறு வார்கள். வள்ளுவர் தம் காலத்தில் எவ்வளவோ சான்ருேர்களைக் கண்டவர். சான்ருேர்களுடைய இயல்புகளை எல்லாம் கண்ணுல் கண்டு கண்டு சான்ருேர்க்கு இலக்கணங்கள் இவை என வகுத்தவர். அத்தகைய பெரியார் காலத்தும், அருளு டையவர்கள் சிலர் துன்பம் வந்தபோது மனம் நைந்து வருந்தினர். அது கண்ட வள்ளுவர், அருளுடையார்க்கு என்றுமே துன்பம் வருவதில்லை. அதற்கு இவ்வுலகமே சான்று என்பதனை, "அல்லல் அருளாள்வார்க் கில்லை வளிவழங்கு, மல்லல்மா ஞாலம் கரி" (குறள், 245) என்னும் குறட்பாவால் அழுத்தம் திருத்தமாகக் கூறுகின்ருர்.

பலருக்கு அருளுடைமையை எப்படி வளர்த்துக் கொள்வது என்பது தெரி யாது. 'அருளுடைமை வேண்டும், அருளுடைமை வேண்டும்' என்று பலகால் சொல்லுதலால் பயனில்லை. அருளுடைமை எவ்வாறு அடைதல் இயலும் என்ப தையும் கூறுதல் வேண்டும். நம்மைக் காட்டிலும் வலியவன் ஒருவன் நம்மைக் கொல்லவரும்போது நாம் எவ்வாறு நடுங்குவோமோ அவ்வாறே நாம் பிற உயிரைக் கொல்ல முற்படும்போது அவைகளும் நம்மைக் கண்டு நடுங்கும் என்று எண்ணி ஞல் போதும். உடனே அருள் பிறக்கும். அதுவே அருளுடையனுதற்கு வழி என்று கூறுகின்ருர். "வலியார் முன் தன்னை நினைக்கதான் தன்னின், மெலியார் மேல் செல்லுமிடத்து" (குறள், 250) என்னும் குறளினை நோக்குக. பிறருக்குத் துன்பமுண்டாக்கச் செலலும் போதெல்லாம் இக்குறட் பாவினை நினைத்தல் நன்று.

ஒருயிரைக் கொல்லாமையும் கொன்றஃதைத் தின்னுமையும் அருளுடை யார்க்குச் சிறந்த அடையாளங்களாகும். பௌத்த சமயத்தைச் சார்ந்தவர்கள் ஒருயிரை நாம் கொல்லக்கூடாது என்றும், ஆனுல் அவ் உயிர் பிறரால் கொல்லப்

யட்டதாயின் தின்னலாம் என்றும், அது பாவமாகாது என்றும் கூறினர். வள்ளுவர் பௌத்த சமயத்தாருடைய அக்கருத்தை மறுத்துக் கொல்லுதலும் கூடாது; பிறர் கொன்றதைத் தின்னுதலும் கூடாது என்பதைக் " கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி, எல்லா உயிரும் தொழும் " (குறள், 260) என்னும் குறட் பாவால் கூறுகின்றுர். திருவள்ளுவர் பௌத்தர் அல்லர் என்பவர் இக்குறளையே மேற்கோளாகக் காட்டுவர்.

துறவறத்தார் மேற்கொள்ள வேண்டியது தவம். காட்டிலுறைந்தும் காய்கனி தின்றும் காலம் கழிப்பதைச் சிலர் தவமென்பர். தொல்காப்பியரும் துறவியர் எண் வகை இயல்பினை உடையராதல் வேண்டும் என்பதை " நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும் " (தொல்காப்பியம்—புறத்திணையியல்—சூத்.16) என்பதனுல் குறிப்பிட்டார். அந்த எண் வகை இயல்பாவன, நீரில் பலகால் குளித்தலும், வெறு நிலத்தில் படுத்தலும், தோலை ஆடையாக உடுத்தலும், சடைமுடி பூணலும், தீ வளர்த்தலும், ஊரினுள் வாராமையும், கானகத்தில் உள்ள காய், கனி, கிழங்கு ஆகியவற்றை உண்ணுதலும், தெய்வத்தை வழிபடுதலும் ஆகியவையாம். வள்ளுவர் தவத்தின் இலக்கணத்தை விளக்கும்போது இந்த இலக்கணங்களைக் கூறவில்லை. எல்லாத் துறவியரையும் காட்டிலேயே பார்க்க முடியுமா? நாட்டிலேயும் பல துறவியர் உளர். பற்றில்லா மனப்பான்மை தானே துறவியர்க்கு மிகமிக வேண்டற்பாலது. நாட்டிலிருந்தாலென்ன? காட்டிலிருந்தாலென்ன? காட்டிற்குச் சென்றவுடனே பொருள் இன்பக் காதல் பறந்துவிடுமா? தவம் செய்தற்குத் தனி யிடம் என்று எண்ணிச்சென்ற காட்டில் காதலை மேற்கொண்ட கடுந் துறவியரையும் காண்கிறோம். விசுவாமித்திரர் காட்டில்தான் கடுந்தவம் செய்தார்; விழித்துப் பார்த்தார்; மேனி மினுக்கிய மேனகையைக் கண்டார்; மேனகையின்மேல் காதல் கொண்டார்; சகுந்தலையைப் பெற்றுர். இப்படித் துறவியர் கதைகள் பல காட்டில் செல்வதால் மட்டும் காதலைத் துறக்க முடியாது என்பதைக் காட்டுகின்றன. இதனுல் வள்ளுவர், தவம் என்பதற்கு இலக்கணம் கூறுமிடத்து எங்நாட்டுத் துறவியர்க்கும், நாட்டிலுள்ள துறவியர்க்கும், காட்டிலுள்ள துறவியர்க்கும் பொருந்தும்படி கூறுகிறுர். தவம் என்பது தமக்கு வரும் துன்பத்தைப் பொறுத்தலும், பிற உயிர்க்குத் தீமை செய்யாமையும் ஆம். வள்ளுவர் கூறும் அறம், பிறர் கூறும் அறத்தினும் எவ்வளவு பொதுமை உடையதாகவும் யாவரும் ஒத்துக் கொள்ளும் தன்மையதாகவும் இருக்கின்ற தென்பதனை அறிவோர், வள்ளுவர் அறம் கூறும் முறையை வியந்து போற்றுவர்.

துறவு பூண்ட சிலர் மனவலிமை இன்மையால் தாம் துறந்துவந்த பெண்ணின்பத்தை விரும்பித் தகாத செயல்களில் ஈடுபடுவாராயினர். அப்படிப்பட்டவர் சிலர் தாம் துறவொழுக்கத்தை மேற்கொண்டுள்ளமையாலும் தமக்குள்ள பெருமையினுலும் தம்மை உலகத்தார் ஐயுருர் எனவும், தம் கூடா ஒழுக்கம் மறைக்கப்படும் எனவும் கருதினர். அவர்களை நோக்கி வள்ளுவர் பெரிய நிலையிலுள்ளவர்கள் சிலர் தம்முடைய தகாத செயல்களைத் தம் வன்மையினுல் மறைத்துவிடுதலும் கூடும்; ஆனுலும் அவர்கள் செய்த தீய ஒழுக்கங்களை அவர்களுடைய நெஞ்சு அறியுமன்றோ? ஆகையால் அவர்களுடைய நெஞ்சிலுள்ள ஐம்பூதங்களே அவர்களுடைய ஒழுக்கத்தைக் கண்டு சிரிக்கும் என்கிறுர். " நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும் அறிபவர், நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை யாகலின் " என்பது கலித்தொகை (125). " தன்னெஞ்சே தன்னைச் சுடும் " என்பதும் இக்கருத்தையே வலியுறுத்தும்.

துறவு நிலை பூண்டவர்கள் மகளிரை விரும்பி ஒழுகுதல், பசுவானது புலித்தோலைப் போர்த்துக் கொண்டு வயலில் உள்ள நெற்பயிரை மேய்ந்தாற் போல் வது என்கிறார் வள்ளுவர். பசுவானது புலித்தோலைப் போர்த்துக் கொண்டு நெற் பயிரை மேயும்போது நிலத்திற்குரியவன் காண்கிறான். அவன் பயந்தவனாக இருந் தால் 'ஐயோ புலியன்றோ மேய்கிறது' பயிர் போகிறதென்று புலியைத் துரத்தினால் உயிர் போகுமே, ஆதலின் பயிர் போனாலும் போகட்டும், உயிர் போகக் கூடாது என்று அஞ்சி இருந்துவிடுவான். சிறிது அறிவுள்ளவனாய் இருந்தால் 'புலி பசித் தாலும் புல்லைத் தின்னாது'; ஆதலின் இதனால் நமக்குப் பயிர் அழிவு இல்லை என்று எண்ணி ஒன்றும் செய்யாது இருந்துவிடுவான். அதுபோலவே துறவியர் பெண் களை வஞ்சகத்தால் நேசித்தொழுகும்போது பயந்தவர்களாக இருப்பின் அவர்கள் என்ன சொல்வார்கள் என்றால் ஐயோ அத்துறவியைப் பார்த்து அப்படிச் சொல்ல லாமா? அவர் சபித்து விடுவாரே என்று அஞ்சிக்கூறுவர். ஆராய்ந்தறியும் அறி வுடையவராயின் 'அத்துறவி அத்தகைய கூடாத செயலைச் செய்வாரா? ஒரு பொழு தும் செய்யமாட்டார்' என்றே அத்துறவியினுடைய ஒழுக்கத்தில் ஐயப்படாம லிருந்துவிடுவர். அஞ்சியவரையும் அறிவுடையவரையும் ஏய்க்கும் அத்துறவியர் புலித்தோல் போர்த்த பசுவை ஒப்பர். துறவை மேற்கொண்டுள்ள துறவிக்குப் பசு உவமை. அவர் மேற்கொண்டுள்ள துறவற வேடத்திற்குப் புலித்தோல் உவமை. பசு புலித் தோலைப் போர்த்துக் கொண்டு பயிரை மேய்ந்தாற் போல் துறவியரும் தவ வேடத்தை மேற்கொண்டு மகளிரை வஞ்சித்தொழுகுகின்றனர். இத்தகைய கூடா ஒழுக்கத்தைக் கண்ட வள்ளுவர், அத்தகைய துறவியர் நிலை கண்டு வருந் தினார். இவ்வாறு துறவறத்தில் வந்து ஏலாத ஒழுக்கத்தை மேற்கொள்ளுவதை விட இல்லறத்திலே இருந்து ஒழுங்காக இன்பந் துய்த்து வாழலாமே! இவர்களை யார் துறவறத்துக்கு அழைத்தது? இத்தகைய மனவலிமை இல்லாதவர்கள் துறவறம் மேற்கொண்டது பெரும் பிழையாயிற்றே! இவர்கள் மேற்கொண்ட துறவறத்தால் பெருமை மிக்க துறவறம் இழிநிலை எய்துகின்றதே. துறவியர்க்கும் பெரும் பழி ஏற் படுகிறதே என்று வருந்தினார். காமத்தைத் துறந்து வாழும் மன வலிமை இல்லாத வர்களை நோக்கி "மதிக்கத்தக்க துறவு வேடத்தைப் பூண்டு மகளிரை வஞ்சிக்காதீர் கள். அப்படி வஞ்சிப்பது பசுவானது புலித்தோலைப் போர்த்துக் கொண்டு நெற் பயிரை மேய்ந்தாற் போலும்" என்று அறிவுறுத்துகிறார். இவர்கள் துறவு நிலையில் மறைந்து நின்று மகளிரை வஞ்சித்தொழுகுதல் வேட்டுவன் புதரில் மறைந்து நின்று பறவைகளை வஞ்சித்துப் பிடிப்பதை ஒக்கும் என்று கூறுகிறார்.

இத்தகைய வஞ்சமுடைய துறவியர்க்குக் குன்றிமணியை உவமையாகக் கூறியுள்ளார். குன்றிமணி புறத்தே சிவந்திருக்கும்; மூக்கில் மட்டும் கறுத்திருக்கும். அதுபோல வஞ்சித் தொழுகும் துறவியர் வேடத்தால் காவியுடை உடுத்துச் செந்நிற மாகக் காட்சியளிப்பர். ஆனால் உள்ளத்திலோ யாரை எப்போது கூடி இன்பம் பெறலாம் என்று எண்ணியிருப்பர்! ஆதலின் உள்ளம் குற்றத்தால் கருமை உடையதாக இருக்கிறது. ஆகவே மக்களை நோக்கி, "வேடத்தைக் கண்டு ஏமாந்து விடாதீர்கள். உலகம் வேடத்தைக் காட்டி வஞ்சிக்கும் இயல்பினது. ஆதலின் மக்க ளுடைய செயலைக் கண்டு அவர் நல்லர், தீயர் என்ற முடிவுக்கு வரவேண்டுமே யல்லாமல் அவர்களுடைய தோற்றத்தைக் கண்டு அவர்களுடைய பண்பை அறிய முடியாது" என்று வள்ளுவர் கூறுகிறார். அதனை அழகியதோர் உவமையால் விளக்குகிறார். அம்பு நேராகக் கோணலின்றி இருக்கிறது. தோற்றத்தால் நன்றாகவே இருக்கிறது. ஆனால் அம்பு குத்திக் கொல்லும் தன்மை உடையதாதலால் செயலால்

கொடிதாக இருக்கிறது. யாழ் தோற்றத்தில் வளைந்து காணப்படுகிறது. ஆனால் தான் இன்னிசையைத் தோற்றுவிக்கும் செயலால் இனிதாக உளது. இவ்வாறே உலகத்திலுள்ள பொருள்களை எல்லாம் தோற்றத்தினால் அவைகளின் தன்மையை எண்ணாமல் செயலால் அவைகளின் தன்மையை அறிய வேண்டும் என்று கூறுகிறார்.

துறந்தவர்களுள் சிலர் மொட்டையடித்துக்கொண்டும் சிலர் சடைமுடி உடையவர்களாகவும் விளங்கினர். வள்ளுவர் அவர்களைப் பார்த்துத் துறவுக்கு அவை எல்லாம் வேண்டுவன அல்ல. உலகம் பழிக்கத்தக்க செயல்களைச் செய்யாமல் ஒதுக்கிவிடுவதே துறந்தார் செய்ய வேண்டுவதாகும். "மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம், பழித்த தொழித்து விடின்" (குறள், 280) என்று அறிவுறுத்து கின்றார்.

பிறர் பொருளைக் கவர்தல் தீது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. உள்ளத்தால் ஒருவன் முதலில் நினைத்துத்தானே தீய செயலைச் செய்ய முற்படு கின்றான். ஆகவே எண்ணுதல்தான் முதலில் நிகழ்வது. ஆதலால் தீய எண்ணத்தை மனத்தில் எழாவண்ணம் ஒருவன் காத்துக்கொள்ளல் வேண்டும். திருடவில்லையே, எண்ணுதல் மட்டுந்தானே செய்தோம்! இது எவ்வாறு குற்றமாகும் என்று சிலர் வினவலாம். எண்ணிக்கொண்டே இருந்தால் அவ்வெண்ணமே செயலிற் செலுத்தும். ஆகவே தீய எண்ணம் தீய செயலுக்கு அடிப்படை என்று அறிதல் வேண்டும், இதனையே வள்ளுவர் "உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக், கள்ளத்தால் கள்வேம் எனல்" (குறள், 282) என்று கூறுகின்றார்.

வள்ளுவர் அதிகாரங்களுக்குத் தலைப்புக் கொடுக்கும் பொழுதும் எவற்றைச் செய்ய வேண்டுமோ அவற்றை உடன்பாட்டால் கூறுவர். அருளுடைமை, மெய் யுணர்தல், அவாவறுத்தல் என்னும் அதிகாரத் தலைப்புக்களைக் காண்க. எவற்றைச் செய்யக் கூடாதோ அவற்றை எதிர்மறையால் கூறுவர். கள்ளாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை என்னும் அதிகாரங்கள் எதிர்மறை வாய்பாட்டால் கூறப் பட்டிருத்தல் இக் கருத்தினைத் தெளிவுறுத்தும்.

வாழ்க்கையில் யாவரும் வாய்மையே பேசி ஒழுகுதல் வேண்டும். வாய்மை என்றால் என்ன? ஒருவன் வாயிலிருந்து வருவது உண்மையாகவே இருக்கவேண்டும். ஆதலின் பொய்யாமை, வாய்மை எனப்பட்டது. வாய்மையை உணர்த்த மெய்ம்மை, உண்மை என்னும் சொற்களும் உள. மெய்யின் தன்மை மெய்ம்மை, உள்ளத்தின் தன்மை உண்மை எனக் கொண்டு ஒருவன் உள்ளத்தால் உண்மைக்கு மாறான வற்றை எண்ணக் கூடாது. வாயால் உண்மைக்கு மாறானவற்றைப் பேசக்கூடாது. உடம்பால் உண்மைக்கு மாறான செயல்களைச் செய்தல் கூடாது. நல்லவன் ஒரு வனைத் திருடன் என்று காட்டவேண்டிப் பிறர்பால் திருடப்பட்ட பொருள்களை அவன் பால் சேர்த்து அவன் திருடினான் என்று பொய்க் குற்றம் சாட்டுதல் உடம்பினால் உண்மைக்கு மாறான செயலைச் செய்ததாகும். நல்லவன் ஒருவனைத் திருடன் என்று காட்ட எண்ணியதே உண்மைக்கு மாறான செயலைச் செய்ய எண்ணியதாகும். நல்லவன் ஒருவனைத் திருடன் என்று வாயால் சொல்லியது வாயால் உண்மைக்கு மாறாகச் சொன்னதாகும். ஆகவே உடம்பாலும் மனத்தாலும் வாயாலும் உண்மைக்கு மாறாயின செய்யாமலிருத்தலே வாய்மையாகும்.

வாய்மை என்பது கண்டதைச் சொல்லுதல் என்பர். "கண்டொன்று சொல்லேல்" என்பது இதனையே வலியுறுத்தும். எதனைக் கண்டோமோ அதனையே

சொல்லுதல் வேண்டும். எவ்வாறு கண்டோமோ அவ்வாறே சொல்லுதல் வேண்டு மென்பர். இக்கருத்து வள்ளுவருக்கு உடன்பா டன்று.

"வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்" (குறள், 291)

என்பது வள்ளுவர் வாய்மைக்குக் கூறும் ஓர் இலக்கணமாகும். இதனால் பெறப் படுவது யாதெனின் எது நடந்ததோ அதனைச் சொல்லுதல் உண்மையாகாது. யாதானும் ஒன்றைச் சொல்லின் அதனால் ஒரு தீங்கும் உண்டாகாதிருத்தல் வேண்டும்; அதுவே வாய்மை எனப்படும் என்பது. ஒருவன் மற்றொருவனுக்கு ஒரு தீங்கு செய்துவிட்டான். அதனால் தீங்கு செய்யப்பட்டவன் பெருங்கோபமுற்றுத் தீங்கு செய்தவனைப் பழி வாங்குதற்குத் துரத்திக் கொண்டு வருகின்றான். அத் தீமை செய்தவன் இவன் கையிலகப்பட்டால் அப்போதே கொன்று போட்டு விடுவான். இத்தகைய சூழ்நிலையில் அத்தீமை செய்தவன் ஓரிடத்தில் போய் ஒளிந்து கொள் கிறான். அவன் ஒளிந்து கொண்டது நமக்குத் தெரியும். துரத்திக் கொண்டு வரு பவன் 'எங்கே அக் கயவன்? அக் கயவனைக் கண்டீர்களா?' என்று நம்மை நோக்கி வினவுகின்றான். நாம் அச்சமயத்தில் உண்மையைச் சொன்னால் துரத்திக் கொண்டு வந்தவன் ஆத்திரத்தில் அவனைப் பிடித்துக் கொன்றாலும் கொன்று விடுவான். இச்சமயத்தில் நாம் அவனைக் காணவில்லை என்றுதான் சொல்லவேண்டும். இதனையே

"பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்" (குறள், 292)

என்று மற்றோர் இலக்கணமாக வள்ளுவர் கூறுகின்றார். நாம் அவனைக் கண்டதில்லை என்று பொய்தான் கூறினோம். மெய் கூறி இருந்தோமானால் ஒளிந்திருந்தவன் கொல்லப்பட்டிருப்பான். கொன்றவனும் சட்டத்தால் கொல்லப்படுவான் இரண்டையும் ஒரு பொய்தான் தடுத்தது. சொன்னது பொய்தான்; ஆனாலும் அது வாய்மை போல, நன்மையைத் தந்தது. ஆதலின் அது நேராக வாய்மையாய்க் கருதப்படா விட்டாலும் வாய்மையின் இடத்தில் வைத்து எண்ணப்படும் என்பார், பொய்ம்மையும் வாய்மை இடத்த" என்றார். நிகழ்ந்தது கூறுவதாக இருந்தாலும் அதனால் தீமை உண்டாகாமல் இருக்க வேண்டும். நிகழாததைச் சொன்னால் அதனால் நன்மை உண்டாவதாக இருக்க வேண்டும். இவை இரண்டும் வாய்மை யாகும். நன்மை உண்டாகாத நிகழாததைச் சொல்லுதலும் தீமை உண்டாகும் நிகழ்ந்ததைச் சொல்லுதலும் பொய்ம்மையாகும். இவ்வாறு மெய்ம்மை பொய்ம்மை களின் இயல்புகளைப் பகுத்துணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

நம் உடம்பை நீர் தூய்மைப் படுத்துதல்போல நம் உள்ளத்தை மெய்ம்மையே தூய்மைப் படுத்துகிறது. உலகத்திற்கு விளக்கத்தைத் தரும் ஞாயிறு. திங்கள், தீ முதலியவற்றைச் சான்றோர் விளக்காகக் கொள்ளார்.

"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு" (குறள், 299)

என்னும் குறட்பாவால் வள்ளுவர் மெய்ம்மை கூறுதலையே எல்லாவற்றுள்ளும் நல்ல தென்றும் அதைவிடச் சிறந்தது பிறிதொன்று உளதாகத் தாம் கருதவில்லை யென்றும் கூறியுள்ளார்.

இல்லறத்தானுக்குக் கோபத்தை அறவே விலக்குதல் முடியாது. இல்லறத்தான் மனைவி மக்களோடு வாழ்கின்றமையின் அவர்களுக்கு இன்னல் செய்பவர்களிடத்து இல்லறத்தானுக்குக் கோபம் வரும். துறவறத்தான் எல்லாப் பொருள்களையும் துறந்து வாழ்கின்றமையின் கோபமில்லாமல் இருத்தல் கூடும். அவ்வாறு இல்லறத்தானுக்கு முடியாது. ஆகையினால் அறுவகைக் குற்றங்களுள் ஒன்றாகிய கோபத்தை முற்றக் கடியலாகாக் குற்றம் என்றும் கூறுவர். இல்லறத்தானுக்குக் கோபம் அளவாக வேண்டற்பாலது. துறவிக்குக் கோபம் அறவே கூடாது.

ஒருவன் தன்னிடம் வேலை செய்பவர்கள், தனக்குக் கீழ்ப்படிந்து நடப்பவர்கள் ஆகியோரிடம் சில வேளைகளில் கோபங்கொள்ளக் கூடும். அக் கோபத்தால் அவர்களுக்கு அவன் சில துன்பங்களைச் செய்து விடுவான். இக்கோபம் ‘செல்லிடத்துக் கோபம்’ எனப்படும். ஒருவன் தனக்கு மேலானவர்களிடத்தே அஃதாவது அவன் அலுவல் பார்க்குமிடத்து அவனுக்குத் தலைவராக இருக்கிறவரிடத்தே கோபங் கொண்டு ஒழுகுவானானால் அக்கோபம் அவனுக்குத் துன்பத்தைக் கொடுத்துவிடும். அக்கோபம் ‘அல்லிடத்துக் கோபம்’ எனப்படும். ‘செல்லிடத்துக் கோபம்’ பிறருக்குத் துன்பத்தைச் செய்தலாலும், ‘அல்லிடத்துக் கோபம்’ கோபத்தைக் கொண்டவனுக்கே துன்பத்தை விளைத்தலாலும் யார்மாட்டும் கோபங் கொள்ளக்கூடாது என்று அறிதல் வேண்டும். கோபம் மிகுந்தவிடத்து இன்னது செய்வதென்றறியாமல் கோபங் கொண்டோன் தவறான கொடுஞ் செயல்களைச் செய்து விடுதலும் கூடும். கோபங் காரணமாகப் பிறரைக் கொலை செய்து அக் குற்றத்தால் தூக்குத் தண்டனை பெற்றோர் பலர். “தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால், தன்னையே கொல்லும் சினம்” (குறள், 305) என்னும் குறட் பாவில் வள்ளுவர், ‘உன்னைக் காத்துக் கொள்ள நினைப்பாயானால் கோபம் வாராமல் காத்துக் கொள்க’ என்று கூறுகின்றார். கோபத்தினை எவன் கொள்கின்றானோ அவன் தப்பாமல் துன்பத்திற் குள்ளாவான். சினத்தை விட்டோர் எல்லாப் பற்றையும் துறந்த துறவியோடு ஒப்பர். சினத்தை அளவு கடந்து மேற்கொண்டவர்கள் இறந்தாரோடு ஒப்பர். “இறந்தார் இறந்தாரனையர் சினத்தைத், துறந்தார் துறந்தார் துணை” (குறள், 310) என்பது வள்ளுவர் வாய்மொழி.

ஒருவனுக்கு அறிவுடைமை மிகச் சிறப்பைத் தருவதே. ஆனாலும் பிற உயிர்களின் துன்பத்தைத் தன் துன்பம் போல நினைத்துப் பிற உயிர்களுக்கு இன்னா செய்யாதிருத்தல் வேண்டும். அத்தகைய இரக்க உள்ளம் ஒருவனுக்கு இல்லாவிட்டால் அறிவு இருந்தும் பயனில்லை என்பார். “அறிவினா னாகுவ துண்டோ பிறிதின் நோய், தம்நோய்போல் போற்றாக் கடை” (குறள், 315) என்று அறிவுறுத்துகின்றார். நம் மனம் அறிந்து எந்தச் சிறிய அளவு துன்பமும் எந்தக் காலத்தும் எவ்வுயிருக்கும் செய்தல் கூடாது. ஒருவன் தான் முற்பகலிலே ஒரு தீவினையைப் பிறருக்குச் செய்தால் அது பிற்பகலிலே தனக்குத் திரும்ப வரும் என்பதை மறத்தல் கூடாது. ஒருவன், தான் துன்பம் அடையாமல் இருக்க வேண்டுமென்று எண்ணுவானானால் பிறருக்குத் துன்பத்தை எஞ்ஞான்றும் செய்யாமல் இருப்பானாக. “நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார், நோயின்மை வேண்டுபவர்” (குறள், 320) என்னும் பொன்மொழியை யாவரும் எப்பொழுதும் நினைந்து பிற உயிர்களுக்கு இன்னா செய்யாது ஒழுகுதல் சாலச் சிறந்தது.

இல்லறத்தார்க்குச் சிறந்த அறங்களும் துறவறத்தார்க்குச் சிறந்த அறங்களும் இவை இவையெனக் கூறியுள்ளார். இவ் அறங்களை அறியும் நமக்கு எந்த அறம் எல்லா அறங்களிலும் சிறப்புடையது என்றறிய அவா எழுமன்றோ? அதனை



கவியரங்கம்: (2—11—63) தலைவர் கவிஞர் கண்ணதாசன் அவர்கள்



கவியரங்கத் தலைவருடன் கவிஞர் சே. ர. குமாரசாமி, பேரவைத் தலைவர் 'வி. பி.', கவிஞர் எஸ். கே. இராமராசன் ஆகியோர்.



பட்டிமண்டபம்: (3—11—63)

இராம காதையில் அதிகச் சிறப்பு இராமனுக்கா ? சீதைக்கா ? தலைவர் : ராய. சொ.

**இராமன் கட்சியினர்:** திரு. மு. இராமசாமி, திரு. கி. வா. ஜகந்நாதன், திரு. க. கு. கோதண்டராம கவுண்டர், திரு. எஸ். கே. இராமராசன்.



**சீதை கட்சியினர்:** திரு. எஸ். இராமகிருஷ்ணன், திரு. சே. ர. குமாரசாமி, திரு. ஆர். இராதாக்கிருஷ்ணன், திரு. வி. நூர்முகமது.

யறிந்த வள்ளுவர் அதற்கு விடை கூறுவதுபோல, "ஒன்ருக நல்லது கொல்லாமை மற்றதன், பின்சாரப் பொய்யாமை நன்று" (குறள், 323) என்று கூறுகிருர். கொல்லாமையே எல்லா அறங்களுள்ளும் சிறந்தது. அதற்கு அடுத்தபடியாக உள்ள அறம் யாதெனின் அது பொய்யாமையே யாகும்.

ஒருவன் அருளுடைமையும் கொல்லாமையும் பொய்யாமையும் உறுதிபெறப் பூண்டு, தவத்தை மேற்கொண்டு, உலகப் பொருள்களின் நிலையாமையை உணர்ந்து, ஆசையை அறுத்துப் பேரா நிலையை எய்த முயலுதல் வேண்டும்.

உலகத்தில் நல்லனவும் துன்பம் பயப்பனவும் உள்ளன. நல்லன எய்தும் போது மகிழ்வுறுகின்ற நாம், துன்பம் வரும்போது அல்லற்பட்டு வருந்தாது அதனை மகிழ்ச்சியாகவே நுகர்ந்து கழித்தல் வேண்டும். இன்பம் வரும்போது இனிது மகிழ்ந்து துன்பம் வரும்போது துயருறுவாரைப் பார்த்து வள்ளுவர், "நன்ருங்கால் நல்லவாக் காண்பவர் அன்ருங்கால், அல்லல் படுவ தெவன்" (குறள், 379) என்று கேட்கிருர்.

வள்ளுவர் இல்லறமும் துறவறமும் ஒத்த சிறப்புடையனவே எனக் கருதினர் என்பது, "அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அ∴தும், பிறன்பழிப்ப தில்லாயின் நன்று" (குறள், 49) என்பதனுல் புலனுகும்.

துறவுநிலை மேற்கொண்டோர் வள்ளுவர் கூறிய வாய்மொழிப்படி நடப்பின் அத்துறவு தொழத்தகும் துறவாய் விளங்கி எல்லோரும் போற்றத்தகும் சீரிய நிலை எய்தும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# கை வண்ணமும், கவி வண்ணமும்!

அ. இரத்தினசபாபதி, கோலார்.

எரிமலையொன்று, எரிவாய் திறந்து, எரிதழலுமிழ்ந்து எழுந்து நடந்து எதிரே வருவது போன்று, கரு நிறத்தினளாய், தன் புகைவாய் திறந்து, பற்களைக் கடித்துப் பேரொலியுண்டாக்கி, பற்றியெரியும் பெருந்தீப் பிழம்பன்ன உதிரம் தோய்ந்த தன் தீ நா நீட்டி, மண்ணதிர, விண்ணதிர, உக்கிரங்கொண்டுறுமிய வண்ணம் தருக்கி வந்தனள் தாடகை எனும் அப்பேரரக்கி. இடியிடித்தாற் போன்று ஏதேதோ பேசினள், ஏசினள் இராமனை நோக்கி.

அரக்கியின் கொடுமைகளை அண்ணல் இராமனுக்கு, கூடவந்த முனிவன் விளக்கிக் கூறினன்: "இராமா! இவள் பெண்ணாயிற்றே என்று பாராதே; இவளுக்கு இரக்கங் காட்டாதே. கொன்று தீர்த்திடு இவளை" என்று கட்டளையும் இடுகின்றான். அவ்வளவில், வில்லை வளைத்து நாணேற்றினன் இராமன். விரைந்தது வாளி; இறந்து வீழ்ந்தாள் தாடகை, எரிமலையொன்று வெடித்து வீழ்ந்தது போன்று!— இங்கு இராமனது "கைவண்ணம்" புலனாகிறதாம் முனிவனுக்கு.

அடுத்து, பேர்புகழ் இராமனின் புனிதக் காலடி பட்டதும், கல்லாய்க் கிடந்த அகலிகை தன் சாபம் நீங்கப் பெற்று, மீண்டும் பெண்ணுருப் பெற்று இராமனடி பணிகின்றாள். இங்கு, இராமனது "கால் வண்ணம்" தெரிந்ததாம் விசுவாமித்திர முனிவனுக்கு. எனவே அவன் பரவசமாகி, "மைவண்ணத்திராமா! உன் கைவண்ணம் அங்கு கண்டேன்; கால்வண்ணம் இங்கு கண்டேன்!" என்று ஏற்றிப் போற்றுகின்றான் இராமனை.

இவ்வண்ணம், அண்ணல் இராமனின் **"கைவண்ணத்தையும் கால்வண்ணத்தையும்"** முனிவனின் வாயால் நமக்குக் காட்டும் கம்பரது **'கவிவண்ண'**மும் நமக்கு விளங்கக் காண்கிறோம்!

இஃது, அன்று கவிச்சக்கரவர்த்தி கம்பன் பாடிய இராம காதையில்.

இன்று, ஓராயிரம் சொல்நயமும், பொருள் நயமுங்கொண்டு மிளிரும் உயிர்ப் பாக்கள் யாத்த ஓங்கு புகழ் பாரதி, காளியின் 'கைவண்ணம்' காட்டி, அதனூற்றானே தன் "கவிவண்ண"த்தையும் நமக்குத் தருகின்றார் தன் "பாஞ்சாலி சபதத்தில்" ஓர் பா மூலம். மாலை வருணனையைப் பாடுகின்றார் கவி. பார்த்தன், பாஞ்சாலிக்குச் சொல்கின்றானும்.

"பாரடியோ வானத்திற் புதுமை யெல்லாம், பன்மொழி!" என்று தொடங்கி,

"அடிவானத்தே அங்கு பரிதிக் கோளம், அளப்பரிய விரைவி ஞெடு சுழலக் காண்பாய்; இடி வானத்து ஒளி மின்னல் இரு பத்துக்கோடி எடுத்தொன்ருய்க் கூட்டி உருக்கி வார்த்து,முடிவான வட்டத்தைக் காளி ஆங்கே சுற்று வதன் மொய்ம்புதனை, மொய் குழலே காண்!"

என்று, அடிவானத்தின் இந்திர ஜாலக் காட்சிகளைப் பார்த்தன் வாயால் பாஞ்சாலிக்கும், நமக்கும் பகர்ந்து காட்டுகிற பாரதி, — இருபது கோடி மின்னல்களை ஒன்று திரட்டித்தட்டித் தகடாக்கி, சக்கரமாக வடித்து, அதனைத் தன் கைவிரலால் சுழற்றி விளையாடு கின்ற பாவைதான் அந்தக் கதிர வன் என்று தன் கவித்திறனை எடுத்து வீசும் கவிதா ஜாலத் தையும் நமக்குக் காட்டுகிருர்! — மாலைக் கதிரவனை, காளியின் "கை வண்ண" மாக்கி, நமக்குத் தரும் இக்காட்சியிலேயே, கவிஞரின் "கவிவண்ண"மும் நமக்குப் பளிச் செனத் தெரிகிறதல்லவா?

அங்கே, இராமனின் கைவண் ணத்தையும், கால்வண்ணத்தை யும், அதன் மூலம் கம்பரின் கவி வண்ணத்தையும் கண்ட நாம், இங்கே, காளியின் கைவண்ணத் தைக் காணுதல் மூலம் பாரதியின் கவிவண்ணத்தையும் காண் கிறேம்!

கோர்க்கப்படும் மாலைக்கு ஆதார மாகிய நூல் ஒன்றுதான்; ஆனல், மணிகளும், மலர்களுந்தான் வெவ் வேறு!

# சொல்லும் செயலும்

★

ஆர். எஸ். வேங்கடேசன்
புது டில்லி

★



சிந்தனை, அது நற்சிந்தனையாக இருந்தாலும், தீய சிந்தனையாக இருந்தாலும், ஒரு கருப்பொருளைப் பகுத்தறிய உதவுகிறது. சிந்தனை, செயலாக உருப் பெறுகிறது. நற்சொல், நற்செயல், நல்வாழ்க்கைக்கு உதவுகிறது. தீச்சொல்லும், தீச் செயலும் வாழ்க்கையை அமைக்க உதவலாம்; ஆனால், அமைவது, அமைதியற்ற தெளிவற்ற வாழ்க்கையாகத்தான் இருக்கும்.

நல்லதைவிடத் தீயது வலுவுள்ளதாகத் தோற்றமளிப்பதால், தீயசிந்தனை மனத்தைக் குழப்புகிறது. காரணம், அது தன் வன்மையால் மனத்தில் முழு ஆதிக்கம் பெற்றுவிடுகிறது. பகுத்து ஆராயும் விகிதம், தீய சிந்தனையின்போது, இயல்பாகவே குறைகிறது. ஆனால், நற்சிந்தனையிலோ, பகுத்து உணரும் உணர்வுக் கலப்பு அவசியம் இருக்கும். பகுத்துணரும் உணர்வு தெளிவினின்று பிறப்பதால், சிந்தனை நன்றாக அமைகிறது; நற்சிந்தனையிலிருந்து பிறக்கும் செயலும் நல்லதாக அமைகிறது.

சொல், செயல்; இவை, எண்ணங்களின் உடனடியான எழுச்சியாகவும் அமையலாம், சிந்தனையின் விளைவாகவும் அமையலாம். உடனடியான எழுச்சியில் பிறக்கும் சொற்கள் தெளிவின்றி இருக்கும். சிந்தனைக் கலப்பு அதில் இருக்காது. அவற்றுக்குப் பொருளும் இருப்பதில்லை, மதிப்பும் இருப்பதில்லை.

சொல்வது எளிது. செய்வது அரிது. சொல்லைவிடச் செயலுக்கு வேகம் அதிகம். சொல் சிந்தனையின் விளைவாகவே அமைந்தாலும், நிறைவான சிந்தனைக்குப் பின் தோன்றும் செயலின் வேகம், ஆழம், சொல்லுக்கு இருப்பதில்லை.

சொல்கிறோம்; செய்வதில்லை. சொல்வதைச் செயலாக்கும் தெளிவும் துணிவும் இருந்தால்தான் சொல்ல வேண்டும். செயலைத் தோற்றுவிக்காத, செயல் கலப்பற்ற சொல்லுக்குப் பொருள் இருப்பதில்லை; அதனால் பயனும் விளைவதில்லை. சொல்லைவிடச் செயல் மிக விரைவாக எதிர்ச் செயலைத் தோற்றுவிக்கிறது. சிந்தனையின் விளைவாகிய செயலைச் சொல்லாமலேயே செய்யலாம். ஆனால் செய்யாமல்

சொல்லிக் கொண்டே இருப்பது தவறு. அப்போது, அது மதிப்பையும் இழந்து விடுகிறது.

இன்று, செய்பவர்கள் குறைவு, சொல்பவர்கள் அதிகம். செயற்குறைவு சிந்தனைக் குறைவைக் காட்டுகிறது. சிந்தனைக் குறைவு தெளிவற்ற மனத்தைக் காட்டுகிறது. தெளிவற்ற மனத்தில் தெளிவான எண்ணங்கள் தோன்ற முடிவ தில்லை. தெளிவற்ற பல சொற்களைவிடத் தெளிவான ஒரு செயலுக்கு அதிக வலு உண்டு. அது சிந்தனையின் பலனையும் தரும்.

மனம் வளர வேண்டும்; வெளுக்க வேண்டும். சிந்தனை வளம் பெற்று வளர வேண்டும். மனம் வெளுக்க, வளரும் சிந்தனையும் வெளுக்கும். சிந்தனைத் தேக்கம் செயல் தேக்கத்தை ஏற்படுத்துகிறது. செயல் தேக்கம் அழிவுக்கு வித்திடுகிறது.

புகழ் பெற்ற நேற்றைய முன்னோர்களைப் பற்றி எண்ணலாம். அவர்கள் புகழைப் பேசிப் பாடிப் பெருமை கொள்ளலாம். இதில் தவறு ஒன்றுமில்லை. ஆனால் அவர்களைப் போற்றும் அளவோடு சிந்தனை நின்றுவிடக்கூடாது. மேலும் செல்ல வேண்டும். நேற்றைய முன்னோரைவிட, இன்றைய நாம், நாளைய பின்னோரின் சிந்தனையில் உயர்ந்து தோன்ற வேண்டும் என்ற எண்ணமே சிந்தனையின் அடிப் படையாக அமைய வேண்டும். முன்னோர்களின் புகழை, பெருமையை, இன்றைய வளர்ச்சிக்கு ஒரு உதவு – கருவியாகக் கொள்ள வேண்டுமே தவிர, முன்னோரின் புகழ் தான் இன்றைய வளர்ச்சியின் எல்லை, சிந்தனையின் எல்லை என்று கொள்ளக்கூடாது.

பழந்தமிழ் நூல்கள் சிறந்தவை. உண்மை. அவற்றைப் போற்ற வேண் டும்; போற்றுகிறோம். அவற்றின் புகழைப் பாடுகிறோம்; பாடுவதும் நல்லதுதான். ஆனால், இதோடு நம் சிந்தனையும் செயலும் நின்றமைவதுதான் தவறு. சிந்தனையும் செயலும் இதற்கு மேலும் செல்ல வேண்டும். பழைய நூலுக்கும் மேலான சிறந்த புது நூலை நாம் செய்வோம் என்ற நம்பிக்கையில் சிந்தனையைப் படரவிட வேண்டும். செய்ய வேண்டும் என்ற துடிப்பும், துடிப்புமிக்க செயலும் வேண்டும்.

நம் முன்னோர்களுடன் உலகம் அழிந்துவிடவில்லை. அவர்கள் அழிந்தாலும், அவர்களது சிந்தனையும், சிந்தனையின் விளைவான செயலும் இன்னும் அழியவில்லை. ஒவ்வொரு கணமும் புதுப்புது உயிர்கள் தோன்றிய வண்ணம் இருக்கின்றன. உயிர் கள் புதியனவாக வருதலை எண்ணிப் பார்க்கும்போதே, சிந்தனைகளும் வளர்ந்து புதியனவாக இருக்க வேண்டியதன் அவசியம் புலப்படுகிறது. நாளை நாம் அழிய லாம். ஆனால் நம் சிந்தனைகள் அழியவிடக் கூடாது. சிந்தனைகளைச் செயலாக்கி நிலைக்கச் செய்ய வேண்டும்.

எனவே, பழம்பெருமைகளை நாம் செல்லும் பாதையாக மட்டுமே கொள்ள வேண்டுமேதவிர, அவைதான் வாழ்க்கையின், இன்றைய புதுமையின், எல்லைக் கொள்கை என்று கொள்ளக்கூடாது. பழம்பெருமையோடு சிந்தனை முடிவடைய விடக்கூடாது. மேன்மேலும் சிந்தனை வளரவேண்டும். சிந்தனைத்தேக்கம் அழிவைத் தரும், ஆக்கத்தைத் தராது. பழம்பெருமைகளை இன்றைய சிந்தனைகளை வளர்த்தப் பயன்படுத்திக்கொண்டால் மட்டும் போதும். உணவுப் பயிர் வளர உரம் உதவு வதைப்போன்ற நிலையில் பழம் பெருமைகளை எண்ண வேண்டும். உணவுப் பயிர்

வளர உரம் உதவியாக இருக்கிறது என்பதால், நாம் உரத்தையே உணவாகக் கொள்வதில்லை. பயிரின் வளர்ச்சிக்கு உரம் உதவுகிறது: அதோடு அதன் பணி முடிவடைகிறது.

பழங்காலச் சரித்திரத்தை எண்ணிப் பெருமையுறும் நாம், சிந்தனைத்தேக்கத்தின் காரணமாக, உரத்தையே உணவாக எண்ணும் மயக்க நிலையில் இருப்பதன் காரணமாக, இன்னும் பின்னணியில் இருக்கிறோம். பிறரிடம் உணவுக்கும் உடைக்கும் கையேந்தி நிற்கிறோம். ஆனால், வரலாற்றைத் தேடி அலையாது, வளரும் சிந்தனையில் வாழ்வை அமைத்துக்கொண்ட நாடு, இன்று நமக்குப் பலவகைகளில் உதவும் அளவுக்கு முன்னேறியிருப்பதையும் எண்ணிப்பார்க்க வேண்டும்.

இது, மொழிக்கும் பொருந்தும், தமிழர் வாழ்வுக்கும் பொருந்தும். தமிழரின் புகழ் பாடுவதோடு நம் சிந்தனை நின்றுவிடுகிறது. நம் முன்னோர்களின் நூலைவிடச் சிறந்த நூலை இயற்ற வேண்டும் என்ற சிந்தனை வளர்ச்சி இல்லாமல் இருப்பதன்றி, அந்தப் பழைய நூலைப் புரிந்து கொள்ளக்கூடிய வளர்ச்சி கூட இல்லாத கீழ்நிலையில், நம் சிந்தனைகளை ஒரு குறுகிய எல்லைக்குள்ளேயே சுழல விடுகிறோம். இதனால் தன்னம்பிக்கை ஏற்படுவதில்லை. தன்னம்பிக்கை இல்லாதபோது, வளர்ந்த, பரந்த, தெளிந்த சிந்தனை இல்லாதபோது, உயரிய படைப்பும் தோன்ற வழி இருப்பதில்லை.

காலம் மாறுகிறது. மாறும் காலத்திற்கேற்பச் சிந்தனைகளை வளரவிட வேண்டும். நேற்றைய சூழ்நிலையைவிட இன்றைய சூழ்நிலை வேறானது என்பதை மறக்கக்கூடாது. அப்படி மறவாதிருந்தால், முன்புகழைப் பாடி, அமைவதோடு மட்டும் நிற்கமாட்டோம். சூழ்நிலைக்குத் தக்கவாறு சிந்தனையை வளர்த்துச் செயலிலும் இறங்குவோம்.

சொல்பவர்கள் எல்லாம் செய்வதில்லை. சொல்வதைச் செய்துகாட்ட மன ஆக்கம் வேண்டும். மற்றவருக்கு அறிவுரை கூறும் பொறுப்பையே பொதுவாக அனைவரும் மேற்கொண்டிருக்கிறோம். நம் சிந்தனையின் விளைவைப் பிறருடைய செயலில்தான் காண விழைகிறோம். இதற்கு, சிந்தனையில் உருவான நமது கருத்துக்களைப் பிறரிடம் சொல் மூலம் புகுத்த விரும்புகிறோம். தீ சுடும் என்ற உண்மையைப் பிறருடைய விரலைத் தீயிலிட்டு உணர்வது போன்றது இது. சிந்தனை செயலாக மாறிவிட்டால் சொல் விளக்கத்திற்குத் தேவையேது?

மற்றொன்று. ஒரு கருத்தை மற்றவர்களுக்குச் சொல்லும்போது, கேட்பவர்களிடமிருந்து நம்மைத் தனியே பிரித்துக் கொள்கிறோம். உயர்வான ஒரு படியில் இருந்தே, சிந்தனை தந்த கருத்தைப் பிறரிடம் புகுத்த விரும்புகிறோம். இந்த முறை, அதிக நலனையும் பலனையும் தருவதில்லை. பிறரோடு கலந்து ஈடுபடும் செயலுக்கு, வேகம் அதிகம். வலுவும் அதிகம். செயலின் முன், சொல் தேவையற்ற ஒன்றாகி விடுகிறது. காந்தியடிகள் இதை நன்கு உணர்ந்திருந்தார். அதனால்தான் அவர் சொல்லைவிடச் செயலில் அதிக நம்பிக்கை வைத்திருந்தார். இன்று செயலின் சக்தியை உணர்பவர்களும் இல்லை; செயலில் ஈடுபடுபவர்களும் இல்லை.

தனி மனிதன் சமூகத்தின் ஒரு அங்கம். நாம் சமூகத்திலிருந்து நம்மைத் தனியே பிரித்து, சமூகத்தை நோக்க விரும்புகிறோம். சமூகச் சீர்கேடு, தனிமனிதனின் சீர்கேட்டின் விளைவு. தனிமனிதனின் சீர்கேடான நிலை, நாட்டுச் சீர்கேட்டின் ஓர்

எடுத்துக்காட்டு. இங்கும் செயலின்மைதான் காரணமாக அமைகிறது. மற்றவர் களைச் சீர்திருத்துவதால் சமுகத்தைச் சீர்திருத்தி விடலாம் என்ற "அடிப்படை எண்ணம்" தவருக இருப்பதால்தான் இந்நிலை ஏற்படுகிறது. நாம் சீர்திருந்தியிருக் கிறேமா என்று முதலில் நம்மை நாமே நோக்கக் கற்க வேண்டும். நம் செயலைப் பார்த்து மற்றவர்கள் திருந்த வேண்டுமே தவிர, நம் சொற்களால் மட்டும் மற்றவர் களைச் சீராக்க முற்படுவது தவறு. இந்தச்சிறு கருத்தை அரசியல்வாதிகள் எண்ணிப் பார்த்தால், எவ்வளவோ வீண்பேச்சுக்களைத் தவிர்க்கலாம்.

இங்குதான் சமுகத்தில் தனி மனிதனின் பொறுப்புத் தோன்றுகிறது. நமது பொறுப்பை நாமாக உணர்வது சிறப்பு. உணர்ந்து சிந்தித்துச் செயற்படுவது மேலும் சிறப்பு. நமது பொறுப்பை நாம் உணராதபோது, பிறருடைய பொறுப்புக் களைப் பற்றிப் பேச, எண்ண, நமக்கு உரிமை இல்லை. பிறருக்கு எடுத்துக்காட்டி உணர்த்தத் தகுதியும் இல்லை.

இன்று நாடு நெருக்கடியான நிலையில் இருக்கிறது என்பது அனைவருக்கும் தெரிகிறது. ஆனுல், தெளிவுள்ள சிந்தனை இல்லாததால், சிந்தனையின் உயிரான செயல்முறை இல்லாததால், அனைவரும் வீண் குரல் எழுப்புவதோடு நின்று விடுகிறேம். குறிப்பிட்ட ஒரு சிலரின் பொறுப்பில் அனைத்தையும் விட்டு விட்டு, 'நமக்கென்ன' என்றிருப்பதும் சிந்தனைத் தேக்கத்தைக் குறிக்கிறது. அந்த ஒரு சிலரும், தம்மைத் தாமே முதலில் நோக்கிச் செயலில் ஈடுபடாமல் சொல்லளவிலேயே பிறரைச் சீர்திருத்த விரும்புவதால், அவர்களது சிந்தனை, அது நற்சிந்தனையாக இருந்தாலும், செயலின்மை காரணமாக, வலுவை இழக்கிறது; மதிப்பையும் இழக்கிறது.

பேசியதெல்லாம் போதும் என்று அமைந்து, செயலில் இறங்கும் செயலாக் கம்தான் நாட்டின் இன்றையத் தேவை. நற்சிந்தனைகளை வளரவிட வேண்டும். நற்சிந்தனைகளோடு நற்செயல்களும் இணையவேண்டும். செயல்கள் சங்கிலித் தொடர் போன்று தானுக இணைந்து வலுப்பெறும். சிந்தனையின் வலுவில்செயலும், செயலின் வலுவில் ஆக்கமும் தோன்றுகிறது.

சொல்லாளர்கள், இருப்பவர்களே போதும். நன்கு சிந்திப்பவர்களாக, சிந்தித்துச் செயலாற்றுபவர்களாக அனைவரும் மாறும் நிலை வரவேண்டும். இன்றையத் தேவை இதுதான்; நமது கடமையும் இதுதான்.





# கடற்குமரி

•

கு. சிவமணி, எம். ஏ., பி. டி.

•

அலையெறிந்து மனங்குமுறி ஆடுகின்ற கடலும்
அந்திவரக் கண்டுவுடன் விரைவாக எழும்பிக்
கலைமிக்கோன் வடித்தெடுத்த சிலையன்னாள் போன்று
காண்போர்கள் மனம்மயங்கும் ஒப்பனைகள் கொண்டு,

நிலையின்றி நெளியுமுடல் மீதினிலே கருமை
நீலநிற ஆடையினைப் போர்த்தபடி மயங்கி,
வலைவிசும் கயற்கண்கள் வான்மீது மொய்க்க
வான்மதியை எதிர்நோக்கிச் சிலிர்த்தாடி நின்றாள்.

" மடியில்லா மன்னவனே ! ஒளிவேந்தே ! இன்னும்
மண்ணுலகில் செய்வதென்ன ? விரைந்தேவா ! என்று
கடிமணத்தில் கைப்பிடித்த சாயையாள் கூவக்,
கதிரவனும் மேல்வானச் செம்புனலில் மூழ்கிச்

சுடுகின்ற கதிர்சுருக்கி மனையகமே சேரச்,
சொந்தமிலாச் செந்தாமரை சோர்வால்கண் மூடத்
தொடுவானின் அடியிடத்தே அழகுநிலா வந்தான்.
துவண்டுவிழும் கடற்குமரி முத்துடைமேற் கொண்டாள்.

வெள்ளிதன்னை உருக்கிநீல வெளிமுழுதும் வார்த்து,
வெண்மேக ஊஞ்சலிலே அமர்ந்தாடிப் பாடிக்
கள்ளமிலாக் காதலுள்ளம் களிமிகுந்து மகிழக்
கண்ணீரைப் பெருக்கியினை பிரிந்தவர்கள் புலம்ப,

வள்ளல்போல் கலையமுதை வாரியெங்கும் இறைத்து
வருகின்றான் வான்முகட்டில் எழில்நிலவன் பவனி !
உள்ளமெல்லாம் உணர்ச்சிமிகக் கடற்பெண்ணாள் துள்ளி
உரைக்கின்றாள் ஏதேதோ தண்ணிலவை நோக்கி !

* * *

**கடல் :** மயிலாடும் முகில்கண்டு, மாவாடும் துணைகொண்டு,
குயிலாடும் கொம்பிருந்து வண்டாடும் மதுவுண்டு,
உயிராடும் காதலினுல் உலகெல்லாம் மகிழ்ந்தாடும்
சதிராடும் என்னெஞ்சம்; சந்திரனே ! இவைகண்டு

நல்யாழை நங்கையர்கள் அசைத்தின்பம் வடித்தல்போல்
மெல்லவந்து நறுந்தென்றல் மேனியெங்கும் வழிந்தோடி
வில்லவனின் சிறுகுறும்பு செய்தின்பம் விளைவிக்கும்,
சொல்லஅதை நாணும்மனம்; சொல்லியது புரிவதில்லை.

அல்லல்நிறை வாழ்வெனதோ ? அன்பருளும் பரிசிதுவோ?
மல்லல்மா ஞாலத்தில் மனம்நைந்து மாள்வேனே ?
எல்லையிலாப் பேரழகால் என்னிதயங் கவர்ந்தோரே !
இல்லையோ என் மீதே இரக்கமென்னும் அரும்பொருளே !

**நிலவு :** கள்ளம்கொள் பேச்சுக்கள் காமமெனும் நஞ்சுநிறை
பள்ளத்தில் பாய்ந்தனவே! வெள்ளம்போல் உணர்வெழுந்தும்
உள்ளத்தில் கொள்ளாதே ஒதுக்குவரோ குலமாதர் ?
விள்ளுகின்ருய் வெட்கமின்றி ; வீம்பெதற்கு? வேல்விழியே !

**கடல் :** பஞ்சாகும் நெஞ்சந்தான் பதைக்குதேஉம் சொற்கேட்டு,
வஞ்சம்நிறை மனத்தளெனின் வாய்விட்டுக் கேட்பேனே ?
கெஞ்சுகின்றேன் ? நீர்வெறுக்க கேடென்ன நான்செய்தேன்
மஞ்சுலவும் மலையுச்சி வந்தணையும் மன்னவனே !

**நிலவு :** கண்கவரும் உன்வனப்புக் காசுகொளும் பொதுமகளின்
வண்ணம்செய் மேனியிலே வாழ்வதுசொல் பெண்பாவாய் !
பண்பற்ற மானிடர்பால் 'பெருந்திணையைப்' படித்தனையோ?
எண்ணத்தில் நிறையென்றன் நினைவகற்ருய் ஏந்திழையே !

**கடல் :** நிறையொளிசூழ் வானுலகில் நிலவியுறை முழுநிலவே!
'குறையுடையோய் ! குணமில்லாய்' என்றிகழும் கோமானே !
கறையுடையார் கண்டத்தில் ஆலமர்ந்த பெம்மானும்
நிறையொன்றே கொண்டாரை நீணிலத்தில் காட்டீரோ ?

**நிலவு :** நிலையில்லா நெஞ்சத்தாய் ! நெளிகின்ற உடல்கொண்டாய் !
தலையாய கற்புடைமை, தாய்க்குலத்தின் சிறப்பாகும்
மலைபோலும் மனம்படைத்தோர் மாந்தரிலே உயர்ந்தோராம் !
அலைகின்ற உளம்கொண்டோர் அவனியிலே பழிசுமந்தோர் !

**கடல் :** மேலெல்லாம் மீன்வீச்சு ! மேனியெல்லாம் பொன்வீச்சு !
ஆழமெல்லாம் குவிதவளம் ! அகலமெல்லாம் நிறைபவளம் !
நீளமெல்லாம் விரிஎல்லை ! நெஞ்சமெல்லாம் நிறைகாதல் !
நாளெல்லாம் நையுமனம், நல்லழகே ! உனக்காக !

நீங்குவது நீளுறக்கம்! நெருங்குவது நீள் துயரம்!
ஏங்குவது கருநெடுங்கண், இரங்குவதோ எழிற்கோலம்!
வீங்குவது வேதனைதான், விம்முவதோ உயிர்த்துடிப்பு!
தூங்குவதோ உம்மன்பு, துன்னுவதோ என்காதல்!

விண்காட்டும் என்மேனி; மண்காட்டும் என்செல்வம்;
கண்காட்டும் என்பேச்சுக் கரைகாட்டும் என்னெஞ்சம்
பொன்கூட்டும் என்னழகு புலவர்களின் பாட்டாகும்,
என்கூட்டும் இவையெல்லாம் எழிற்காதல் இல்லையெனில்?

பாரிணைக்கும் கலங்கள்தமைப் பரிவுடனே கரைசேர்க்கும்
ஏர்தவழும் நீருலகம் என்னுலகம்; திருமன்னும்,
சீர்தவழும் உரிமையுடன் என்னையுமுன் சேவடியில்
வார்த்திடுவேன் என்காதல் வாஞ்சையுடன் ஏற்றிடிலோ!

நிலவு: பெரியோரின் புகழ்பொறுக்கா தழுக்கறுக்கும் மத்தர்போல்
விரிவாகும் பழந்தமிழர் விஞ்சுபுகழ் நீகண்டு
வருந்தி,யவர் வாழ்நிலத்தைப் பாழ்வாயால் உண்டனையே!
பரம்பரையோ நின்சொத்துப் பழியன்றோ? பண்பிலையே!

மறக்காதே மண்ணுலகம் என்றென்றும் நின்வஞ்சம்!
பிறர்செல்வம் வௌவிப்பின் பீடுநடை போட்டிடுவார்
மறத்திற்கே அஞ்சாதார்! அவர்வாழ்வோ மகிழ்நினதும்!
அறக்கடவுள் பறித்துவிடும், அவர்பொருளை ஒருநாளே!

என்னைநீ கண்டிடிலோ எழிற்கோலம் புனைகின்றாய்.
பின்னையென் பெரும்பகைவன் ஞாயிற்றொடு பிதற்றுகின்றாய்.
என்னேயுன் அருங்காதல்? ஏந்திழையே! தவறன்றோ?
உன்னைப்போல் நடிப்பாரை ஒருபோதும் காணேன்நான்.

கடல்: மிஞ்சுவை நல்லமிழ்தில் நஞ்சுதனை விரவாதீர்!
நெஞ்சம்நிறை காதலினால் கெஞ்சுகின்றேன், நீர்விரும்பில்
அஞ்சலென அடைக்கலந்தான் தந்திடுக! இல்லையெனில்
தஞ்சமென அடைந்தாளைத் தவிக்கவிட்டுச் சென்றிடுக!

பிடித்திடிலோ ஏற்றருள்க! பேசற்க கொடுஞ்சொற்கள்!
சுடுசொற்கள் வீசியுளம் சுட்டெரித்துப் போடற்க!
வடுவென்றும் மறைவதில்லை வலியுடனே நீங்கிடினும்,
படுதுயரம் களைந்திடுவீர் பால்போன்ற முகத்தழகீர்!

அடிமையென அடைந்தவர்பால் அருளின்மை என்னுமொரு
பிடிவாதம் காட்டுவது பெரியோர்க்குப் பீடன்று!
வெடிமருந்துக் கிடங்காகும் வெந்தழியும் என்றனுளம்.
முடிவில்தான் தகர்ந்தெரிந்து பிடிசாம்பல் ஆகிவிடும்.

**நிலவு :** பொன்பூத்த எண்ணத்தாய்! நான்புரிந்த புண்ணியமே!
தென்பூத்த மாருதமே! தென்பாங்குச் சுவைமொழியே!
மின்பூத்த நகையுடையாய்! மீளாத காதலினுல்
என்பூத்த மனம்புகுந்தாய்! எழிலாடும் பூங்கொடியே!

கள்ளமிலாக் கனிமொழியே! கண்கவரும் ஓவியமே!
அள்ளிவரும் நெஞ்சகத்தில் ஆடிவரும் நேரிழையே!
துள்ளிவரும் நீள்நினைப்பில் வாழ்பவளே! துவளுமுயிர்.
கொள்ளவரும் விழிவிருந்தே! கோதில்லாக் குணமுடையோய்!

ஆடுமுடல் நெளிவிருக்க, அங்கமெல்லாம் பொங்கியெழப்
பாடுமொழிச் சுவையிருக்கப், பண்பெல்லாம் நிறைந்திருக்க;
மூடாது விழியிருக்க, முன்னேடி அன்பிருக்க,
நாடுவது நானிருக்க இருக்கின்ருய் என்திருவே!"......

**கடல் :** உற்ருரை விரும்பவில்லை; உறவுமினித் தேவையிலை;
பெற்ருரை வேண்டவில்லை; பெருங்காதல் பற்றிநின்று,
நற்றவமே செய்துய்ந்தேன், நாயகராய் உமைப்பெற்றேன்.
கற்பாறை நெஞ்சத்தைக் கனிவித்த ஐயாவே!

**நிலவு :** நின்முடிவு தவறுடைத்தே! நெறியறிந்தே யானேத்த
உன்னருகே அல்லியென்பாள் ஒளிர்கின்ருள் என்றறிந்தும்
என்பாலே காதல்மொழி இயம்புமிது விந்தையன்ரே!
உன்பாலே நாணென்னும் உயர்குணந்தான் நழுவியதோ?

**கடல் :** நாடெல்லாம் ஓடெடுத்து திரிநிலைதான் நண்ணிபுறும்
வாடுகின்ற வயிறதற்குச் சோறுகொஞ்சம் காணுமல்
பாடுபடும் பஞ்சையரின் துன்பம்போல் என்நெஞ்சும்
ஆடிநிற்கும் வேதனையால்; ஐயையோ! என்விதியோ?

காதலெனும் கலமேந்தி மேதினியில் உழன்றுவந்தேன்;
பாதகந்தான் செய்வதற்கே பற்பலரும் துணிந்துநின்ருர்;
காதலைய! என்தேவே! கண்கவரும் ஆணழகே!
மோதிநிற்கும் உணர்வுகளால், என்னுள்ளம் அறியீரோ!

துன்பத்தால் துடித்துநிற்கும் மன்பதையே உமைக்காணின்
இன்பத்தால் எழுச்சிகொளும், அதன்பாலே இரங்குமனம்
என்பாலே இரங்காமல் ஏங்கவைக்கும் சோதனையேன்?
அன்பாலே வேண்டுகின்றேன், அருள்புரிக, பெருமானே!

**நிலவு :** பண்ணில்லா யாழ்போன்ருய்! சுவையற்ற பழமொப்பாய்!
பெண்மையை நழுவவிட்டே என்னெனவோ பிதற்றுகின்ருய்!
பெண்ணுநீ! பேசுமென்றன் முன்னினியும் நில்லாதேபோ!
தண்ணில்முகம் காட்டாது கடிதோடி ஒளிந்துவிடு.

* * *

இருள்தன்னைக் கொன்றிடும் திங்கள் — கன்னி
இதயத்தைக் கொல்லுரை செய்தான்.
அருள்நெஞ்சப் பெண்மையைக் கொன்று — பெண்ணாள்
அறிவினை மேற்கொள்ள லுற்றாள்!

படைபோட்டு வந்திடும் மன்னன் — போன்றே
பாய்ந்தெழுந்தாள் விண்ணை நோக்கி!
நடைகற்குங் குழவியைப் போன்று — ஆங்கே
நல்லொளிதி கைக்க லுற்றான்.

அடைபட்ட ஆத்திர மெல்லாம் — கொட்டி
ஆர்ப்பரித்திட் டாளக் கன்னி!
உடைபட்ட உள்ளமி ருந்து — சொற்கள்
உருண்டோடி வெளிவரல் கேளீர்!

* * *

மங்கையென் நெஞ்சத்தில் மண்டிவந்த உணர்வலையைக்
கொஞ்சமேனும் மதியாதாய்! கொள்கையெதும் இல்லாதாய்!

நிறைபொறுமை பெண்ணிற்கு நெடும்பெருமை அதைப்பேணல்
அருமைஅப் பொறுமைக்குச் சிறுமைஏற் பட்டக்கால்!

வரம்பின்றிப் பழிசுமத்தி வாய்வீச்சே அளந்திட்டாய்!
நிரம்பிற்றோ நின்நெஞ்சம்! நின்குறையை உணராதாய்!

வளர்கின்றாய்! தேய்கின்றாய்! வான்மதியே ஈதெதனால்?
பலர்தூற்றும் பெரும்பாவம் செய்தனையே! உணராதாய்!

குறையுடையாய், குணமில்லாய்! என்றென்னை இகழ்ந்திட்டாய்
கறைபட்டுக் காலமெல்லாம் கலுழ்வதையே உணராதாய்

கன்னியெனைக் காதலிக்கக் கதிரவனும் விண்மீனும்
முன்னோடி வந்திடினும், முழுதுமுனை விரும்பினதால்,

வெள்ளைநல் மனங்கொண்டு வெளிப்படையாய்ச் சொன்னமைக்குக்
கள்ளத்தைக் கற்பித்தாய், காதலுயர் வறியாதாய்!

உனக்கென்றே ஒன்றுமிலாய், ஞாயிறிடும் பிச்சையினால்
மினுக்குகின்றாய் மேதினியை! மேதகைமை இல்லாதாய்!

பகையென்றாய் கதிரவனைப் பகுத்துணர்ந்து பார்த்திடிலோ
நகைப்பிற்கே இடமாகும், நன்றியுணர் வில்லாதாய்!

நான்சொல்லும் மொழிகேட்டு நாணிமுகம் மேகத்துள்
ஏன்புதைத்தாய்? வான்மதியே! எனைத்தூற்றும் வாயெங்கே?

உன்னுடனே உறைமேகம் உதறியுனை விட்டெறிந்தே
உன்னொளிப்பை வெளிப்படுத்தி ஓடுவது பரிதாபம்!

விண்மீன்கள் கண்சிமிட்டி வீண்பெருமை கொண்டவுனை
எண்ணித்தம் முன்சிரித்தே எள்ளுவதைக் கேட்டிலையோ?

குறையற்ற உயிரினங்கள் குவலயத்தில் இல்லையதைப்
பொறையுடனே சிந்தித்தால், புலனாகும்; அறிவற்றாய்!

என்றெல்லாம் எழுந்துடிப்பில் அறிவற்றுப் பொறிகலங்கி
அன்புணர்வைக் கொன்றதுடன் அரும்பண்பு நிலைமறந்தே

ஊழியழி நடம்செய்யும் உணர்வுவயப் பட்டவளாய்
வாழியெனும் வாழ்த்தழித்து வாங்கும்பழி குறிகொண்டு.

* * *

வார்த்தைகளை அம்பாக்கி வாளை நோக்கி
வாய்த்திறமை எனுமொருவல் வில்லில் பூட்டி;
ஆர்க்கின்ற கடற்பெண்ணாள் எய்து நின்றாள்.
அதன்முன்னர் நிற்கவொண்ணாக் குறைநி றைந்தோன்

வேர்க்கின்றான்; திகைக்கின்றான்; வெள்கு கின்றான்;
வியக்கின்றான் கடற்பெண்பேய் நடனம் கண்டு!
பார்த்திடவே முகம்பதைத்து வெளிறி அஞ்சிப்
பழிகொண்டான் உடல்மறைத்தே ஓட லுற்றான்!

"இருளரக்கா! இன்னுமென்ன உன்றன் ஆட்சி!
எம்மன்னன் கதிரவன்தன் தேரி வர்ந்து
வருகின்றான், இவ்வுலகில் வாழ்வு சேர்க்க,
வான்வெளுப்புக் கீழ்த்திசையில் காணாய்! அன்னோன்

அருளொளியால் உலகனைத்தும் உய்யும் நேரம்,
ஆற்றலற்ற நீநிற்ப தேனோ? உன்றன்
கருமேனி அவன்கண்ணில் படுதல் முன்னம்
கடுகியோடு! இலையேல்நீ சாவாய்!" என்றே.

ஆதவனின் தூதுவனாய் வெள்ளி என்பான்
அவன்பெருமை இசைபாடி முரச றைந்தான்.
சூதுமிகக் கொண்டஇரு ளரக்கன், 'ஏனோ
தொல்லைநமக் கெனப்பைய நழுவ லுற்றான்.

மேதகைமைப் புலவோர்கள் எழுச்சி பாட
வெல்கதிரோன் உலகநலம் பாடி வந்தான்.
வாதுசெய்த கடற்பெண்ணாள் அமைதி கொண்டும்
வந்தகத்தில் குவியுணர்வால் அலை கின்றாளே!

* * *

"ஏதிலார் குற்றம்போல் தங்குற்றங் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு" — தமிழ்மறை.

# பெண்மைப் பலி

புலவர் உரோகிணி,
கலைமகள் கல்வி நிலையம், ஈரோடு

விடிந்தால் கோதைக்குத் திருமணம். கோதை! என் கோதைக்குத் திருமணம்! மீண்டும் அழைப்பிதழைப் படிக்கின்றேன். "செல்வி. கோதைக்கும்......! செல்வன் : கோபாலனுக்கும்......!" இதற்கு மேல் படிக்க முடியாமல் பாழும் கண்ணீர் தடைபோடுகிறது. என் பெயரும் கோபாலன்தானே! ஆனால் மணமகன் நான் அல்ல. கோதை! இதையெல்லாம் நான் குமரிமுனையில் கடலைத் தழுவி நின்ற ஒரு பாறை மீது அமர்ந்து கொண்டுதான் எண்ணுகிறேன்.

சென்ற ஆண்டு தமிழ் மதுரையில் நடந்த புலவர் மகாநாட்டில்தான் உன்னைக் கண்டேன். இல்லையில்லை! "கற்பின் செல்வி" என்ற பொருள் பற்றி நீ பேசியபோது என் செவியை உனக்குத் தந்தேன். கோதை! உனக்குத்தான் இந்தச் சின்னவயதில் எவ்வளவு பெரிய அறிவு? தாமரையின் புறவிதழ் போன்று சுற்றிலும் தெருக்கள் சூழ, நடுவில் இருக்கும் பொகுட்டுப் போன்ற கோவிலில் நின்று "தொடுக்கும் கடவுள் பழம் பாடல் தொடையில் பழுத்த பயனே!" என்று மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழை நீபாடியபோது என் செவியின் நுகர்வை உனக்குத்தந்தேன்.

மேடையில் வீசுகின்ற மெல்லிய பூங்காற்றினை உணர்ந்தவாறு பொதிய மலைமீது நாமனைவரும் ஏறிச்சென்றபோது, வண்ணக்கலவைகளையும் தூரிகைகளை யும் உன் சின்னக் கைகளில் சுமந்து வந்து செண்பக அருவிக்காட்சியை நீ வரைந்த போது; என் கண்ணிணைகளை உனக்களித்தேன். அந்த ஓவியத்தை எனக்கே எனக் களித்தபோது அதன் வண்ணக் கோவையின் அழகுக்கு என் கண் ஒளியினை உனக்கு உரிமை ஆக்கினேன்.

மறுநாள் குமரிமுனை சென்றோம். நீராடியபின் அள்ளி முடித்த கூந்தலுடன், மாலை வெய்யிலில் உன் முகத்தில் பூசிய மஞ்சள் ஒளியுமிழ, மங்களகரமான மஞ்சள் வண்ணக் கைத்தறிப் புடவை உடுத்து, கன்னித் தெய்வத்தின் அடிபணிந்து அவள் தந்த குங்குமத் திலகமணிந்து, கையில் ஒரு தாமரை மலருடன் நீ நடந்து வந்தாய்; கோதை! அப்போது உன்னைக் கண்ட என் கண்களில் ஆசையில்லை. என் அன்னை யைக் காண்பது போன்ற உணர்வுதான் இருந்தது. உன் தோற்றம் ஆண்டவன் இருக்கிறான் என்பதை எனக்கு உறுதிப்படுத்தியது.

அன்று காலை இருள் பிரிந்தும் பிரியாததுமான இளங்காலையில் வங்கக் கடலில் அலரும் தங்கக் கதிரவனைக் காண வேண்டுமென்று கடற்கரையில் நின்று கொண்டிருந்தபோது உன் கூந்தலில் சூடிய மல்லிகை மணமும், உன் மேனியில் கமழ்ந்த கத்தூரி மஞ்சளின் மணமும், என் உணர்வை நிறைக்க; என் முகரும் புலனை யும் உனக்கீந்தேன்.

இருள் செறிந்த கடலிலிருந்து ஒளிப்பிழம்பாய்க் கதிரவன் கவினுற உதித்த போது, "ஒரு இல்லாத பொருளில் இருந்து, ஒரு உள் பொருள் பிறக்கிறது" என்று நீ கூறியது இன்றுபோல் என் செவியில் ஒலிக்கிறது. இப்பொழுது நான் அமர்ந்திருக்கும் இதே பாறையில்தான் நாமிருவரும் அமர்ந்திருந்தோம். கடலலையின் அழகையெல்லாம் கவிதையாக ஏட்டில் வடித்துக்கொண்டிருந்த நீ திடீரென ஓடினுய் கடலை நோக்கி; நானும் தொடர்ந்தேன். நீ செல்வதற்குள் நீ தொடர்ந்து சென்ற அலை ஓடிவிட்டது. சிறு குழந்தையைப் போல் நீ சிணுங்கினுய். அடுத்தடுத்து வரும் கடல் அலைகள் உன் கால்களில் புரள நீ கை கொட்டி நகைத்தாய். மதுரையில் மற்ற பெண்களுடன் நகைக் கடையிலும் துணிக் கடையிலும் ஞானிபோல் அமர்ந்திருந்த நீ; கடற்கரையில் சங்குகளையும், கிளிஞ்சல்களையும் வாரி, வாரி மடியில் கட்டிக்கொள்கிருய். கருமணலையும், செம்மணலையும் உன்னுல் சுமக்க இயலாத நிலையிலும் சுமந்து கரை ஏறுகிருய். கோதை! உன் எண்ணங்கள் என்ன? உன் ஆசைகள் என்ன? உன்னை என்னுல் புரிந்துகொள்ள முடியாமல் தவித்தேன்.

"பெண்மை" என்ற தலைப்பில் நீ எழுதிய கவிதையை எனக்குத் தந்தாய். "பிறப்பு - கலப்பு - இறப்பு; மனிதன் ஒரு முறைதான் பிறக்கிருன், ஒரு முறைதான் இறக்கிருன். ஆனுல் கலப்பில் மட்டும் ஆணும் பெண்ணும் ஒருவருக்கு ஒருவராக இருப்பதில்லையே பல கருத்துக்களைச் சொல்வதைக்காட்டிலும் "ஒருவனுக்கு - ஒருத்தியென வாழ்வது என்ற ஒரே கருத்தைச் செயல்படுத்த வேண்டும்" என்ற கவிதையின் கருத்து என் உள்ளத்தை நிறைத்தது. இத்துடன் என் ஐம்புலன்களையும் நீ எடுத்துக் கொண்டாய். ஒரு பூவின் ஐந்து இதழ்களும் அடுக்கடுக்காய் அவிழ்வதைப்போல உன்னில் என்னை இழந்தேன். இனி எனக்கென்று ஒன்றுமே இல்லை. நான் ஒன்றுமே தெரியாதவன். உன்னைப்போன்று கருத்துக்களைத் தெளிக்க எனக்குத் தெரியாது. இருள் செறிந்த இல் பொருளாகிய கடல் நான். உலகியலை உணர்ந்து எல்லாம் தெரிந்த ஒளிப்பிழம்பாகிய உள் பொருள் நீ! கண்களால் பேசிக்கொண்டோ, கடிதங்களைப் பரிமாறிக்கொண்டோ அன்பை வளர்க்கவில்லை நாம். செம்மண் நிலத்தில் பெய்த மழைநீரில் நீரும் மண்ணும் வேறு வேருகத் தெரியாதைப்போல் நீயும் நானும் ஒன்றுபட்டோம்.

ஊர் திரும்பிய பின் நாமிருவரும் உலகறியப் பழகினேம். உன்னைப்பற்றிய ஒன்றையுமே நீ என்னிடம் மறைக்கவில்லை. நானும் அப்படித்தான். நப்பின்னைக்கும் இராதைக்கும், உருக்குமணிக்கும், ஆண்டாளுக்கும் சொந்தமான கண்ணனைப் போல வாழ்ந்து வந்த நான் பொருட்பெண்களின் பொய்மை முயக்கம் இருட்டறையில் அடையாளம் தெரியாத பிணத்தைத் தழுவியதை ஒக்கும் என்று நீ கூறிய குறட் கருத்தை முதன் முதலாகச் சந்தித்தபோது உன் சொற்பொழிவில் கேட்டு மனிதனுனேன். ஆனுலும் கோதை நான் உன் அன்பைப் பெற்ற பிறகு கடந்த காலத்தை உன்னிடம் கூறி வருந்தினேன். நீ சீறவில்லை. "ஒரு பிறப்பில் பல மங்கையர்க்கு உரிமையாக விளங்கிய கண்ணனுன ஆண்டவன் மறு பிறப்பில் சீதாராமனுக மட்டும் வாழவில்லையா? நீங்கள் திருந்தியதே மகிழ்ச்சி" என்ருய். ஒருவனுக்கு ஒருத்தியாய் வாழவேண்டும் என்று வற்புறுத்தும் நீ ஒவ்வொரு மனிதனும் திருந்தும்போது புதிய பிறவி எடுக்கிருன் என்று என்னை மன்னித்து மனிதனுக்கினுய். இனி நான் உன் கோபாலனுக மட்டும் வாழ்வேன்.

ஒருநாள் உன் இல்லத்திற்கு என்னை அழைத்துச் சென்ருய். விதவைத் தாயாரையும் ஆறு சகோதரிகளையும் காப்பாற்ற வேண்டியுள்ள உன் நிலையை நான்

நன்கு புரிந்துகொண்டேன். உனக்கெனத் தனி ஆசைகள் ஏன் இல்லை என்பதையும் புரிந்துகொண்டேன். உன் அன்னையின் உடலைக் கவலை எனும் அரக்கி பாதி தின்று விட்டாள். மறு பாதியைக் காசநோய் தின்றுகொண்டிருக்கிறது. நான் என்ன உதவிசெய்ய முடியும் உனக்கு! நானும் உன்னைப் போன்ற ஒரு தமிழாசிரியன் தானே!

உன் குடும்ப நன்மைக்காக நீ உன்னையே இன்னும் சற்று நேரத்தில் ஐம்பது வயதுக் கோபாலனுக்கு அர்ப்பணிக்கப் போகிறாய். உன்னையே என்றா சொன்னேன். தவறு! தவறு! சுடுநீர் வைத்துக் கொடுக்க ஆள் வேண்டும் என்று கேட்பவருக்குச் சமாதானம் கூறி ஓர் இளம் பெண்ணை மணந்து அடுத்த பத்தாவது மாதத்தில் அவளைத் தாயாராக்கும் இந்த இழிந்த சமுதாயத்திற்கு உன் பெண்மையைப் பலி கொடுக்கப் போகிறாய்.

நமக்குத் தெரிந்தவர்கள் உன்னைத்தூற்றுகின்றனர். வெறும் வாய்வீச்சுக் காரி என்கின்றனர். "நம் எதிரிலேயே கோபாலனுடன் பழகிவிட்டு நமக்கே திருமண அழைப்பிதழ் அனுப்பியிருக்கிறாளே என்ன துணிச்சல் இவளுக்கு. பாவம் கோபாலன்" என்றார் தமிழய்யா!

கோதை! உன்னை எனக்கு நன்றாகத் தெரியும். புறாவுக்காகத் தன் உடலை அறுத்துக்கொடுத்த சிபியும், முல்லைக்குத் தேரீந்த பாரியும் உன்முன் தாழ்ந்து விட்டனர் இன்று. என்னை எல்லோரும் பைத்தியக்காரன் என்று இகழலாம். ஆனால் கோதை! நீ யாரும் செய்ய முடியாத தியாகத்தைச் செய்துவிட்டாய். பெண்ணின் பெருந்தக்கயாவுள கற்பெனும் திண்மை உண்டாகப் பெறின் என்று வள்ளுவரால் வணங்கப் பெறும் மன ஒருமைப்பாடெனும் அரிய செல்வத்தை, பெண்ணின் அணிகலனை, பெண்மை எனும் கண் ஒளியை உன் குடும்ப நலனுக்காக இழக்கத் துணிந்து விட்டாய்.

என்னுடன் கலந்து ஒருவனுக்கு - ஒருத்தியென்ற உயரிய இலட்சியத்தை உன் உயிரெனக் கொண்ட நீ ஆடம்பரத்திற்கும், அணிகலன்களுக்கும் ஆசைப் பட்டிருப்பாய் என்று இவர்கள் கூறுகின்றனரே! கோதை! உன்னை எத்துணை வருத்திக்கொண்டு இத்திருமணத்திற்குச் சம்மதித்திருப்பாய் என்று நானறிவேன். எந்தப் பெண்ணுமே செய்யமுடியாத தியாக வேள்வியில் குதித்துவிட்டாய். உன் மணாளன் பாரிச வாயுவால் படுக்கையில் செயலற்றுக் கிடப்பவன் என்பது மற்றவர் களுக்குத் தெரியாது. தெரிந்தும் பயன் இல்லை. படுக்கையில் இருக்கும்போதும் திருமண அழைப்பிதழ் அடித்து, ஆயிரம் பேரை அழைத்து ஆடம்பரமாகச் செலவு செய்து அன்பளிப்புகள் பெற விரும்பும் உன் உள்ளத்தையும் நான் அறிவேன். கோதை! இனி நீ பாடமாட்டாய்! பேசமாட்டாய்! வண்ண ஓவியங்களை வரைய மாட்டாய். வளஞ்சொரியும் கருத்துக்களை வழங்கமாட்டாய்.

கடமை எனும் கட்டாரி பாய்ந்து ஊமையாகிவிட்டது, அந்தக் கோதை என்னும் குயில். அன்புத் தெய்வத்திற்கு அணிவிக்கப்படவேண்டிய அந்தக் கோதை இந்நேரம் ஓர் உயிருள்ள பிணத்திற்குச் சாத்தப்பட்டிருக்கும்.

# இலக்கியம் கண்ட காவிரி

திரு. எம். முத்து,
துணைச் செயலாளர், தமிழ் இலக்கியப் பேரவை, ஈரோடு.

நமது ஊரின் அருகில் ஓடி நம்மையெல்லாம் வாழ்விக்கும் காவிரி தென் இந்தியாவில் பாயும் ஆறுகளிலெல்லாம் தலை சிறந்ததாகும். என்றும் வற்றமல் ஆண்டு முழுவதும் நீர் ஓடுவதால், காவிரி ஒரு ஜீவநதியாகக் கருதப்படுகிறது. இந்நதி குடகு நாட்டில் மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகி, மைசூர், சேலம், கோயமுத்தூர் திருச்சி, தஞ்சை மாவட்டங்களின் வழியாக ஓடி முடிவில் வங்காள விரிகுடாவில் கலந்து விடுகிறது. இந்நதி வற்ருது வளம் தருவதால் என்றும் நன்றி மறவாத தமிழ் மக்களாகிய நாம், இதைக் காவிரியன்னை என்று போற்றியும், இதை ஒரு புண்ணிய தீர்த்தமாகப் போற்றியும் தெய்வத்தன்மை கொடுத்தும் கொண்டாடுகிறோம்.

" கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்குதன் குமரித் துறையாடிலென்
ஓங்குமா கடல் ஓதநீர் ஆடிலென்
எங்கும் ஈசன் என்னு தவர்க்கில்லையே "

என்ற அப்பர் பாடலும், " தண்ணருங் காவிரித் தாதுமலி பெருந்துறைப், புண்ணிய நன்னீர் பொற்குடத்து ஏந்தி " என்ற சிலம்பின் சொல்லும் சான்றுகளாகும். மேலும் இளங்கோவடிகள், " தெய்வக் காவிரித்தீதுதீர் சிறப்பும் " என்று பாடியுள்ளார். திருமாலை என்ற நூலில் அதன் ஆசிரியர் தொண்டரடிப் பொடியாழ்வார்,

" கங்கையிற் புனிதமாய காவிடு நடுவுபாட்டு,
பொங்குநீர் பரந்துபாயும் பூம்பொழில் அரங்கம் தன்னுள் "

என்று காவிரியைக் கங்கைக்கு இணையாகக் கருதிப் பாராட்டுகிருர்.

அடுத்துக் காவிரிக்கு இப்பெயர் ஏன் வந்தது என்பது பற்றிச் சிறிது பார்ப் போம். இந்திரன் இறைவழிபாட்டுக்கு வேண்டிய புஷ்பச் செடிகள் நிறைந்த நந்த வனம் ஒன்றை அமைத்திருந்தான். போதுமான நீர் இல்லாமல் நந்தவனம் வாடும் நிலை வரவே, இந்திரன் தண்ணீர்த் தட்டுப்பாட்டை நீக்கும்படி விநாயகரை வேண்டி ருன். மேற்குத் தொடர்ச்சி மலையில் தவம் இருந்த அகத்தியரின் கமண்டலத்தில் அடைக்கப்பட்டிருந்த அகத்தியரின் மனைவியாகிய காவிரியை வெளியேற்றிஞல் இந்திரன் குறை நீங்கும் என நினைத்த விநாயகர், ஒரு காகமாக உருக்கொண்டு அகத்தியரின் கமண்டலத்தை உருட்டி விட்டார்.

கமண்டலத்திலிருந்து வெளியேறிய காவிரி இந்திரனது நந்தவனத்தைச் செழிக்கச் செய்தாள். காகத்தால் கவிழ்க்கப்பட்டு விரிந்து பெருகிய ஆறு ஆதலால் " காகவிரி " என வழங்கலாயிற்று. இதுவே பிற்காலத்தில் " காவிரி " என மருவியது என்று கூறுகிறது புராண வரலாறு. இதற்குக் காவேரி என்ற பெயரும் உண்டு. " நடந்தாய் வாழி காவேரி " எனச் சிலம்பில் அழைக்கப்படுவது காண்க.

காவிரியன்னேக்குப் "பொன்னி" என்ற பெயரும் வழங்குகிறது. காவிரியின் நீரில் பொன் அணுக்கள் கலந்துள்ளமையால் இப் பெயர் பெற்றது என்றும், காவிரியால் வளம் பெறும் நாடுகளில் எல்லாம் பொன் (செல்வம்) கொழிப்பதால் அப்பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

"திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி" எனத் திருமாலேயில் வருவது காண்க.

இவ்வளவு சிறப்புப் பெற்ற காவிரியின் கரையில் அமைந்த நகரங்களில் பிறந்து வாழ்ந்த புலவர் பெருமக்கள் அவ்வாழ்வின் பயனுகச் சிறந்த நாகரீகத்தை வளர்க்கும் சிறந்த இலக்கியங்கள் பல இயற்றினர். உண்மையில் நடந்த வரலாறு, கற்பனைக் கதைகள் என இரண்டு வகையான இலக்கியங்கள் தோன்றின. கோவூர்க் கிழார், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனுர், உறையூர் முதுகண்ணன் சாத்தனுர் முதலியோர் காவிரி பாயும் சோழ நாட்டைச் சேர்ந்தவர்களே. சேர நாட்டைச் சேர்ந்த இளங்கோவும் காவிரியை பல இடங்களில் சிறப்பித்துள்ளார். "ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும் காவிரி நாடன்திகிரி போல் பொற் கோட்டு மேரு வலந்திரிதலான்" என மங்கல வாழ்த்திலும், "பரப்பு நீர்க்காவிரிப் பாவைதன் புதல்வர்" என 'நாடுகாண் காதையில்' வேளாண்மை செய்பவர்களை யெல்லாம் காவிரியின் புதல்வர்கள் என்றும் கூறுகிருர். மற்ருெரு காதையில் இளங்கோவடிகள் காவிரியை மிகவும் அழகாகக் காட்டுகிருர். அது பின்வருமாறு.

இப்பாடலில் இளங்கோ காவிரியின் வருகையைப் பாடல் பொருளாய் அமைத்துப் பாடுகிருர். மிகவும் ஏற்ற பொருள்தான். காடு மலையெல்லாம் குதித்துக் கடந்து வந்த காவிரி சோழவள நாட்டில் அன்ன நடை போடுகிருள். அவள் நடை அழகு எப்படி. காவிரியின் இரு மருங்கிலும் பசுமைச் செடி கொடிகளும், வண்ணமலர்கள் பூத்து நிற்கும் மலர்ச்செடிகளும் வளர்ந்துள்ளன. தேனுக்காகவும், மகரந்தப் பொடிக்காகவும் வண்டுகள் இச்செடிகளை வட்டமிட்டு ரீங்காரம் செய் கின்றன. ஆற்றின் இருமருங்கிலும் பூத்துக் கிடக்கும் மலர்கள் பறிப்பார் இன்றி, அவைகளே காவிரியின் வண்ண ஆடைகளாய்த் திகழ்கின்றன. காவிரியில் உள்ள கெண்டை மீன்கள் வண்டின் ரீங்கார ஓசை கேட்டு இது என்ன ஓசை என்று அறியத் தங்கள் அழகிய விழிகளை விழித்தவாறு நீருக்கு வெளியே தலையை அடிக்கடி நீட்டிக் குதிக்கின்றன. இவைகளே காவிரியின் கண்களாய் அமைகின்றன. இந்த இயற்கைக் காட்சியை மிகவும் அழகாக அமைத்துள்ளார் இளங்கோவடிகள். "மலர்களாகிய வண்ண ஆடைகளை அணிந்து கொண்டு, வண்டுகளின் இசை கேட்ட பெருமையுடன் தலை நிமிர்ந்து நடைபயிலும் காவிரி! பெருமையும் பூரிப்பும் நிறைந்த உன் நடைக்குக் காரணம் என்ன தெரியுமா? அக்காரணம் எனக்குத் தெரியும்? எல்லாவற்றுக்கும் காரணம் உன் கணவனே. உன்னை மணந்த கணவராகிய சோழ நாட்டு அரசன் நீதி தவருமல் அரசோச்சுகின்ருன். அவனை அனைவரும் புகழ்ந்து பாராட்டுகின்றனர். உன் கணவனது பெருமையால் நீ பூரித்துப் போய் பெருமை யுடன் நடை போடுகிருய்" எனப் பாராட்டுகிருர். இனி அப்பாட்டை பார்ப்போமாக.

"மருங்குவண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூ ஆடை அது போர்த்துப்
கருங்கயற் கண் விழித்தொல்கி
நடந்தாய் வாழி காவேரி!

கருங்கயற்கண் விழித்து ஒல்கி
நடந்த வெல்லாம் நின் கணவன்
திருந்து செங்கோல் வளையாமை
அறிந்தேன் வாழி காவேரி ! "

இத்துடன் அமையாது, " தாங்கா விளையுள் காவேரி நாடு " எனவும், " தெய்வக் காவேரி தீது தீர் சிறப்பும் " என்றும் பலவாராகப் பாராட்டியுள்ளார்.

இவ்வளவு சிறப்பாக இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள காவிரி, உண்மையிலேயே இச்சிறப்புக்களுக்கு உரியவளா என்று கேட்பின், " இவ்வளவு சிறப்புகளுக்கும் உரியவளே " என்று தான் கூற வேண்டும். ஒரு குழந்தையைப் பெற்றெடுத்த தாய், அக் குழந்தையை மிகவும் சிரமப்பட்டு வளர்ப்பது போலக்காவிரியன்னை குறிப்பாக இன்றைய மனித சமுதாயத்தின் தேவைகளை உற்பத்தி செய்யும் சக்தியாக விளங்குகிருள். நமக்கு வேண்டிய உணவுப் பொருள்கள், உடைகள் தயாரிக்க உதவும் பருத்தி போன்ற பொருள்கள் காவிரி நீர் இன்றி விளையுமா ? இன்றைய நாகரீக உலகின் உயிர்த் துடிப்பாக இருக்கும் பல்வேறு விதமான ஆடைகளை உற்பத்தி செய்யும் ஆலைகளும், மற்றும் முக்கியமான பொருள்களை உற்பத்தி செய்யும் ஆலைகளும் ஓட உதவுவது எது ? மின்சாரம். சென்னை மற்றும் மைசூர் இராச்சியங்களுக்குத் தேவையான அளவு மின்சாரம் நம் காவிரியன்னையிடம் இருந்து எடுக்கப்படுகிறது. இவ்வாறு இன்றைய சமுதாயத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் காவிரியன்னை மேலே கூறப்பட்ட சிறப்புக்களுக்கெல்லாம் உரியவளே என்று காவிரியைப் போற்றுவோமாக. வாழ்க காவிரி ! வளர்க தமிழ் !

# தமிழ்க் கடற்றுளிகள்

தமிழன்பன் கு. பண்டரிநாதன்,
ஈரோடு.



உலகம் சால நீண்டு பரந்தது. அதில் அளவிடற்கரிய உயிரினங்கள் வாழ்ந்து வருகின்றன. அவ்வளவிடற்கரிய உயிரினங்கள் எல்லாவற்றிலும் மானிட வுயிரே மேம்பட்டு விளங்குகிறது. உலகெலாம் பரந்துள அம்மானிடர் உணர்ந்து பேசப்படும் மொழிகளுக்கெல்லாம் தலைமை தாங்கி இத்தரணியில் பரணிபாடித் திகழும் மொழி தன்னிகரிலாத் தண்டமிழ் மொழியொன்றேயாம். அம்மொழி பேசப் படுகின்ற நம் நந்தாமணியாம் ஞானத் தமிழகம் எங்கே கிளைத்ததென்று துருவி யாய்ந்தோமானால் சங்கநூற் கடலிலே தவழ்ந்து விளையாடும் அத்தாயகத்தை, வளம்பல கொழிக்கும் நம் தமிழகத்தைக் கண்டும் கேட்டும் களிபேருவகை யெய்தலாம்.

உலகிலே பலப்பல மலைகளும் ஆறுகளும் உள்ளன. அதுபோலவே மக்களும் வாழ்கின்றனர். ஆனால் அம்மக்களெல்லாம் பொன்னியைப் போன்று பயன்படுவது மில்லை; இமயம் போன்று சிறந்த வாழ்வு வாழ்வதுமில்லை. ஆனால் நம் சங்கத் தமிழகத்தில் பொன்னியைப் போன்றும், என்றும் தன்னிலை தளராப் பனிமலை போன் றும் வாழ்ந்த புலவர்களும் புரவலர்களும் எண்ணிலர். பழுமரமாய் ஊருண் கேணியாய் வாழ்ந்த அவர்களால் சொற்செட்டும், பொருட்செறிவும் ததும்ப இயற்றிய தமிழ் நூல்கள் தமிழ் மக்களின் உயர்வையும் சிறப்பையும் பண்பையும் நாகரீகத்தையும் ஏழ்கடல் வைப்பினும் தன் தண்மணம் வீசும் தண்டமிழின் தனிச்சிறப்பையும் குன்றின் மேலிட்ட விளக்குப்போல் விண்ணின் கோள்களிடை விளங்கும் வெண்டிங் கள் போல் குவலயமெங்குங் காட்டி அணி பெறத் திகழ்கிறது.

அவர்களியற்றிய அவ்வாழ்விலக்கியங்களெல்லாம் பெரும்பாலும் தொகுப்பு நூல்களே. காலத்தாலும் இடத்தாலும் பிறவற்றாலும் வேறுபட்டு வாழ்ந்த அவர்க ளால் கூறப்பட்டுள்ள நூல்களைக் கருத்துக் கேற்பப் பிரித்து அகம் புறம் என்ற அளவுகள் முதலியவற்றால் அமையவும் தொகுத்த நூல்களே பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் பதினெண்கீழ்க்கணக்கும் அச்சங்க காலத்தை யொட்டித் தனிப் பேரிலக் கியங்களாக எழுந்த ஐம்பெருங்காப்பியங்களுமாம். அவற்றுள் சிலம்பும் மேகலையும் ஒரே காலத்தில் எழுதப்பட்டவையாகும். சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகியவை காலத்தால் பிந்தியவை. இம்மூன்றனுள்ளும் முற்றும் கிடைக்கப் பெறுதவை வளையாபதியும் குண்டல கேசியுமாம். மேலும் எட்டுத் தொகையிலுள்ள

பதிற்றுப் பத்தில் முதலும் இறுதியுமில்லை ஆதியும் அந்தமுமில்லா அரும் பெரும் சோதியைப் போன்று. எட்டுத்தொகையிலுள்ள இப்பதிற்றுப்பத்தும் புறநானூறும் புறப்பொருளைச் சார்ந்தது. பரிபாடலில் அகம் புறம் ஆகிய இரண்டும் கலந்துள்ளன. ஏனைய நூல்களெல்லாம் அகத்தைப்பற்றியவையேயாம். கன்னித் தமிழில் அகப் பொருளே நிறைந்துள்ளது. சங்க இலக்கியங்களிலிருந்தும் பிற்காலத்தெழுந்த இலக்கியங்களிலிருந்தும் சிறிது பருகுவோம்.

உலகுவப்பப் பலரும் புகழ நீலக்கடற் பரப்பிலே கனகச்சடை விரித்தாற் போல் தன் செங்கதிர்ப் பிழம்பை விரித்து வீசி யெறிகின்றான் காலைக் கதிரோன். அக்காட்சி கண்டு அமைதி பெறாத சங்கத் தமிழ்த் தலைவனுக்குப் புற இருளைப் போக்கும் அக்கதிரவனது காட்சி, அக இருளைப் போக்கும் ஒப்பற்ற ஓர்பழம் பெரும் பரஞ்சுடரது காட்சி நினைவுக்கு வந்தது. அக்காலைக் கதிரவனது தோற்றத்தையும், திரையெறியும் அலைவாய் உகந்த வடிவேலனது எழில் உருவ உதயத்தையும் ஒன்றாக இணைத்துப் பாடி அமைதியுற்றார். அவ்வாறு அவர் பாடிய அடிகளே திருமுருகாற்றுப் படையின் உதயமாகக் காட்சியளிக்கின்றது. இதோ அவ்வடிகள்.

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி"

இறைவன் திருவுருவிலே பிறவிப் பெருங்கடல் கடக்கும் பேரின்பத் தோணி அவன் பாதமேயாம். அடியார் அனைவரும் அவன் பாதமே பற்றுக் கோடாகக் கொண்டுள்ளனர் என்பதைக் கீழுள்ள அடிகளால் அறியலாம். குறளில், கடவுள் வாழ்த்தில், 'அடி, தாள்' என்றும், 'நின்னிற் சிறந்த நின்றா ளிணையவை' என்று பரிபாடலிலும், 'நீலமேனி வாலிழை பாகத் தொருவனிருதாள்' என்று ஐங்குறு நூற்றுக் கடவுள் வாழ்த்திலும், 'உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாள்' என்ற முருகாற்றுப்படை முதலியவற்றாலு மறியலாம். முருகாற்றுப்படை முழுதும் என்று மழியாக் கைபுனைந்தியற்றாக் கவின்பெரு வனப்பையும் முருகப் பெருமானின் மாபெருஞ் சிறப்பையும் திறமையையும் எடுத்துக் காட்டியுள்ளார் நம் நக்கீரனார்.

"அகநகர் வியன்முற் றத்து" என்று தொடங்கி "கொழும்பல் குடிச் செழும் பாக்கத்து" என்ற அடிவரை உள்ள பட்டினப்பாலை அடிகளால் நந்தமிழ் நாட்டு வளப்பம் அறியக் கிடக்கிறது. ஈண்டு, இதே கருத்தை "பொற்சிறு தேர்மிசை" என்று தொடங்கும் சிந்தாமணிப் பாடல் கூறுவதையும் காணலாம்.

பொருள் வேண்டிப் பிரிந்து சென்ற தலைவன், குறித்த காலத்தில் வாராமை கண்டு ஆற்றாளாகித் தன் தோழியிடம் தலைவி யொருத்தி, "என் தோள்களெல்லாம் மெலிந்துவிட்டது; அவர் வருகிறேன் என்று கூறிச் சென்ற காலமும் கடந்துவிட்டது; அவர் வரும் வழிமேல் விழிவைத்துக் காத்திருந்து என் கண்களெல்லாம் பொலிவையும் ஒளியையும் இழந்தன; என்னறிவு என்னைவிட்டு அகன்றுவிட்டது. பண்டுள துன்பங்களெல்லாம் மீண்டும் மீண்டும் வந்து வருத்திப் பெருகுகின்றன; மாலைவேளை யும் வந்துவிட்டது; இந்த நிலைமையில் நான் சாவதற்கு அஞ்சவில்லை; எனினும் அஞ்சுகிறேன்; காரணம், இறந்த பின்னர் வேறோர் பிறப்பாமாயின் என் தலைவனை மறந்து விடுவேனோ என்பதுதான்" என்று கூறுகின்றாள்.

"..................................................................... ஈங்கோ
சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவின்
பிறப்புப் பிரிது ஆகுவது ஆயின்
மறக்குவேன்கொல் என்காதலன் எனவே"

— நற்றிணை : 397

இத்தலைமகள் போலவே நாவுக்கரசரும், தண்பசுமையிலை களிடைத் தழல் நிறம் விசி மலர் செந்தாமரைக் காடனைய மேனியுடை நீலமணி மிடற்றான் பெயர், இறந்த பின்னர் மறுபிறப்பாமாயின் மறந்து விடுவனே என்று சாவைக் கண்டு அஞ்சுகின்றார்.

"துறக்கப்படாத உடலைத் துறந்துவெந் தூதுவரோடு
இறப்பன் இறந்தால் இருவிசும் பேறுவ னேறிவந்து
பிறப்பன் பிறந்தால் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோ என்றென் உள்ளங்கிடந் து மறுகிடுமே"

என்னுமிப் பாடலைத் தலைவி கூறியதாக உள்ள அப்பாடலோடு ஒப்புநோக்கி ஓர்க.

உயர்ந்தவர்க்கு உதவிய உதவி ஒப்ப ஓங்கு புகழ் சொல்லின், சொல்லிறந்து நின்ற தன்மையாய குறளில், "ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்; பின்சாரப் பொய்யாமை நன்று" என்று கூறுகின்ற வழி நின்று ஒழுகினோமேயானால் அக்குறளில் கூறப்பட்டுள்ள ஒழுக்கங்கள் அனைத்தும் சங்கிலித் தொடர்போல் இணைந்து உயர் வாழ்வு வாழச் செய்யும். நிற்க

பெருநிலம் முழுதாளும் பெருமகன்றலைவைத்த ஒரு தனிக் குடிகளோடு உயர்ந்தோங்கு செல்வமுடைய மாசாத்துவான் மகன் கோவலன் தன் மனைவியது காற்பண்ணமை சிலம்பு பகர்தல் (விற்றல்) வேண்டி மதுரை மூதூர் சென்று கொலைக் களப்பட்டனன். அது கேட்டுப் பொங்கி எழுந்த அவன் மனைவி நிலைக்களங்காணாது நெடுங்கணீர் உகுத்து, விரித்த கூந்தலும் கையிற் றனிச் சிலம்புடனும் தேரா மன்னன் தென்னவன் முன் சென்று வழக்குரைத்து வென்று நிலைகெழுகூடல் நீளெரி யூட்டினாள். அவள் வரலாற்றைத் தண்டமிழாசான் சாத்தனார் கூறக்கேட்ட, இமிழ் கடல்வரைப்பின் தமிழகம் அறியத் தமிழ் முழுதறிந்த தன்மையனாய, குணவாயிற் கோட்டத் தரசு துறந்திருந்த குடக்கோச் சேரல் இளங்கோவடிகள், நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரமாம் ஓர் மணியாரம் ஆக ஆக்கித்தந்தார். இந்நெஞ்சையள்ளும் சிலம்பினுள் வழக்குரை காதையில்

"...................................... ......................தென்னவன்
கோப்பெருந்தேவி குலைந்தனள் நடுங்கி
கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில் லென்று
இணையடி தொழுது வீழ்ந்தனளே மடமொழி,"

என்று இளங்கோவடிகள் கூறுகின்றார். "தன் கணவனை இழந்தவர்க்குக் காட்டுவது வேறொன்றுமில்லையெனக் கூறிய கோப்பெருந்தேவி, தன் கணவன் இணையடி தொழுது வீழ்ந்திறந்தாள்" என்றும், "தன் கணவனை இழந்தவர்க்குக் காட்டுவது வேறு ஒன்றும் இல்லை; என் கணவரை மன்னித்துவிடு எனக் கூறிக்

கண்ணகியின் இணையடி தொழுது அவள் வீழ்ந்திறந்தாள் " என்றும் ஈண்டு இருவிதமாகப் பொருள் கொள்ளலாம். அடுத்துக் கம்பராமாயணம் காண்போம்.

கற்பவர் ஊனையும் நின்றுருக்கி உயிராய் உணர்வாய் உட்கலந்து தேனாய் அமுதமாய்த் திங்கரும்பின் கட்டியுமாய் சங்க இலக்கியங்களின் சுவைப் பிழிவாய்த் தமிழ்த் தாயின் திலகமாய் விளங்குகிறது கம்பராமாயணம். செயிரிலா உலகினில் 'சென்று நின்று' வாழ் உயிரெலாம் உறைவதோ ருடம்பாகி வறிஞன் ஓம்புமோர் செய்யெனக் காத்த தருகை நீண்ட தடக்கைத் தயரதன் அறுபதினாயிரம் ஆண்டுகள் மாண்டுற்ற பின்னர், மின்சுடர் விண்ணும் மண்ணும் விரிந்த போர் அரக்கர் என்னும் கான்சுட முளைத்த கற்பின் கனலியைக் கரம் பற்றிய கருமுகில் கொடுந் தெழிற் சோதியாம் இராமனைப் பெற்றெடுத்தான்; அவன் வரலாறு கூறுவது கம்பராமாயணம். சொற்பொருட் செறிவு, நயம், உவமை, இயற்கைவளம், நீதி, ஆய்ந்துணர்கின்ற தன்மை, முத்தமிழின் நடை, 'சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை வெல்லுஞ் சொல் இன்மையறிந்து' என்ற குறளுக்கேற்ப அமைந்துள்ள சொற்களின் தன்மை முதலியவை அவன் வரலாறு கூறுகின்ற இப் பெருங் காப்பியத்தினுள் மலிந்துள்ளன.

அரவிந்த மலர் நீங்கி அடியிணை படியில் தோய வந்த சனகன் பெற்ற அன்னத்தைக் கண்டு கலங்கிய இராமன் விடியளவும் விழித்திருந்த பின்னர் தெளிவு பெற்ற உள்ளத்தினனாய்த் துயில்கின்றான். நுதல் கிழித்த விழியேபோல் உதயஞ் செய்த கதிரவனின் இளங்கதிர்கள் அவன் பாதத்தில் வீசுகின்றது; இதுவே நிகழ்ந்த செயல்; இதை வைத்துக் கொண்டு கம்பர் தன் கவிதைத் திறத்தையும் கற்பனை நயத்தையும் அழகுற அமைத்துள்ளது கண்டு வியக்கற்பாலதாம். அவர் கூறிய அப் பாடலின் பொருள் கீழ் வருமாறு :—

ஊர்ந்தும் நின்றும் (சென்று நின்று) வாழ்கின்ற உயிரது துன்பம் நீங்க இகல் அரக்கர் குலம் தொலைப்பான் வேண்டி சக்கரத்தை நீக்கி வல்வில் கைக்கொண்ட திருமாலாய இராமன், ஆதிசேடனது ஆயிரம் திருவாயினின்றும் ஆயிரம் மாணிக்கப் பரல்கள் ஒளி சிந்த, அவ்வாதி சேடனாகிய பாம்பணைமீது திருப்பாற் கடலில் அறிதுயில் கொண்டு இனிதுடன் இருப்பதை விட்டு, ஆழினனற் பெருங்கடலிற் பட்டு மயங்கிக் கிடக்கின்றான். ஒளியுடை ஒற்றைச் சக்கரத் தேருடை சூரியன் தன்காலையிளங் கதிர்களாய கரங்களால் அவன் பாதங்களைத் தொட்டு மெல்லத் தடவித் துயிலெழுப்ப இரவாகிய கடலின் கரையைக் கண்டான் (விழித்தெழுந்தான்).

" கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச் சிலைதடக்கை கொண்ட கொண்டல்
எல்லாழித் தேரிரவி யிளங்கரத்தா லடிவருடி யனந்தல் தீர்ப்ப
அல்லாழிக் கரைகண்டா னாயிரம்வாய் மணிவிளக்க மழலுஞ் சேக்கைத்
தொல்லாழித் துயிலாதே துயராழி இடைக்கிடந்து துயில்கின்றானே. "

இப்பாடலில் கவிஞர் நமக்கு வழிவழியாய் வந்த ஓர் வழக்கத்தை நினைவு படுத்துகிறார்; அஃதாவது சான்றோர் துயில்கின்ற போது மென்கரத்தால் பாதம் தொட்டு எழுப்புதலாம். கம்பர் கூறுகின்ற உவமை சொற்பொருட் செறிவு வியக்கத் தக்கதாகும். மாவலிச் சக்கரவர்த்தி வரலாறு கூறுங்காலை, "நீல நிறத்து நெடுங்

தகை வந்தோர் ஆலமர் வித்தின் அருங்குறளானுன்" என்றும், "உயர்ந்தவர்க் குதவிய உதவி ஒப்ப வியந்தவர் வெருக்கொள விசும்பின் ஓங்கினுன்" என்றும், "கருநெருப்பி னிடையே யெழுந்த வெண்ணெருப்பே" யென்றும், "கையால் எடுத் தது கண்டனர் இற்றது கேட்டார்" என்றும், தாயிடம் சானகம் செல்ல வருகின்ற இராமனை, அவன் கோலம் கண்டு, கோசலை 'குழைந்து வாழ்த்தி' நெடுமுடி புனைதற்கு இடையூறுண்டோ?' என்று கேட்கின்ற இடமும், "தழைக்கின்ற உள்ளத் தன்னுள்" என்று கோசலையைக் கம்பன் கூறுகின்ற இடமும் சுவைத்து உணரற்பால தொன்றும்.

அந்தமி லின்பத் தழிவிற் பேரின்பப் பெருவெள்ளத்துட் திளைக்கின்ற பெரிய புராணம், திருவிளையாடற் புராணம் முதலிய நூல்களும் ஏனைய நூல்களும் விரிக்கிற் பெருகு மாதலின் இத்துடன் அமைந்து தமிழ் நூற்கடல் படித்துணருமாறு வேண்டுகிறேன்.

**வாழ்க தமிழ்த்தாய்! வளர்க தமிழ்!!**

# இலக்கிய மனிதனும் - இயந்திர மனிதனும்

இருமொழிச் சொற்கொண்டல் எஸ். மீனுட்சிசுந்தர முதலியார், பி. ஏ., எல். டி.,
முதல்வர், கலைமகள் கல்வி நிலையம், ஈரோடு.

சுப்பிரமணிய பாரதியார் அமரராவதற்குச் சில மாதங்களுக்கு முன்பு அவரோடு பேசிக் கொண்டிருக்கும் போது திடீரென்று என்னைப் பின்வருமாறு கேட்டார்: "நீ பாற்கடல் உண்டு என்று நம்புகின்ருயா ?" "இல்லே," எனப் பதில் கூறினேன். "தேவர்களும் அசுரர்களும் அக்கடலேக் கடைந்த கதையை நீ நம்புகின்ருயா ?" என்ற அடுத்த கேள்வியைப் போட்டார். "அதெல்லாம் கற்பனை" என்றேன். "ஆம், ஆம், ஒவ்வொருவருடைய உள்ளமும் பாற்கடல்; அங்கே திருமால் பள்ளி கொண்டிருக்கின்ருர். தேவர்களாகிய நல்லெண்ணங்களும், அசுரர்களாகிய தீய எண்ணங்களும் அடிக்கடி உள்ளமாகிய பாற்கடலேக் கடைந்து கொண்டே இருக்கின்றன. விலங்கினத்தினின்று தோன்றிய மனிதனுக்குத் திடீரென விலங்கு உணர்ச்சி தோன்றுவது இயல்பு. ஆனுல் உடனே மனச்சாட்சி அவனை நன்மைக்கு இழுக்கின்றது. எனவேதான் பாற்கடலில் முதலில் தோன்றியவள் மூதேவி, பிறகுதான் சீதேவி எனவும் கூறப்பட்டுள்ளது. அன்பு பொய், அறம் பொய், சத்தியம் பொய், உண்டு உடுத்து வாழ்வதே மெய் என்ற ஆலகால விஷமும் அதே பாற்கடலில் தோன்றியது; அமிர்தமும் அங்கு தான் தோன்றியது. அ+மிருத்யு மரணத்தை நீக்குவது. ஞானிக்கு மரணமேது. இது தான் இக்கதையின் பொருள்" என்று கூறி முடித்தார்.

மனித உள்ளத்தை அசுர இயல்பும் தேவ இயல்பும் கடைவதை நாம் ஒவ்வொருவரும் அறிவோம். இறைவனைச் சரணடைந்தால் அன்று ஆலகால விஷத்தையுண்டு அமிர்தத்தை அவன் வழங்கியது போல நம்மையும் மரணமிலாப் பெருவாழ்வு வாழ அருள் புரிகின்ருன்.

தனி மனிதன் உள்ளத்திலே இவ்விரு தன்மைகளும் இருப்பது போலவே சமுதாயத்திலும் அசுர சம்பத்தை விரும்புவோரும் தேவ சம்பத்தை விரும்புவோரும் உண்டு. யார் யார் வையத்து வாழ்வாங்கு வாழ பெரு முயற்சி செய்கின்ருர்களோ, யார் யார் அறமும், அன்பும், அருளேயும் வேண்டி அந்த இலக்கை நோக்கி வாழ்க்கைப் படகைச் செலுத்துகின்ருர்களோ அவர்கள் இலக்கிய மனிதர்கள். யார் யார் பொன்னேயும், பொருளேயும், போகத்தையும் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு வாழ்கின்ருர்களோ அவர்கள் இயந்திர மனிதர்கள்.

பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற்கரிய பிரானடி பேணுர்
பெறுதற்கரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற்கரிய பேறிழந் தார்களே !

என்று இரக்கப்படுகின்ருர் திருமூலதேவர். 'நந்தவனத்தில் ஓர் ஆண்டி அவன் நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி கொண்டு வந்தானொரு தோண்டி, அதைக் கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி.' என்பது போல் வயிறு வளர்ப் பதையே வாழ்வாக எண்ணி எவ்வளவு பாவங்களை நாம் செய்கிறோம். பெரிய வீடு, நிறை நிலம், இரண்டொரு கார், சொத்து சுகம் இவைகளை உண்மை யெனக் கொண்டு எவ்வளவு தகாத காரியங்கள் நடக்கின்றன. இன்று மக்களிடம் காணப் படும் பதவி மோகம், பண ஆசை, ஒழுக்கக்கேடு, என்றுமே நம் நாட்டில் இருந்ததில்லை எனத் துணிந்து கூறலாம்.

கார்காலம் முடிந்ததும் வருவதாகக் கூறிச் சென்ற சுக்ரீவன் பதவியில் உட்கார்ந்ததும், நன்றி கொன்ருன், கடமையை மறந்தான். அப்போது இராமர் அவனைப்பற்றி இலக்குமணனிடத்தில் " அறம் மறந்தனன்... வாழ்வின் மயங்கினான்" என்கின்ருர். இன்று நம் நாட்டில் காணும் வாழ்வின் அற்ப சுகங்களுக்காக அறம் மறந்து இழிவானவற்றைச் செய்யும் மனப்பாங்கு ஒரு சிமெண்டுத் தொழிற்சாலையில் ஒரு இயந்திரத்தில் பெரிய பெரிய கற்கள் வீசி எறியப்படுகின்றன. அவைகளை அந்த யந்திரம் தூள் தூளாக உடைத்து வெளியே அனுப்புகின்றது. ஒரு மனிதன் அதனுள் தவறி விழுந்து விட்டால் அவன் கதியும் அக் கற்களின் கதிதான். அந்த யந்திரத்தினிடம் ஈவு, இரக்கம், அன்பு, அறம் இவைகளைக் காண முடியுமா? அப்படியே இயந்திர மனிதனும் பிறர் சுக துக்கங்களைப்பற்றிக் கவலைப்படான். தன் சுக போகத்தையே பெரிதெனக் கருதிச் சமுதாயத்தைச் சுரண்டுவார்கள்; நசுக்குவார்கள். இரக்கம் என்ற ஒன்று இல்லாதவரைக் கம்பன் அரக்கர்கள் என்று கூறுவது போல இவர்கள் அரக்கர்கள்; அசுரர்கள்.

ஆருயிர் கட்கெல்லாம் அன்பு செய ஆவலுடையவன் தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்பவன். உலகு இன்புறக் கண்டு தான் இன்புறுபவன், இலக்கிய மனிதனுவான். இலக்கியம் காட்டும் நெறி அருள் நெறி; அன்பு நெறி; அறநெறி.

மனிதனின் வாழ்க்கைத் தரம் உயர வேண்டும் என்கின்றோம். இதற்காக மூன்று ஐந்தாண்டுத் திட்டங்கள் வகுத்து நிறை வேற்றியுள்ளோம். உற்பத்தியைப் பெருக்கிக் கொண்டு போகிறோம். மக்களின் பொருளாதார நிலை உயர்ந்து கொண்டு போகிறது. உண்மை. ஆனுல் வாழ்க்கைத் தரம் உயர்வது என்பதற்கு இதுதான் பொருளா? பதுக்கலிலும், கள்ளச்சந்தையிலும், கொள்ளை லாபத்திலும், லஞ்சத் திலும் பொருள் சேர்த்து உடம்புக்கு வேண்டிய வசதிகளைப் பெருக்குவது தான் வாழ்க்கைத்தரம் உயர்வதா? உள்ளம் விரிந்து, அன்பு நிறைந்து அறம் பழுத்துச் சான்ருேருக வாழ்வது தானே உண்மை வாழ்க்கை.

நாளிதழ்களைப் பிரித்தால் நாம் பார்ப்பது என்ன? மந்திரிகள் மீது லஞ்சப் புகார்கள், கோடி கோடியாக கணக்குக்கு வராத பணங்கள், கள்ளக் கடத்தல், அரிசி கிடைக்காமல் மக்கள் படும் அவதி, வரிசையில் நூற்றுக்கணக்கான பெண்கள் ஒருபடி அரிசிக்குப் பகல் முழுவதும் நிற்பது, மயக்கம் போட்டு விழுவது, அங்கேயே பிரச விப்பது, சட்டசபைக்குள் புகுந்து மாணவர்கள் ரகளை செய்வது, அவர்கள் அட்டகாசம் தாங்காது கல்லூரிகள் மூடப்படுவது, மத்திய மந்திரி சபையிலிருந்து பல மந்திரி சபைகள் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள், மிகவும் படித்த மாநிலத்தில் ஐந்தாண்டுக்கு மூன்று மந்திரி சபை கவிழ்ந்த விந்தை இவ்வளவும் எதைக்காட்டு

கின்றன. நேருஜி மறைந்த மூன்று மாதங்களுக்குள் இவ்வளவு அலங்கோலமா எனச் சாதாரண மனிதன் கேட்பதில் என்ன ஆச்சரியம்.

'பல்குழுவும், பாழ் செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும், கொல் குறும்பும் இல்லது நாடு' என்ருன் வள்ளுவன். நம் நாடு வள்ளுவன் வர்ணித்த நாடாக இருக்கின்றதா? "பாருக்குள்ளே நல்ல நாடு நம் பாரதநாடு" "ஒப்பிலாத சமுதாயம் இது உலகத்திற்கு ஒரு புதுமை" என்று பாடிப் பரவசமாளுனே பாரதி அது இன்று உண்மைதானு? உலகில் மிகப் பெரிய ஜனநாயகம் என மேலே நாட்டார் நம்மைப் புகழ்கின்ருர்கள். ஜனநாயக ஆட்சி நடப்பது உண்மை. ஆனுல் வாழ்க்கையில் ஜனநாயகம் பிரதிபலிக்கின்றதா? நாட்டுப்பற்று இருந்தால் முன்பு கூறிய சூழல்கள் நாட்டில் நாளுக்கு நாள் வளர்ந்து வருமா. புத்தரும், மகாவீரரும், ஆசாரிய மூர்த்திகளும், நாயன்மார்களும் ஆழ்வார்களும் காந்தியும் தோன்றிய நாட்டிலா இன்றைக்கு இயந்திர மனிதர்கள் சமுதாயத்தை ஆட்டிப்படைப்பது.

எத்தனை கோவில் திருப்பணிகள் நடைபெறுகின்றன? எவ்வளவு இரகசிய மாநாடுகள், சமயச் சொற்பொழிவுகள் நடைபெறுகின்றன; ஆனுல் பயன் என்ன?

நாடாகொன்ருே காடா கொன்ருே
அவலாகொன்ருே மிசையா கொன்ருே
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லே வாழியநிலனே

என்ற புறப்பாட்டுப்படி சான்ருேர்பலர் வாழ்வது தானே நல்ல நாடு; நல்ல ஊர். அஃதின்றேல் ஒன்றை ஒன்று அடித்து உண்ணும் வன விலங்குகள் வாழும் காடாக அன்ருே ஆகிவிடும்.

ஆருயிர்கட்கெல்லாம் அன்பு செய்ய வேண்டுமென்ருர் வள்ளலார். வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினுர். ஓரறிவு உயிரான ஒரு முல்லைக் கொடி படும் துன்பங்கண்டு பொருது தன் தேரை அதனருகில் நிறுத்திவிட்டு நடந்து சென்ருன் பாரி. தன் கன்றை இழந்து கண்ணீர் வடித்த தாய்ப் பசுவின் வேதனையைக் காணப் பொருத சோழன் தன் மகனைத் தேர்க்காலில் இட்டுத் தானும் அதன் வேதனையை அனுபவித்தான். இதெல்லாம் இலக்கியம் காட்டும் உண்மை. இலக்கிய மனிதன் வாழ்ந்த வாழ்க்கை. ஆனுல் இயந்திர மனிதன் இவைகளை எரிக்க வேண்டும் என் கிருன். இம்மாதிரி இலக்கியங்கள் நாட்டின் சீர்கேட்டிற்குக் காரணமென்கின்ருன். இயந்திர மனிதனுக்கு வினையிலும், விதியிலும், மறுபிறப்பிலும், சுவர்க்க நரகங் களிலும் நம்பிக்கை இல்லை. அவனுக்கு வேண்டியதெல்லாம் பணம், பதவி, பட்டம்! நாட்டில் இவர்கள் வளர்ந்து வருகின்றனர். சாதாரண மக்களும் இவர்களைப் போற்றிப் புகழ்வது அதிகமாகிவிட்டது. ஐம்பதினுயிரம் ரூபாய் செலவு செய்ய முடியாத யாரும் எவ்வளவு ஏனைய தகுதி பெற்றிருந்தாலும் சட்டசபைத் தேர்தலுக்கு நிற்க முடியாது. நகரசபை அங்கத்தினராக 10 ஆயிரமாவது செலவு செய்ய வேண்டும். பிறப்புரிமையில் வாக்குரிமையை மனங்கூசாது விற்கத் தொடங்கி விட்டனர் பெரும்பாலான மக்கள். நேர்மையென்றும், நீதியென்றும், அகிம்சை யென்றும், சத்தியமென்றும் பேசாதீர்கள் வாக்குக் கிடையாது. எப்படியாவது வெற்றிபெற வேண்டும் என்று உபதேசிக்கப்படுகின்றது தொண்டர்களுக்கு.

ஆனல் நாம் செய்ய வேண்டியதுதான் என்ன? அலக்சிஸ்காரல் என்பவர் எழுதியுள்ள 'தெரிந்து கொள்ளாத மனிதன்' (Man the unknown by Alexis Caroll) என்ற புத்தகத்தில் புதிய மனிதனை உருவாக்குதல் என்ற அத்தியாயத்தைப் படிக்கும் படிக் கேட்டுக் கொள்கிறேன். நம்மில் ஒரு சிலராவது தங்கள் வாழ்க்கையை ஒரு இலட்சியத்திற்காகத் தியாகம் செய்ய முன்வர வேண்டும். அவர்கள் தாங்கள் வாழ்ந்து காட்டிய வழியை மற்றவர்களும் வாழுமாறு இடைவிடாது முயற்சி செய்ய வேண்டும். பிறரைக் கூறுவதில் பயனில்லை. இலக்கியத்தில் காணும் அறநெறியும் வாழ்க்கையில் மிளிர இடைவிடாத முயற்சி தேவை. குற்றத்தைக் குற்றமென்று கூறும் துணிச்சல் நமக்கு வேண்டும். நமக்கு எதற்கு இந்தத் தொல்லை என்று ஒதுங்கி நிற்பவர் சமூகத் துரோகிகள். உண்மைச் சமயத் தலைவர்களும், சமய வாழ்வு வாழ்பவர்களும் இலக்கியத்தில் பூரண நம்பிக்கை உள்ளவர்களும், நல்லாசிரியர்களும் இந்த இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட வேண்டும். வீட்டிலும் பள்ளியிலும் பிள்ளைகளைச் சான்றோராக்கும் பணிதான் உடலை வளர்க்கும் பணியினும் சிறந்தது. இப்பெரும் பணியில் நம் இலக்கிய மன்றம் முழு மூச்சுடன் ஈடுபடுமாக.



